## நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | திருவரங்கன் உலா 1-வது பாகம் |
| ஆசிரியர் | : | ஸ்ரீவேணுகோபாலன் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | வரலாற்றுப் புதினம் |
| பதிப்பு ஆண்டு | : | முதல் பதிப்பு - செப்டம்பர் 2002<br>இரண்டாம் பதிப்பு - ஜூலை 2004 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | : | 11.6 கி.கி. |
| நூலின் அளவு | : | கிரௌன் சைஸ் (12 ½ x 18 ½ செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | : | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 350 பக்கங்கள் |
| நூலின் விலை | : | ரூ.100/- |
| அச்சிட்டோர் | : | இளங்கோவன் பிரிண்டர்ஸ், சென்னை - 4. |






## கதை தோன்றிய கதை

பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் கன்னிமாரா நூலகத்தில் சரித்திரப் பிரிவில் சில புத்தகங்களைத் தேடிக் கொண்டிருந்தேன். அப்போது டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் எழுதிய "South India and her Mohammadan Invaders" என்ற புத்தகத்தைப் பார்க்க நேரிட்டது. எதேச்சையாகப் புத்தகத்தைத் திரும்பினேன்.

"The Sack of Srirangam" (திருவரங்கக் கொள்ளை) என்ற தலைப்பு என் கண்ணில் பட்டது. கவனம் இழுபடவே அதை விறுவிறு என்று படிக்க ஆரம்பித்தேன் டில்லி சுல்தானியர்களின் படையெடுப்பு களும், திருவரங்க நகரம் பட்ட பாடும், திருவரங்கனின் விக்கிரகத்திற்கு ஏற்பட்ட தொல்லைகளும் அதில் சுருக்கமாக விவரிக்கப்பட்டிருந்தன.

என் மனம் அதில் லயித்து விட்டது. அந்தக் கணத்திலேயே 'திருவரங்கன் உலா' என்ற தலைப்பும், ஒரு பெரும் தொடர்கதைக்கான கருப்பொருளும் மனதில் உதித்துவிட்டது. இது போன்ற கணநேரக் கற்பனைப் பிறப்பு எனக்கு அபூர்வமாக நேர்வதுண்டு.

சரித்திரத்தில் எனக்கு ஆர்வம் இருந்ததால், என்றைக்காவது ஒரு நல்ல சரித்திரக் கதையை எழுத வேண்டும் என்று அந்த நாட்களில் நினைத்திருந்தேன். அப்படி எழுதும் கதை, பொதுவாக எழுதப்படும் சரித்திரக் கதைகளிலிருந்து பெரும் அளவு வித்தியாசப் பட்டிருக்க வேண்டும் என்று நினைத்திருந்தேன். அந்தக் கதையில் சாதாரண ஜனங்களுக்கு நிறையப் பங்கு இருக்க வேண்டும் என்றும் நினைத்திருந்தேன். இந்த இரண்டு விருப்பங்களுக்கும் ஓரளவு ஒத்தது போல் எனக்குத் திருவரங்கத்துப் பெருமாளே ஒரு கதைப் பொருளாகக் கிடைத்தது மிகவும் மகிழ்ச்சியை அளித்தது.

கரு கிடைத்த நாள் முதலாய், பழைய புத்தகங்களையும், புராதனக் கிரந்தங்களையும், ஏட்டுச் சுவடிகளையும், கர்ணபரம்பரைக் கதைகளையும், கோவில் சாசனங்களையும், செப்புப் பட்டயங்களையும், ஆய்ந்து எடுத்துக் கதைக்கான குறிப்புகளைச் சேகரிக்க வேண்டி வந்தது.

இந்த ஆராய்ச்சிகளைப் பதினெட்டு ஆண்டுகள் செய்தேன். இடையறாது தொடர்ச்சியாகச் செய்து வந்தேன் என்று சொல்வதற்கில்லை. எனக்கு நேரம் கிடைக்கும் போதும், வாய்ப்பு கிடைக்கும் போதும் வெவ்வேறு இடங்களில் புத்தகங்களையும், குறிப்பு களையும், ஆட்களையும் தேடி அலைந்தேன். விஷயம் தெரிந்த பல பெரியவர்களையும் சந்தித்துப் பேசினேன். பல மகான்களிடம் விளக்கங்கள் கேட்டுக் கொண்டேன். பிரதிவாதி பயங்கரம் திரு. அண்ணங்கராசாரியார் அவர்களும், வேளுக்குடி வரதாச்சாரியார் அவர்களும் முக்கியமானவர்கள். பல இடங்களுக்கு நேரிலேயே சென்று, கதை விளைந்த பூமிகளைத் தரிசித்துவிட்டு வந்தேன்.

இவ்வளவும் செய்த பிறகு, என் மனதில் ஒரு நெடுங்கதைக்கான குறிப்புகள் கிட்டத்தட்ட மனப்பாட மாகவே விழுந்து விட்டன. அப்படி ஒரு பக்குவம் வந்த பிறகு, தினமணி கதிரில் இதை 1976-இல் தொடர்ச்சியாக எழுத ஆரம்பித்தேன். ஒரு ஆண்டு காலமாக இந்தத் தொடரை எழுதி வந்தேன். வாசகர்களிடையே இதைக் குறித்து நல்ல வரவேற்பு இருந்தது. சொல்லொணா கீர்த்தியும் பெருமையும் படைத்த ஒரு பெருமானான திருவரங்கரை எனது சிறிய எழுத்துக்களுக்குள் உலவ விட்டு, அந்த உலாவையே ஒரு பக்திப் பெருக்கோடு நான் ரசிக்க முனைந்திருக்கிறேன். எனது ஆற்றல் சிறிது. அவரது பெருமையோ பெரிது. எனினும் அவர் தம் கருணையினால் என் எழுத்துக்களுக்குள்ளே தம்மை இலக்காக்கி வைத்துக் கொண்டார் என்பதே எனக்கு மன நிறைவையும் பெருமையையும் தருகிறது.

திருவரங்கன் வாழ்க!

# தொடர் ஆரம்பிக்கும் முன் எழுதிய முன்னுரை

"திருவரங்கன் உலா" என்ற இந்த வரலாற்றுத் தொடரை ஆரம்பிக்கிறேன், பதினான்காம் நூற்றாண்டில் நிகழ்ந்த அற்புதமான சம்பவங்களை ஆதாரமாகக் கொண்டது இந்தக் கதை! இதில் நடக்கும் மயிர்க் கூச்செரியும் நிகழ்ச்சிகளை முதன் முதலில் அறிய நேர்ந்தபோது நான் ஆச்சரியப்பட்டிருக்கிறேன், ஒரு சமுதாயம் அந்த நாளில் தான் கொண்ட ஒரு நம்பிக்கைக்காக எவ்வளவு தூரம் போராடியது என்று அறியும் போது மனத்தில் பூரிப்பையும் பெருமிதத்தையும் அடைந்து இருக்கிறேன்,

பெருமிதம் என்று கூறியதற்குக் காரணம் உண்டு, மேனாட்டுத் திரைப்படங்களை நாம் பலமுறை பார்த்திருப்போம், அவைகளில் ஒரு கொடியைக் காப்பதற்காகவோ, அல்லது ஒரு பாலத்தைக் காப்பதற்காகவோ வீரர்களும் சாதாரண மக்களும் ஒரு அசகாயப் போராட்டம் நடத்துவதைப் பார்த்து இருப்போம், இது போன்று வரலாற்று ஆதாரம் கொண்ட நிகழ்ச்சிகள் நம் தென்னாட்டுச் சரித்திரத்தில் இருந்ததில்லையா என்று அங்கலாய்த்திருப்போம், நம் வரலாறுகளிலும் அம்மாதிரி நிகழ்ச்சிகள் உள்ளன என்பதைக் காண்பிக்கவே இந்தத் தொடர்கதையை எழுத முனைந்திருக்கிறேன்,

வரலாற்றுப் பிரியர்களுக்கு ஒரு வார்த்தை! நமது பண்டைய வரலாறுகள் யாவும் பல பகுதிகளில் இன்னும் அறுதியிட்டுக் கூறப்படாத நிலையில் இருக்கின்றன, வரலாற்று ஆசிரியர்களிடையே எவ்வளவோ விஷயங்களில் கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன, இவை காரணமாக நானாக அனுமானித்துள்ள பல கருத்துக்களை இந்தத் தொடரில் பல இடங்களில் உபயோகித்து இருக்கிறேன், வரலாற்றுப் பிரியர்களின் கருத்துக்களுக்கு இவை மாறாக இருந்தால் அவர்கள் என்னை மன்னிக்க வேண்டுகிறேன்.

வைணவ அறிஞர்களுக்கு ஒரு வார்த்தை! வைணவ நூல்கள் பலவற்றை இந்தக் கதை எழுதுவதற்காகத் துணை கொண்டு இருக்கிறேன். அந்த நூல்களிலும் ஒன்றுக்கொன்று முரண்பாடுகள் பல இருக்கின்றன. ஒரே நூலிலேயே பல முரண்பாடுகள் இருக்கின்றன, இவற்றின் ஊடே என் கதைக்கு வேண்டிய ஆதாரங்களைத் தேடுவதில் எவ்வளவோ கஷ்டங்கள் ஏற்பட்டு இருக்கின்றன. நான் கொண்டுள்ள கருத்துகள் வைணவ அறிஞர்களின் கருத்துகளுக்கு மாறாக இருந்தால் அவர்களும் என்னை மன்னித்தருளுமாறு வேண்டிக் கொள்கிறேன்.

இனி ஒரு சமுதாயத்தின் 'நம்பிக்கை'யே ஊர்வலம் வந்த இந்த வரலாற்றுத் தொடரைத் தொடங்குகிறேன்.



## திருவரங்கன் திரு உரு 

கதையின் கதாநாயகர் திருவரங்கர் இதோ வலது புறம் கம்பீரமாகக் காட்சி அளிக்கிறார். கதையில் வரும் அத்தனை சம்பவங்களுக்கும் ஆளானவர் இந்தத் திருவரங்கர் தான்.

இதே விக்கிரகம் தான் கதையில் வரும் அத்தனை இன்ப துன்பங்களை அனுபவித்தது.

அரங்கர் தமது அனுக்கிரகத்தால் தமது மேனியைப் பாதுகாத்துக் கொண்டு, நமக்கு அருளும் ஆசியும் வழங்கவே இங்கே காட்சி அளிக்கிறார்.

திருவரங்கன் அடிகள் போற்றி.

# சமர்ப்பணம்

சிறுவயதில் இருந்தே அளவிறந்த பாசத்தாலும் தியாகத்தாலும் என்னையும் என் தங்கை அம்புஜத்தையும் உருவாக்கியவர் என் தாயார்.

குழந்தைப் பருவத்தில் தந்தையை இழந்த எங்களை கண்ணின் மணிகளாகப் போஷித்து, கஷ்டங்கள், நஷ்டங்கள் எல்லாவற்றையும் தனியாக நின்று பொறுமையோடு சகித்து, எங்களைக் கண் கலங்கவிடாமல் காத்தவள் என் அருமைத் தாயார்.

அவளது பரிபூரண ஆசியாலும், அருளாலும்தான் நான் "திருவரங்கன் உலா" எழுத முடிந்தது.

உலா' எழுதிய காலத்தில் என்னை அவள் விசேஷ அக்கறையுடன் கவனித்ததை இன்னும கண்ணில் நீர் மல்க நினைக்கிறேன்.

இந்தத் "திருவரங்கன் உலா" புதினங்களை, ஆழ்ந்த அன்பும் பாசமும் நிறைந்த என் அருமைத் தாயாரின் பொன் அடிகளில் பக்தியுடனும், விநயத்துடனும், மறக்க முடியா நெஞ்சமுடனும் சமர்ப்பிக்கிறேன்.

-- ஸ்ரீவேணுகோபாலன்.



# டாக்டர் திருவேங்கடாச்சாரி

'திருவரங்கன் உலா'வைத் தொடராக எழுதிய போது ஒரு பாதியைத் தான் எழுதி முடித்தேன். மீதிப் பாதியை ஒரு வருடம் தாண்டித் தான் எழுத முடிந்தது.

இரண்டாவது பாதி தொடங்க நினைத்த போது, "மதுரா விஜயம்" என்ற பெயரில் கன்னிமாராவில் ஒரு புத்தகத்தைப் பார்க்க நேர்ந்தது.

புத்தகத்தின் மூலம் சமஸ்கிருதத்தில் இருந்தது. அதற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் அதில் இருந்தது. அதைப் படித்த போது, அதில் என் இரண்டாவது பாதிக் கதையின் சாராம்சமே இருந்தது.

ஒரே ஆர்வத்துடன் அதன் பிரதி ஒன்றை பெற்று விடுவது என்று அதன் ஆசிரியரைத் தேடிப் போனேன்.

பேராசிரியர் திருவேங்கடாச்சாரியை சந்தித்தேன். சாதாரண பேராசிரியர் அடைமொழி அவருக்குப் போதாது. 'மகா' அல்லது 'மெகா' பேராசிரியர் என்று சொல்ல வேண்டும்.

அவர் படிப்பின் விஸ்தாரமும், அறிவின் விஸ்தாரமும் கண்டு அசந்து போனேன். (கீழே அவர் பெற்றுள்ள பட்டங்கள் வரிசையைத் தந்துள்ளேன்.)

'திருவரங்கன் உலா'வை எழுதியவன் நான் என்று தெரிந்ததும்,

"உங்களுக்கு டாக்டர் பட்டம் கொடுக்க வேண்டும். அவ்வளவு ஆராய்ச்சி செய்திருக்கிறீர்கள். அதைப் படித்தேன்!" என்றார்.

எதிர்பாராத அந்தப் பாராட்டு என்னைத் திக்பிரமிக்க வைத்தது.

அவர் சாதாரணமானவர் அல்ல.

அமெரிக்காவிலும், இந்தியாவிலும் உள்ள பிரபல பல்கலைக்கழகங்களில் பேராசிரியர் பட்டம் பெற்ற அவர் என்னை 'டாக்டர்' பட்டத்திற்கு உரியவன் என்று கூறியதை பெரிய பேறாகக் கருதுகிறேன்.

'மதுரா விஜயம்' ( 14 ஆம் நூற்றாண்டு நூல் ) அவருக்கு எப்படிக் கிடைத்தது?

அந்தக் காவிய ஓலைச் சுவடி 1916-ல் திருவனந்தபுரம் 'வடமொழி மான்யுஸ்க்ரிப்ட்' அலுவலகத்தில் கிடைத்தது.

கிரந்த எழுத்தில் எழுதப்பட்டிருந்த அந்த ஏட்டை பூச்சி அரித்து 10 பக்கங்கள் (ஓலைகள்) மறைந்து விட்டன. எஞ்சியத்தில் நிறையப் பிழைகள். பல செய்யுள்கள் இல்லை.

இந்த ஏட்டைப் பிரதி எழுதி ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார் டாக்டர். திருவேங்கடாச்சாரி.

ஏடுகளை ஆய்ந்து மொழிபெயர்க்கும்படி ஊக்குவித்தவர் அப்போது திருவனந்தபுரம் சமஸ்தானம் திவானாக இருந்த ஸர். சி.பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள்.

மொழிபெயர்ப்பை அண்ணாமலை பல்கலைக் கழகத்தார் 1957-ல் வெளியிட்டார்கள்.

புத்தகத்தில் அவர் எழுதியிருக்கும் அறிமுகமும், முன்னுரையும் அவரது அபார சரித்திரப் புலமைக்கு ஒரு சான்று.

மற்றொரு விஷயம். காவிரிப்பூம்பட்டினம் குறித்து இவருக்கு அந்நாளிலேயே பெரும் அக்கறை.

கடல் கொண்ட புகார் பட்டிணத்தை அகழ் ஆராய்வு மூலம் தேட வேண்டும் என்று நினைத்தார்.

அமெரிக்க பல்கலைக்கழகம் ஒன்றை இதில் ஈடுபடச் செய்து ஆய்வுக்கான மான்யம் நல்கும் படியும் ஏற்பாடு செய்தார்.

'புகாரின்' அகழ்வு ஆராய்ச்சி அப்போதே இவர் மூலம் தொடங்கி விட்டது.

வெகு ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் அவரைப் பார்ப்பதற்காகச் சென்றேன்.

95 வயது ஆகியும் மேனியின் ஆகிருதி விடாமலும், அதே கூர்மை அறிவும், பரந்த ஞானமும் கொண்டவராகவும் பேசினார்.

அவரது பாதங்களை தொட்டு வணங்கினேன்.

நான் முன்பு எழுதிய 'மதுரா விஜயம்' என்ற தொடர் தற்போது, 'திருவரங்கன் உலா' பாகம் 3, பாகம் 4 ஆக வந்துள்ளதாகக் கூறி, அந்தப் புத்தகங்களை அவரிடம் சமர்ப்பித்தேன்.

"என்னைப் பற்றி எழுதியிருக்கிறாயா?" என்று கேட்டார்.

"இல்லை" என்று சொன்னபோது என் மனம் வருந்தியது. "அது பெரும் தவறு. அந்த தவற்றை நான் வெளியிட இருக்கும் முதல் இரு பாகங்களில் சரி செய்து விடுகிறேன்" என்று கூறினேன்.

அவர் நிகழ்த்திய எண்டோவ்மெண்ட் உரைகளில் கூட சரித்திர நவீனங்கள் குறித்து பேசும்போது 'திருவரங்கன் உலா' பற்றி பாராட்டிக் கூறி இருப்பதாக தெரிவித்தார்.

அவரது பெருந்தன்மை குறித்து, மனம் நெகிழ்ந்து போனேன்.

'திருவரங்கன் உலா' மூன்றாம், நான்காம் பாகங்களை படித்த பிறகு, "அருமையான நடையில் எழுதியிருக்கிறாய்! ரசித்தேன்!" என்று பாராட்டினார்.

இந்த மாமனிதரோடு தொடர்பு நீடித்து வருவதைப் பெருமையாக கருதுகிறேன்.

பிரபல வைணவ ஆசிரியர் ராமானுஜரைப் போல் இவர் 120 ஆண்டுகள் வாழ்ந்து சமய, சரித்திர, சமூகத் துறைகளில் அவர் பெற்றுள்ள புலமையை தம் அறிவுரைகள் மூலம் வழங்கிக் கொண்டே இருக்க வேண்டும் என்று திருவரங்கனையே நான் அடிபணிந்து வேண்டுகிறேன்.

— ஸ்ரீவேணுகோபாலன்

## பேராசிரியர் பெற்ற பட்டங்கள்

*M.A.(HIS.POL.,ECON.,), M.A. (EDN & PSYCHOLOGY) *M.Ed (Edl.Phil.),, Dip.Pub.Admn., Dip.Edn.Admn (WIS., USA) *M.A. Ph.D (Col. Univ. U.S.A.) *Co-ordinator, Director (as Principal A.C.C. Edn.) *Outstanding Educator Awardee (UGC- 2 terms) * P.G. Prof.Meston College of Edn. * Convener, Doctoral Committees * Former Editor College Journal of Edn. * Wattumul Scholar (Hawaii) * Fullbright Scholar (USA) * Fullbright Research Scholar * President's Scholar, Columbia University * Life nominee Kappa Delta Phi * Rotarian * Former Trustee, A.C. Colleges, V.O.C. College, Gandhigramam * Association with NCERT (15 years) * Convener, Draft of int. charter for pensioners at International Convention *, Research Counsellor * Former Chairman, Faculty of Education (Madurai Kamarajar University)

# கலைமாமணி திரு. விக்கிரமன்

திரு. விக்கிரமன் அவர்களை 50 ஆண்டுகளாக அறிவேன். 1949-ல் தொடங்கிய நட்பு தொடர்ந்து வந்திருக்கிறது. 'அமுதசுரபி' மாத இதழின் ஆசிரியராகத் திகழ்ந்து, தமிழகம் முழுதும் பிரபலத்துடன் விளங்கும். இவர் கவிதையில் தொடங்கி, கதை, கட்டுரை, நவீனம் என்று எல்லாத் துறையிலும் எழுதி வந்திருக்கிறார். சரித்திர நவீனங்கள் அவருக்குத் தனி முத்திரை, அதில் அவர் சாதனைகளும் பெரிது.

விக்கிரமன் ஒரு சரித்திர என்ஸைக்ளோபீடியா! சரித்திரச் செய்திகளை விரல் நுனியில் வைத்திருப்பார். ஏதாவது சரித்திர சந்தேகம் வந்து விட்டால் வரலாற்றுப் புத்தகத்தைப் புரட்டாமல் விக்கிரமனுடன் போனில் தொடர்பு கொண்டு கேட்பேன். உடனேயே எனக்கு வேண்டிய விவரங்களைக் கொடுத்து விடுவார்.

'திருவரங்கன் உலா' மீது விக்கிரமன் ஈடுபாடு கொண்டது எனக்குப் பெரும் மகிழ்ச்சி.

அவர் தந்த ஊக்கத்தின் பேரில் இந்த சரித்திர நவீனத்தை என் சொந்தப் பதிப்பகத்தின் வெளியீடாகக் கொண்டு வந்திருக்கிறேன்.

புத்தகம் வெளியிடுவதற்கான முறைக்ளைக் கூறி, வடிவமைப்பில் தொடங்கி முழுப் புத்தகம் உருவாகும் வரை அவர் செய்த உதவிகளை மறக்க முடியாது.

அவருக்கு என் ஆழ்மன நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# கலைமாமணி திரு. கோபுலு

'திருவரங்கன் உலா' தினமணி கதிரில் ஒரு தொடராக வெளி வந்த போது அதற்கு அழகும் ஜீவனும் ததும்ப ஓவியங்கள் வரைந்து கொடுத்தவர் கலைமாமணி கோபுலு அவர்கள்.

உண்மையில் அவரது ஓவியங்கள் என் சரித்திரக் கதைக்கு பெரு மதிப்பை கொடுத்துள்ளன.

ஓவியம் மட்டுமல்ல! கதை எழுதும் போது எனக்கு அவர் அவ்வப்போது சரித்திர நுணுக்கங்களையும் கூறி வருவார்.

இந்திய சரித்திரத்தில் ஆழ்ந்த புலமை கொண்டவர் அவர்.

அதனால் தான் 14 ஆம் நூற்றாண்டு சரித்திரப் பின்னணியை நினைவில் கொண்டு 'திருவரங்கன் உலா'வுக்கு அற்புத ஓவியங்கள் வரைந்து தந்தவர்.

அவர் வரைந்த அந்த படங்களை இந்தப் புத்தகத்தில் வெளியிட வேண்டும் என்று அவரிடம் அணுகிய போது மனமுவந்து அனுமதி தந்து உதவினார்.

அவர் படங்களால் 'திருவரங்கன் உலா' ஒன்றாம், இரண்டாம் பகுதிகளுக்கு அழகு மிகவும் கூடியிருக்கிறது. புத்தகத்தைத் திறந்து பார்த்தால் நீங்களே கூறுவீர்கள்.

நீண்ட வருடங்களாக என்னிடம் அன்பும் நட்பும் விளங்கும் ஓவிய மேதையான திரு. கோபுலுக்கு என் மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# இதோ புதுப் பதிப்பகம்!

வணக்கம்.

**'லக்ஷ்மிஸ்ரீ' பதிப்பகத்தை**
**மீண்டும் துவங்குகிறேன்.**
**இதன் இரண்டாவது வெளியீடாக**
**"திருவரங்கன் உலா" முதல் பாகம்**
**திருத்திய முதல் பதிப்பாக வருகிறது.**
**உங்களது ஆதரவை என்றும் விரும்பும்,**

**ஸ்ரீவேணுகோபாலன்.**

லக்ஷ்மிஸ்ரீ பதிப்பகம்,
848, 91-வது தெரு.
13-வது செக்டார்,
கே.கே. நகர்,
சென்னை 600 078.
Phone : 483 9543
E-mail: spushpa@vsnl.com

# 1

உருதிரோத்காரி முடிந்த ரக்தாக்ஷி ஆண்டு (கி.பி.1323) வைகாசிமாத மாலை நேரம். பகலெல்லாம் வெயில் தீய்ந்ததால் காவேரிக் கரையிலுள்ள தென்னை, கமுகு, பலா, கதலி வகைகள் யாவும் வாடிவதங்கிப் போயிருந்தன. மாலை நேரக் காற்று இடையே மிருதுவாக வீசும்போது மட்டும் அவை ஆடிச் சலசலத்துக் கொண்டிருந்தன.

கோடையாயிருந்தாலும் வட திருக்காவேரியில் (கொள்ளிடம்) நீர் ஓடிக் கொண்டிருந்தது. நதியின் பல பகுதிகள் ஆழமாக இருந்தன. எனினும் சில பகுதிகள் ஆழமில்லாமல் இருந்தன. ஆழமுள்ள பகுதி ஒன்றில் தலைக்கு மேல் ஒரு சுமையைத் தூக்கிக் கொண்டு ஒரு இளைஞன் அதில் நீர் படிந்துவிடக் கூடாதே என்ற ஒரே கவலையுடன் தத்தளித்துக் கொண்டிருந்தான்.

இரண்டு ஆழமான பகுதிகளைக் கடந்த பின்னர் மூன்றாவது பகுதியினுள் இறங்கியபோது அவனுக்கு ஒரு சங்கடம் ஏற்பட்டது. இதுவரை நீரின் ஆழங்கள் அவனது கழுத்து அளவே இருந்தன. இப்போது அவனையும் அவனது கையையும் மூழ்கடிக்கக் கூடிய அளவுக்கு ஆழம் வந்தபோது, மேலே தூக்கி வைத்துக் கொண்டிருக்கும் சுமையை எவ்வாறு தண்ணீர் படாமல் மறுகரைக்குச் சேர்ப்பது என்பது பிரச்னையாக இருந்தது. ஏதாவது பரிசலை அமர்த்தாமல் போனோமே என்று நினைத்தபோது, "பிள்ளாய்!" என்று ஒரு குரல் கேட்டது.

இளைஞனுக்குச் சிறிது மேற்கே தலையில் தமது உத்தரியத்தை முடியாகக் கட்டிக் கொண்டு ஒரு பெரியவர் ஆற்று நீரில் நின்று கொண்டிருந்தார். தண்ணீரில் தகதகக்கும் மாலை வெயிலில் அவர் நிற்பதை இளைஞனால் கவனிக்க முடியவில்லை.

"உன் சுமையை இப்படிக் கொடு! ஆழத்தைக் கடந்து நான் கரையில் வந்து தருகிறேன்" என்றார் அந்தப் பெரியவர்.

"அதெப்படி முடியும் பெரியவரே! சுமையில் ஈரம் சேரக் கூடாது என்று பார்க்கிறேன். ஆழம் என்னையே மூழ்கடிக்கும்போது, என் உயரமே உள்ள உங்களையும் மூழ்கடிக்காமல் போகுமா?" என்றான் இளைஞன்.

"நான் நீந்திப் போவேன்" என்றார் பெரியவர்.

"எனக்கும் நீச்சல் தெரியும்" என்றான் இளைஞன் சற்றுக் கோபமாக. "ஆனால் கைகளைத் தண்ணீருக்கும் மேல் தூக்கி நீந்தத் தெரியாது" என்று சொல்லி முகத்தை அலட்சியமாகத் திருப்பினான்.

"அது என்னால் முடியும் பிள்ளாய்!" என்றார் பெரியவர், சற்றும் சலனமில்லாத குரலில்.

இளைஞனுக்கு நம்பிக்கை இல்லை. என்றாலும் ஒரு வேடிக்கை பார்க்கலாம் என்ற நினைப்பில் சுமையைப் பெரியவரிடம் கொடுத்தான். பெரியவர் சுமையை ஒரு கையால் மேலே தூக்கியவாறு தண்ணீரில் ஆழ்ந்து மறு கையால் நீந்தத் தொடங்கினார். கால்களும் ஒரு கையும் தண்ணீருக்கு மேலே வராமல் மிக லாகவமாக நீந்தி மறுகரையை அடைந்தார். இளைஞன் வருவதற்குள் சுமையை ஒரு துவைக்கும் கல்மீது பத்திரமாக வைத்து விட்டு இளைஞனைப் பார்த்துத் திரும்பி, "உன் சுமையை நீதான் தூக்க வேண்டும்" என்று சொல்லி விறுவிறு என்று நடந்து போய்விட்டார்.

இளைஞனுக்கு எல்லாமே ஆச்சரியமாக இருந்தது. அவரிடம் அவ்வளவு திறமை இருக்கும் என்று அவன் நம்பவில்லை. நன்றி தெரிவிக்கும் முன் அவர் போய் விட்டாரே என்ற வருத்தமும் அவனுக்கு ஏற்பட்டது.



அவன் கரை சேரச் சிறிது நேரம் ஆகியது. ஏறியதும் இடுப்பு ஆடையைக் களைந்து நன்றாக பிழிந்தெடுத்துத் தோளின்மீது போட்டுக் கொண்டு, சுமையைப் பிரித்து உலர்ந்த ஆடைகளை வெளியே எடுத்து உடுத்திக் கொண்டான்.

பிறகு ஒரு கணம் கூட நிற்காமல் சுமையைத் தூக்கிக் கொண்டு அரங்கநாதன் பள்ளி கொண்டுள்ள திருவரங்கத்தை நோக்கி ஓடத் தொடங்கினான்.

அரங்க மாநகரின் முதல் மதிலை அடைந்ததும் ஓட்டத்தைச் சிறிது தளர்த்தி, மதில் வாயிலையும் அதன் பிரம்மாண்டமான கதவுகளையும் பரபரப்புடன் பார்த்தான். பிறகு கல்லறைப்படி முகட்டில் வாயில் காப்போன் நிற்பதைப் பார்த்து, "ஆபத்து, ஆபத்து, கதவை மூடுங்கள்!" என்று கத்திவிட்டு, வாயிலோன் கடகடவென்று சிரிப்பதையும் பொருட்படுத்தாது நகருக்குள் ஓடத் தொடங்கினான்.

போகிற வழியிலும் அவன் பேசாமல் போகவில்லை. வீதிகளில் கூட்டமாக ஜனங்கள் நிற்பதைக் கண்டான். நேராக அங்கு சென்று, "ஆபத்து! ஆபத்து! எல்லோரும் நகரைவிட்டு ஓடுங்கள்!" என்று கூவிவிட்டு, அவர்கள் திகைத்துப் பார்ப்பதையும் பொருட்படுத்தாமல் ஓடிக் கொண்டே இருந்தான்.

தேர் நிற்கும் அகலமான வீதி வந்ததும் அவன் கண்ணில் நீர் பெருகி எழுந்து பார்வையை மறைத்தது. கண்களைத் தன் ஓரக் கைகளால் துடைத்துக் கொண்டு வீதியிலுள்ள ஒவ்வொரு வீட்டையும் அகலக் கண் விரித்துப் பார்த்தவாறு விரைவாக நடந்தான். படிகள் இருமருங்கிலும் கல் யாழிகள் பதித்த ஒரு வீட்டை அடைந்ததும் ஆர்வமும் அழுகையும் பொங்கி எழ ஒரே எட்டில் படிகளைத் தாண்டி, "அம்மா!" என்று விண்ணும் மண்ணும் அதிர்வதுபோல் கூக்குரல் எழுப்பிக் கொண்டு உள்ளே ஓடினான்.

அப்போது தான் பெருமாள் சந்நிதியில் திருவிளக்கு ஏற்றிக் கொண்டிருந்த ஒரு வயதான அம்மாள், அந்தக் குரலைக் கேட்டு வியப்பும் அவநம்பிக்கையும் கலந்த் உணர்ச்சியோடு திரும்பிப் பார்த்தாள். மறுவிநாடி, "குலசேகரனா?" என்று அவள் குரல் எழுப்பவும், "ஆமாம் அம்மா!" என்று விடை அளித்தான் 'குலசேகரப் பெருமாள் பிள்ளான்' என்கிற அந்த இளைஞன். அப்படியே தாயாரின் முன்னிலையில் தாளும் தடக்கையுமாக விழுந்து, அவளது பாதங்களைப் பற்றிக் கொண்டு, "அம்மா! அம்மா!" என்று பலவாறாக அரற்றினான்.

அந்த மூதாட்டி அவன் முடியைப் பிடித்து எழுப்பி அவனை உச்சி முகர்ந்து, ஆரத் தழுவி, "குலசேகரா! என் குலசேகரா! என் அந்திமக் காலத்திலாவது வந்தாயே!" என்று பலவாறும் புலம்பி அவனது உடல்நலத்தைப் பற்றி வெகுவாக விசாரிக்கத் தொடங்கினாள்.

குலசேகரன் சட்டென்று தாயாரை நோக்கி, "அம்மா! நகருக்கு ஆபத்து! நாம் வெளியே புறப்பட வேண்டும். இதோ போய் ஊருக்கெல்லாம் அறிவித்துவிட்டு ஓடி வந்துவிடுகிறேன்!" என்று கூறி, விருட்டென்று வெளி நோக்கிப் பாய்ந்து ஓடினான்.

திருவிக்கிரமன் திருவீதியில் வழிநீளப் பந்தல்கள் போட்டு, மூலைக்கு மூலை பச்சைத் தோரணங்களைக் கட்டி, வாழைத் தாருகளையும், பாக்குக் குலைகளையும் கொத்துக் கொத்தாகத் தொங்கவிட்டு இருந்தார்கள். மாளிகைகளின் முன் வாசல்களில் பெரிய பெரிய மாக்கோலங்களை இட்டு நிரப்பி, வீதி முழுவதையுமே ஒரு சித்திர சாலையாக மாற்றி இருந்தார்கள். இவற்றைக் கண்ணுற்ற குலசேகரன், "ஓகோ! விழாக் கொண்டாடுகிறார்களா, விழா!" என்று ஏளனமாக மனதில் கூறிக் கொண்டு முன்னிலும் வேகமாக ஓடுவதற்கு முற்பட்டான்.



வீதி முனை ஒன்றில் பல பெரியவர்கள் கூடி இருப்பதைப் பார்த்து, "சுவாமிகாள்! இதென்ன கூத்து! நகருக்கு ஆபத்து நெருங்கி வரும்போது விழாக் கொண்டாடிக் கொண்டிருக்கிறீர்களே!" என்று கேட்டான்.

அதற்கு அவர்கள் சிரித்துக் கொண்டு, "இது அரங்கனது திருநகர். இங்கே தினமும் திருவிழாதான். அரங்கன் இருக்கும் ஊரில் அமங்கலத்திற்கு இடம் உண்டோ?" என்றார்கள்.

அதை அவன் பொறுக்க மாட்டாதவனாக, "சொன்னால் நீங்கள் கேட்க மாட்டீர்கள்! ஊரின் படைத் தலைவர் எங்கே? கோவில் சேனாபதி துரந்தரர் எங்கே? யாவரும் எங்கே இருக்கிறார்கள்?" என்று பரபரப்பாகக் கேட்டான்.

"கோவிலில் கூடி இருக்கிறார்கள்" என்றனர் அவர்கள்.

Released by Maran's Dog. Toronto, Canada

"ஆகா! என்ன ஜனங்கள்! என்ன நம்பிக்கை!" என்று கூறிக் கொண்டே கோவிலை நோக்கிக் குலசேகரன் துள்ளி ஓடினான்.

பிறகு நான்முகன் கோட்டை வாசலைக் கடந்து, கார்த்திகை வாசலையும் தாண்டிச் சென்று, ஆரிய பட்டாள் வாசலை அடைந்த போது கோவிலின் திருச்சுற்றுப் பகுதியில் இருந்து வாத்திய ஒலியும், அதைத் தொடர்ந்து மந்திர ஒலியும் அவன் செவிகளில் விழத் தொடங்கின. அந்தக் கணமே பெருமாள் இங்கேதான் எழுந்தருளி இருக்கிறார் என்று உணர்ந்த அவன் பிரகார வழியாக ஓடத் தொடங்கினான்.

திருப்பத்தில் அதே வேகத்தில் திரும்பும் போது எதிரே சட்டென்று எதிர்ப்பட்ட ஒரு கும்பலில் எதிர்பாராத விதமாக மோதிக் கொண்டான். "ஐயோ!" என்ற சத்தத்துக்கிடையே 'டம் டம்' என்று மிருதங்கம்

கீழே விழும் ஓசையும், 'கிளிங் கிளிங்' என்று சதங்கைகள் சிதறும் ஓசையும் ஒருசேர ஒலிப்பதைக் கேட்டுக் குலசேகரன் திடுக்கிட்டுப் பின்னால் திரும்பினான்.

அவன் கால்கள் நின்றன. கண்களும் நின்றன. மூச்சும் நின்றது.

அவனது எதிரே கயல்போல் கண் விழியுள்ள ஒரு பாவை நாணியவாறும், மருட்சி அடைந்தவாறும் திகைப்படைந்தவாறும் நின்றாள்.

## 2

நெற்றியில் குறு வியர்ப்பு அரும்ப, அலையில் அகப்பட்ட தாமரை மொட்டுக்களைப் போல் இரு சிறிய நெஞ்சங்களும் விம்மித் தடுமாற, அந்த இளம்பெண் தன் இரு கைகளையும் திருகியவாறு நின்று கொண்டிருந்தாள்.

அவள் மீது குலசேகரன் இட்ட பார்வை இட்டபடியாகவே இருந்தது.

அவன் வந்த வேகத்தினால் கீழே தள்ளப்பட்டு இருந்த ஒரு பெண்மணி அப்போது, "ரங்கா! ரங்கா!" என்று முணகியவாறு எழுந்து, குலசேகரனைக் கோபத்துடன் நோக்கி, "தம்பி! கோவில் பொங்கலை வாங்கிக் கொள்ள இவ்வளவு அவசரமா? ஓடு! ஓடு! பிரசாதம் தீர்ந்துவிடப் போகிறது" என்று ஏளனமாகக் கூறிவிட்டு, அந்த இளம் பெண்ணின் பக்கம் சென்று, "வாசந்திகா! உடம்பில் அடிபட்டதாம்மா?" என்று ஆதுரத்துடனும் வாஞ்சையுடனும் கேட்டாள்.

பெண்மணியின் ஏளன வார்த்தைகளைக் கேட்ட குலசேகரனுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது.



"கட்டளைப் பிரசாதமும் கோவில் விநியோகமும் எனக்கு வேண்டாம் அம்மணி! நீங்களே வயிறார அருந்துங்கள்! நான் வந்திருப்பது அவசர காரியம்" என்று படபடப்பாகக் கூறி அவளை விறைத்துப் பார்த்தான். அதற்கு மறுமொழியாக அந்தப் பெண்மணி மேலும் ஏதோ கோபமாகச் சொல்லப் போக, அந்த இளம் பெண் உடனே வழிமறித்து, "அம்மா! அவரைக் கடியாதே" என்று சொல்லி அம்மாளை ஆசுவாசப் படுத்தினாள்.

பெண்ணோடு வந்த ஆடவர்கள் மத்தளத்தையும், புல்லாங்குழலையும் எடுத்துத் தூசி தட்டத் தொடங்கவே, குலசேகரன் அதற்கு மேல் அரைக் கணமும் அங்கே நிற்க விரும்பாமல் பிரகாரத்துள் வேகமாய் ஓடத் தலைப்பட்டான். வராகப் பெருமான் சந்நிதி முன்பு அவனது பார்வை திரும்பிய போது அங்குள்ள கூட்டமும் கோலாகலக் காட்சியும் கண்ணில் விழவே பல கணங்கள் அவன் திடுக்குற்று நின்றான்.

சந்நிதி முன் உள்ள அணிமா மண்டபத்தில் எள் போட்டால் விழாது என்பது போல திருக்கூட்டம் கூடி இருந்தது. தீவர்த்திகள் நெய்யில் எரிந்து குளிர்ச்சியான ஒளியே எங்கும் பாய்ச்சிக் கொண்டிருந்தன.

பச்சை இலைத் தோரணங்களைக் கட்டி, இடையே தொங்கும் பூவடங்களால் அலங்கரித்த மேடை மீது, சீரிய சிங்கம் அமர்ந்தாற்போல் திருவரங்கன் கம்பீரமாக கொலுவீற்றிருந்தார். (திருவரங்கனது உற்சவ மூர்த்தியை வாகனத்தில் எழுந்தருள வைத்து மேடை மீது கொலு ஏற்றிருந்தார்கள்.) அவரது இரு பக்கலிலும் நாச்சிமார்கள் வீற்றிருந்தார்கள். அரங்கனது இரு மருங்கிலும் இரு பக்தர்கள் சம நேரத்தில் சம வேகத்தில் வெண்சாமரம் வீசிக் கொண்டிருந்தார்கள்.

இரு வரிசையிட்டு ஊர்ப் பெரியவர்கள் யாவரும் கூடியிருந்தார்கள். மண்டபத்தின் ஓரங்களிலும், அதை

அடுத்த அணியரங்கன் திருமுற்றத்திலும் பெண்டிரும், பிள்ளைகளும் குழுமியிருந்தார்கள்.

பெரியவர்கள் 'திருப்பல்லாண்டு' சேவித்து (பாடிக்) கொண்டிருக்கும் நேரத்தில், குலசேகரன் விருட்டென்று மண்டபத்தில் ஏறி, இரு வரிசைகளுக்கும் நடுவே ஆவேசமாக நின்றான். கூடியிருப்பவரைச் சற்று கோபத்துடன் பார்த்து, "சுவாமிகாள்!" என்று உரத்த குரலில் கூவினான்.

மறுகணம் யாவரும் திடுக்கிட்டு அவனை நோக்கவே, "இவன் என்ன பிச்சனோ?" (பைத்தியம்) என்று நினைத்த இரு பெரியவர்கள் எழுந்து அவன் முன்னால் வந்தார்கள்.

"சுவாமிகாள்! திருவோலக்கத்தைக் (சபை) கலையுங்கள்! வீட்டுக்குப் போங்கள்! நகரைத் துறந்து விட்டு நாட்டுக்கு ஓடுங்கள்!" என்று மண்டபமே அதிரும்படி கத்தினான் குலசேகரன்.

எழுந்த பெரியவர்களில் ஒருவர் அந்தக் கோவிலின் சேனாபதி துரந்தரர். (தலைமைப் பொறுப்பு அதிகாரி) 'திருவரங்க ராஜா வாதூல தேசிகர்' என்பது அவர் திருப்பெயர். அவர் தனது நீண்ட கையை நீட்டி அவனை அமர்த்தி, "பிள்ளாய், நீ யாரப்பா?" என்று கேட்டார்.

"திருவிக்கிரமன் வீதியைச் சேர்ந்தவன் நான். வில்லிதாசரின் மகன் குலசேகரப் பெருமாள் பிள்ளான்!" என்றான் அந்த இளைஞன்.

"ஓகோ! வில்லிதாசரின் மகனா? நீ திருக்காஞ்சியில் அல்லவா இருப்பதாகச் சொன்னார்கள். இங்கே எப்போது வந்தாய்? ஏன் உனக்கு இவ்வளவு பதற்றம்?" என்று சரமாரியாகக் கேட்டார் வாதூல தேசிகர்.



இதற்குள் திருப்பல்லாண்டு முடிந்து விடவே கூடியிருந்த பெரியவர்கள் எல்லோரும் குலசேகரனை ஒரே விழியாய்ப் பார்த்தார்கள்.

"சுவாமி, உங்களுக்குத் தெரியாதா? டில்லி அரசரின் படைகள் தெற்கு நோக்கி வருகின்றனவே!" என்று முழங்கினான் குலசேகரன்.

"தெரியுமப்பா!" என்றார் மற்றொரு பெரியவர்.

"தெரிந்துமா திருவோலக்கத்தில் கூடி இருக்கிறீர்கள்?" என்றான் குலசேகரன்.

அப்போது வாதூல தேசிகர் குறுக்கிட்டார்.

"டில்லிப் படைகள் தொண்டை மண்டலம் முழுதும் பரவிவிட்டதை ஏற்கெனவே நாங்கள் கேள்விப்பட்டு விட்டோம் பிள்ளாய்! அதன் பலாபலன்களை உணர்ந்திருக்கிறோம். இதற்காகப் பெருமாள் முன்னிலையில் திருவுள்ளச் சீட்டு போட்டுப் பார்த்தோம். உற்சவத்தை நடத்திக் கொண்டு இந்த ஊரிலேயே தங்கியிருக்கவா? அல்லது பெருமாளையும் அழைத்துக் கொண்டு தென் திசைக்குச் சென்றுவிடவா என்று சீட்டில் கேட்டிருந்தோம்!"

"சீட்டில் என்ன மறுமொழி வந்தது?" என்றான் குலசேகரன்.

"இங்கேயே இருந்து உற்சவத்தை நடத்திச் செல்லுங்கள் என்று விடை வந்தது. உற்சவத்தை நடத்துகிறோம்" என்றார் வாதூல தேசிகர்.

குலசேகரன் கடகடவென்று சிரித்தான். பிறகு தீவிரமான பார்வையுடன் வாதூலரை நோக்கி, "சுவாமி! எதற்குத்தான் திருவுள்ளச் சீட்டு போடுவது அல்லது கூடாது என்பது தெரியாதா? இந்தச் சிறிய பிள்ளை

சொல்லித்தான் தெரிய வேண்டுமா? கண்ணுக்கு நிதர்சனமாகி விட்ட ஒரு விஷயத்தை அதை அறியாதவர் போல், பெருமாளிடம் கேட்பது என்பது முறையல்ல; அறிவுக்கு உகந்ததும் ஆகாது. இப்போது நான் விஷயத்தைக் கூறினேன். டில்லி சேனைகள் தற்சமயம் எங்கு இருக்கின்றன என்று தெரியுமா?" என்று அழுத்தத்துடன் கேட்டான் குலசேகரன்.

"உனக்குத் தெரியுமா?" என்று மறுகேள்வியாகக் கேட்டார் வாதூலர்.

"தெரியும். நான் காஞ்சியில் இருந்து வருகிறேன். வரும் வழியில் சமயபுரத்தில் டில்லிப் படைகள் தண்டு இறங்கி இருப்பதைக் கண்ணால் பார்த்துவிட்டு வந்திருக்கிறேன்" என்று பரபரக்க கூறினான் குலசேகரன்.

"ஆ!" என்று கூறிக் கொண்டு திருவோலக்கமே எழுந்தது. பின்னர் கசமுச என்று சத்தங்கள் எங்கும் எழுந்துவிடவே, கூடி இருந்த ஆயிரக்கணக்கான ஜனங்களிடையே பரபரப்பும் குழப்பமும் தோன்ற ஆரம்பித்தன.

அப்போது கூட்டத்தின் முன்னணியில் இருந்த ஒரு பெரியவர், தம் ஊன்று கோலை உயரத் தூக்கி, "அமைதியாய் இருங்கள்" என்று கூவி, எல்லோர் வாயையும் அடைத்த பிறகு, குலசேகரனை நோக்கி மெள்ள நடந்து வந்தார். கூர்மையான பார்வையில் அறிவும், திருமுக மண்டலத்தில் தெள்ளிய காந்தியும் வீச, சீரான குரலில் குலசேகரனைப் பார்த்துக் கேட்டார்.

"பிள்ளாய்! வில்லிதாசரின் மகன்தானே நீ. நேரில் பார்த்ததைத்தானே இங்கே சொல்கிறாய்?"

கேட்டவர் திருப்பெயர் 'பிள்ளை உலகாசிரியர்' என்பது. (வைணவ சமயத்தில் தோன்றிய பிரசித்தி பெற்ற ஆசாரியர்களில் இவரும் ஒருவர். பிள்ளை லோகாச்சாரியார் என்றும் அழைப்பார்கள். இவர் அருளிய நூல்களும் பிரசித்தி பெற்றவை. அவை இன்றும் நமக்குக்கிடைக்கப் பெறுபவை.)



குலசேகரன் அவரைக் கண்டதும் கீழே விழுந்து, பாதங்களைத் தொட்டு வணங்கி, இரு கைகளையும் கூப்பி எழுந்தான்.

"சுவாமி! சமயபுரத்தில் நேரில் கண்டதைத்தான் இங்கே சொல்கிறேன். படைகளுக்கு நம் நகரமே குறி என்பதையும் அறிந்தேன்" என்றான் குலசேகரன்.

உடனே பிள்ளை உலகாசிரியர் சற்றே திரும்பி, "தூப்புல் சுவாமி!" என்று அழைக்க, சோதி மயமான பேரொளி நடந்து வருவது போல் பெரியவர் ஒருவர் நடந்துவந்தார்.

மெல்லிய உடலும், குளிர்ந்த கண்களும் படைத்த அவர், உலகாசிரியரின் அருகில் வந்து நிற்கவும், குலசேகரன் உடனே, "சுவாமி!" என்று கூறி அவரது பாதங்களிலும் வீழ்ந்து வணங்கி எழுந்தான்.

அந்தப் பெரியவரின் திருநாமம் 'வேங்கடநாதன்' என்பது. (வைணவ சமயத்தில் பிரசித்தி வாய்ந்த ஆசாரியரான வேதாந்த தேசிகன் என்பார் இவர். தமிழிலும் பிராகிருதத்திலும் வடமொழியிலும் இவர் இயற்றிய நூல்கள் நூற்றுக்கு மேல்! அவை இன்றும் நமக்குக் கிடைக்கப் பெறுபவை!)

வந்த பெரியவர் கோவில் மணி போன்ற கணீர் குரலில் பேசினார்.

"சுவாமி! எல்லா விஷயங்களையும் கேட்கப் பெற்றேன். குலசேகரப் பிள்ளான் கூறியது போல இத்தருணத்தில் திருவுள்ளச் சீட்டின்படி நடப்பது எனக்கு உசிதமாகத் தோன்றவில்லை" என்றார்.

"அப்போது செய்ய வேண்டுவது என்ன?" என்று உலகாசிரியர் கேட்டார்.

"தென் மதுரையிலுள்ள பாண்டிய அரசர்க்கு ஆட்பட்டவர்கள் நாம். இப்போது நம்மிடையே அரசர் இல்லை. ஆகவே சுக்கான் இல்லாத தோணி போல் நாம் தலை சுற்றித் தவிக்கிறோம். பட்டத்திற்காக எழுந்துள்ள குடும்பப் பூசலில் பாண்டிய வமிசமே அழிந்து கொண்டிருக்கிறது. இந்த அநாதரவான வேளையில், நம்மை நாமே காத்துக் கொள்ள கடமைப்பட்டு இருக்கிறோம்!" என்றார் வாதூல தேசிகர்.

"அதற்கு வழி என்ன?" என்றார் உலகாசிரியர்.

"சுவாமி! கோவிலின் மதில்கள்தான் நமது கோட்டைகள். பிரகாரந்தான் நம் படை வீடுகள். நாம்தான் படை வீரர்கள். நகரையும் கோவிலையும் காப்பது நமது கடன்தான்!" என்றார் வாதூலர்.

குலசேகரன் அப்போது கொல்லென்று சிரித்தான்.

"சுவாமி! அடியேனைப் பொறுத்தருள வேண்டும். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நடந்ததை நினைவு கூறுங்கள். இதுபோல் அப்போதும் டில்லி பாதுஷாவின் படை நம் மீது படையெடுத்து வந்தது. நமது பலத்தை மிகையாக நம்பி மதில் கதவுகளைச் சாத்தி தைரியமாக உள்ளே இருந்தோம். ஆனால் நடந்தது என்ன? டில்லிப் படைகள் நம் பாதுகாப்பை உடைத்து நகருக்குள் புகுந்தன. நம்மைச் சூறையாடின. நமது பொருள்கள் யாவும் பறி போயின. கோயில் பொருள்களும் பறிபோயின. எனது தந்தை உயிர் இழந்தது அந்தக் களேபரத்தில் தான். ஆகவே, வரும் ஆவேசப் படைகள் முன் நமது திறமையெல்லாம் வெறும் தூசு ஆகும்" என்றான்.

"அப்படியானால் வேறு என்ன செய்வது?" என்றார் வாதூலர்.



"நகரத்தை விட்டு யாவரும் வெளியே போக வேண்டும். எல்லோரும் தங்கள் தங்கள் பொருள்களை முடிந்தவரை அப்புறப்படுத்த வேண்டும். இல்லாவிடில் இலக்கான இடங்களில் அவைகளைக் குழி தோண்டிப் புதைக்க வேண்டும். இவைகளைத் தவிர வேறு எதுவும் செய்வதற்கில்லை" என்றான் குலசேகரன்.

பெரியவர்கள் யாவரும் திகைப்படைந்து யோசனையில் ஆழ்ந்துகிடப்பதைக் கண்ட குலசேகரன், "சுவாமிகாள் அவகாசம் அதிகம் இல்லை. உடனே உத்தரவு கொடுங்கள், கோவில் முரசுகளை அடித்து எல்லோருக்கும் விஷயத்தைத் தெரியப்படுத்துங்கள்" என்றான்.

சிறிது நேரத்தில் கோவில் திருவோலக்கம் கலைக்கப்பட்டது. கோவில் துரந்தரரின் கட்டளையின் பேரில், முரசு அடிப்போர்கள் நகரின் நாலா திசைகளையும் நோக்கி விரையத் தொடங்கினார்கள்.

தன் பணி தீர்ந்த பிறகு கோவிலைவிட்டு அதே அவசரத்துடன் குலசேகரன் வெளியேறினான். உடனே வீட்டுக்கு ஓட வேண்டும், தாயாரைக் கண் குளிரத் தரிசிக்க வேண்டும். அவளுடன் மனம் குளிரப் பேச வேண்டும் என்று நினைத்த அவன், வீதியில் நுழைந்து வேகமாக நடந்தான்.

திருவோலக்கம் கலைந்த ஜனங்கள் அப்போது தங்கள் வீடுகளுக்குப் பரபரத்து ஓடிக் கொண்டு இருந்தார்கள்.

மாடமாளிகை வீதியை அடைந்து அவன் விரைவாகச் சென்று கொண்டிருந்தபோது, தித்தா தித்தா என்ற மத்தள முத்தாய்ப்புக்கள் காதில் விழ, அதைத் தொடர்ந்து குழல் ஒலியும் இனிமையான குரல் ஒலியும் விழத் தொடங்கின.

உடனே மனத்தின் மூலையில் அந்தப் பெண்ணாக இருக்குமோ என்ற நினைவு ஊற்றுப் போல் எழுந்து அவன் மனம் முழுவதையும் ஆக்கிரமிக்கத் தொடங்கியது.

"நாடு எரியும்போது, கீதமா?" என்று வெகுண்ட அவன், சடக்கென்று தன் திசையை மாற்றி, இசை எழுந்த வீட்டை நோக்கி அவசரமாக நடந்தான்.

பூண் பிடித்த பெரிய நிலைக்கதவைத் திறந்தவுடன், உள்ளே தெரிந்த விசாலமான கூடத்தின் நடுவில், சந்திரிகையை உருக்கி வார்த்தாற்போல வாசந்திகா மட்டிலும் உட்கார்ந்திருந்தாள். அவளது ஒரு கையில் குழலும், காலுக்கடியில் மத்தளமும் சிக்கியிருந்தன. "ஓ!" என்று அவனைப் பார்த்துச் சொல்லிய அவள், குழலைத் தூக்கிக் கொண்டு எழுந்து, மருங்கு அசைய மெள்ள நடந்து வந்து, குழலின் நுனியால் செல்லமாகத் தன் அதரங்களைத் தட்டிக் கொண்டு, அவன் முன்னே நின்று, அவனை மேலும் கீழுமாக ஒரு ஒய்யாரப் பார்வை பார்த்தாள்.

பிறகு, "என்ன விஷயம்?" என்று குளிர்ந்த குரலில் கேட்டாள். அவள் தோற்றமே அந்தக் கேள்வியாக வடிந்திருப்பதுபோல் அவள் உடல் முழுதிலும் ஒரு அபிநயம் பரிணமித்தது.

# 3

**மி**ன்கொடி போல் வாசந்திகா வந்து அவன் எதிரே நிற்கிற அழகையும், கையிலுள்ள குழலால் தனது சிந்தூர அதரங்களைச் செல்லமாய்த் தட்டுகிற அழகையும் கண்டு குலசேகரன் பல கணங்கள் பொறி கலங்கி நின்றான்.



வாசல் கதவு திறந்ததால் ஏற்பட்ட சலனத்தில் கூடத்திலிருந்து கிளர்ந்த இளங்காற்று, வாசந்திகாவைத் தழுவிவிட்டு வெளியே போகிற வழியில் கஸ்தூரி, சந்தன, குங்கும வாசனைகளை அவன் மீது அள்ளி இறைத்துவிட்டுச் சென்றது.

அந்தப் பரவச மயமான கணங்கள் பல பறந்த பிறகு, "என்ன விஷயம்?" என்று வாசந்திகா அவனை மெதுவாகக் கேட்டாள்.

உடன் தனது நிலைக்கு வந்த குலசேகரன், முகத்தில் தீவிரமும் ஆத்திரமும் பொங்க அவளிடம் பேச ஆரம்பித்தான்.

"பாட்டையா பாடுகிறீர்கள்? நாட்டின் பாட்டைப் பாருங்கள், பகைவரின் படைகள் நகரை நோக்கி வருகின்றன. எல்லோரும் நகரைவிட்டு வெளியேற வேண்டும். புறப்படுங்கள்! சீக்கிரம் புறப்படுங்கள்!" என்றான் பரபரப்புடன்.

"ஓ!" என்று கூறிய அவள் புருவத்தை மேல் நோக்கி வளைத்தவாறு, "படைகள் வருகின்றனவா? யாருடைய படைகள்? அவர்கள் இந்த நகரைப் பிடித்து விடுவார் களோ? எங்களையும் பிடித்து விடுவார்களோ?" என்று சிறு நகைப்பு இழையோடக் கேட்டாள்.

"ஓகோ! நான் கூறுவதெல்லாம் விளையாட்டாக இருக்கிறதோ? அப்படியானால் அதன் பலனை நீங்களே அனுபவியுங்கள்" என்று சினத்துடன் கூறிய அவன் மறுகணம் வெளியேறத் தொடங்கினான்.

அதே நேரத்தில் வீட்டின் உள் பகுதியில் இருந்து வந்த அவளது தாயார் அவன் சொல்வதைக் கேட்டவாறு உள்ளே நுழைந்தாள்.

"தம்பி! தம்பி! கொஞ்சம் பொறு!" என்று கூறிக் கொண்டே அவசரத்துடன் வந்த அவள், குலசேகரன் வாயில் நிலைக்கட்டில் சற்றுத் தயங்கி நிற்பதைப் பார்த்ததும் பேசத் தொடங்கினாள்.

"தம்பி! நீ சொல்வதையெல்லாம் கேட்டேன்! சொல்ல வந்ததை முழுதுமாகச் சொல்! யாருடைய படைகள் வருகின்றன? எங்கே வருகின்றன?" என்று தீவிரத்துடன் கேட்டாள் அந்தப் பெண்மணி.

"சமயபுரத்தின் அருகே வந்திருக்கின்றன பகைவர் படைகள்!" என்றான் குலசேகரன்.

"ஓகோ! ஒய்சளர்கள் வருகிறார்களா? வரட்டுமே! ஒய்சளரானாலும் சரி, பாண்டியரானாலும் சரி, அல்லது சேரர் ஆனாலும் சரி, எமக்குப் பொருட்டில்லை. நாங்கள் எம்பெருமான் அடியார்கள்.* எம்பெருமானுக்கே ஆட்படுவோம். வேறு யார் வந்தால் என்ன? போனால் என்ன?" என்று அசிரத்தையுடன் சொன்னாள் அவள்.

குலசேகரன் உடனே ஆத்திரத்துடன் திரும்பி, "வருவது டில்லிப் படைகள்! டில்லியிலுள்ள துருக்க அரசர் தம் படைகளை நம் மீது ஏவி விட்டிருக்கிறார். சமயபுரம் வரை அந்தப் படைகள் வந்து விட்டன. நகரில் இருந்தால் இருங்கள், போனால் போங்கள், உங்கள் விருப்பம்!" என்று கூறிவிட்டு விருட்டென்று வெளியே ஓடினான்.

அவன் வெளியே போனதும், அந்தப் பெண்மணி, "வாசந்திகா! அந்தப் பிள்ளை சொல்வதில் ஏதோ விஷயம் இருக்கிறதே! நாட்டில் கலவரம் ஏற்படும்போல இருக்கிறதே! என் செய்வோம்!" என்று தன் மகளிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

* தேவதாசிகள்



வெளியே வந்த குலசேகரன் மீண்டும் ஓட்டமாகவே சென்று தேர் ஓடும் திருவீதியில் நுழைந்து, யாளிப் படிக்கட்டுகள் உள்ள தன் வீட்டை அடைந்தான்.

உள்ளே கவ்வியிருந்த இருளைப் பார்த்ததும் அவனுக்கு வியப்பாக இருந்தது. "அம்மா! அம்மா!" என்று அழைத்தவாறு ஒவ்வொரு கட்டாகத் தாண்டி நுழைந்த போது, உள்ளிருந்து ஏதோ முனகலான சத்தம் வருவது கேட்டது.

சற்றுத் துணுக்குற்ற அவன் இரண்டு தாவலில் திருமடைப்பள்ளியை அடைந்ததும் உள்ளே முணுக் கென்று எரிந்த புரை விளக்கின் வெளிச்சத்தில் அவனது தாயார் கீழே விழுந்து கிடப்பது தெரிந்தது.

திடுக்கிட்டுப் பதறிப் போய், "அம்மா", என்று கூவிக் கொண்டு தாயாரின் அருகில் அமர்ந்து அவளை எழுப்பத் தொடங்கினான் அவன்.

அப்போது அவளது முணகல் சத்தம் சுருங்கி விடவே அவனை ஒரு திடீர் வருத்தம் கவ்வத் தொடங்கியது. அவளது நாடியைப் பிடித்துப் பார்த்ததும் அது மெல்லிதாக அடித்துக் கொள்வது தெரிந்தது. உடனே, அவள் அருகில் குனிந்து, "அம்மா" என்று மீண்டும் கூவத் தொடங்கினான் அவன்.

"உங்கள் தாயாருக்கு இப்படித்தான் அடிக்கடி நேருகிறது. மூர்ச்சை போட்டு விழுந்து விடுகிறாள்" என்று யாரோ பேசுவதைக் கேட்டு அவன் தாழ்வாரத்தை நோக்கித் திரும்பிப் பார்த்தான். இருட்டில் எதுவும் கண்ணில் படாததால், "யாரது?" என்று குரலை மட்டும் உயர்த்திக் கேட்டான்.

"நான்தான் பிச்சி" என்று கூறிக் கொண்டு மை இருட்டின் கருவுக்குள்ளிருந்து ஒரு உருவம் உரிந்து வெளியே வந்தது. அதைப் பார்த்தபோது குபீர் என்று

ஒரு பயப்பிராந்தி அவன் மனதில் எழுந்தது. பிசாசோ என்று நினைத்து ஒரு கணம் திடுக்கிட்ட அவன் வெளிச்சத்தின் முன்னால் அந்த உருவம் வந்ததும் தன்னை நிதானித்துக் கொண்டான்.

வந்தவள் ஒரு பெண். மிகவும் குட்டையாகவும், பக்கவாட்டில் பருமனாகவும் இருந்தாள். அவள் சாதாரண உயரத்தில் இருப்பாள் என்று நினைத்து ஒரு உயரத்துக்கு மேலே அவளது தலையை எதிர்பார்த்து ஏமாந்ததால் ஏற்பட்ட குழப்பந்தான் அது என்பதை அவன் உணர்ந்தான்.

"நான் இந்த வீதியில்தான் இருக்கிறேன். உங்கள் தாயாருக்கு உதவி செய்பவள் நான்தான்" என்று கூறிய பிச்சியின் குரல் அவளது உடல் வக்கிரத்தைப் போலவே கரடு முரடாக இருந்தது.

அப்போதுதான் குலசேகரனுக்கு நினைவு வந்தது. அவளது தாயாருக்குப் பாதுகாப்பாக இருந்த மாமன் இரு வருடங்களுக்கு முன் இறந்துவிட்டதால், அப்போதில் இருந்து அந்தப் பெண்தான் அவளுக்குத் துணை யாகவும், ஒத்தாசையாகவும் இருந்திருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

நகரத்தின் மருத்துவர் இருக்கும் இடத்தை பிச்சியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுவிட்டு அவசரமாக வாசலை நோக்கித் தாவினான் குலசேகரன். அப்போது மாலை மறைந்து இருட்டத் தொடங்கி விட்டது.

வெளியே டம டம டம என்று முரசின் ஓசை வீதி முனையில் முழங்கிக் கொண்டிருந்தது. அதைத் தொடர்ந்து ஜனங்களின் கூச்சல்களும், கூப்பாடுகளும் கடல் இரைந்தாற் போல் பேரிரைச்சலாக எழுந்து கொண்டிருந்தன.



அதற்குள்ளாகவே அநேகர் தலையில் மூட்டை முடிச்சுகளுடன் வீதியில் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

"நகரத்தைவிட்டு ஓடுங்கள்! அந்நியப் படை வருகிறது" என்று முரசு அறைபவனின் கூச்சல் குலசேகரனின் செவியில் தெளிவாக விழுந்தது.

தன் செய்கைக்குப் பலன் கிடைத்து விட்டது என்று மன நிறைவுடன் குலசேகரன் வீதியில் அவசரமாக நடந்தான்.

அடுத்து வீதிக்குள் நுழைந்த போது, அங்குள்ள வீடுகளில் ஏற்கெனவே கலவரங்கள் மிகுந்து விட்டதை உணர்ந்தான் அவன். வாயில்களில் சிலர் பெட்டகங் களையும், பெரும் சுமைகளையும் திண்ணை மீது வைத்திருந்தார்கள். சில வீடுகளில் குழந்தைகளின் அழு குரலும் அலறல்களும் கேட்டுக் கொண்டிருந்தன.

எங்கும் ஒரே பரபரப்பும், சந்தடிகளும், பாத்திரங்கள் விழும் ஓசைகளும், கூவல்களும், கூப்பாடுகளும் கேட்டுக் கொண்டிருந்தன. நகரத்தின் அமைதியான சூழ்நிலை ஒரு நாழிகைக்குள் எப்படி மாறிவிட்டது என்று நினைத்தான் அவன்.

நடையை அவசரப்படுத்திக் கொண்டு அவன் மருத்துவரின் வீட்டை அடைந்த போது, அது மூடப் பட்டிருப்பது தெரிந்தது. ஒரு கணம் திடுக்கிட்ட அவன், படிகள் மீது ஏறி வாசல் சாளரம் வழியே உள்ளே பார்த்தபோது, கூடத்தில் பரபர என்று ஏதோ வேலைகள் நடந்து கொண்டிருப்பது தெரிந்தது.

உடனே வாசல் கதவை தடதட என்று தட்டத் தொடங்கினான். "யார்?" என்று ஒரு பெண்மணியின் குரல் கேட்கவே, "கண்ணபுர மருத்துவர் இருக்கிறாரா? அவரை அழைத்துப் போக வந்திருக்கிறேன்" என்றான் அவன்.

மருத்துவர் வருவதற்கில்லை என்று அந்தப் பெண் தெரிவித்துவிடவே, ஆவேசம் வந்தவனாக கதவை ஓங்கி இடித்துத் திறந்து உள்ளே புகுந்தான்.

நேராக மருத்துவரிடம் சென்று விஷயத்தைக் கூறி அவரை அழைத்தபோது, "நாங்கள் நகரத்தைவிட்டுப் போகப் போகிறோம். இப்போது எங்கும் வருவதற்கு இல்லை" என்று கூறினார்.

அடுத்தகணம் குலசேகரன் ஒரு காரியத்தில் இறங்கினான். கச்சத்திற்குள் ஒளித்து வைத்திருந்த குறுக்கத்தியை உருவி அவர் முன்னால் நீட்டினான். மருத்துவர் வெடவெடத்துப் போய் நின்றுவிட்டார்.

வீட்டிலுள்ள பெண்மணி ஒருத்தி, குய்யோ, முறையோ என்று கதறி, "இந்த அநியாயத்தை கேட்பாரில்லையா?" என்று அரற்றினாள்.

"கேட்பதற்கு யாரும் இல்லை! இப்போது இந்தக் கத்தி சொல்வதுதான் நியாயம்! பேசாமல் இருங்கள்!" என்று கத்தினான் அவன்.

மருத்துவர் தமது குளிகை, மாத்திரைகள் அடங்கிய சிறுபெட்டியை எடுத்துக் கொண்டு வீதியில் அவனுடன் நடந்தார்.

வீட்டை அடைந்ததும் குலசேகரனின் தாயாருக்குச் சிகிச்சை நடந்தது. அவளது நாக்கில் மருந்துகளைக் குழைத்துத் தடவிய மருத்துவர் மேலும் சில மாத்திரை களையும் அளித்துவிட்டு விரைவாக வெளியே சென்றார்.

மிகுந்த கவலையுடன் தாயாரின் அருகில் உட்கார்ந்திருந்த போது வாயிலில் இரைச்சல்களும் அரவங்களும் அதிகமாகக் கேட்கத் தொடங்கின.

இன்னது செய்வது என்று தெரியாமல் தவித்த போது. அவனது தாயார் மெள்ளக் கண் விழிப்பது தெரிந்தது. உடனே மிகுந்த மகிழ்ச்சியுடனும்



ஆர்வத்துடனும். "அம்மா!" என்று இரைச்சலுடன் அவன் கத்தினான்.

தாயாருக்கு நினைவு லேசாக வந்து கொண்டு இருந்தது. மெள்ள விழித்துக் கூடத்தையும், அதனுள் எரிந்து கொண்டிருக்கும் அணிவிளக்கையும் பார்த்தாள் அவள். குலசேகரனைப் பார்த்ததும், அவள் முகம் வெளிச்சம் அடைந்தது. வாயைத் திறந்து என்னவோ சொல்ல நினைத்தபோது அவளால் பேச முடியவில்லை என்பது தெரிந்தது. இனமில்லாத சத்தங்களை எழுப்பிக் கொண்டு ஏதோ பேச முயன்றாள்.

அவள் பேச முடியாததைக் கண்டு குலசேகரன் அதிர்ச்சி அடைந்தான். தாயாரின் கைகளைப் பற்றிக் கண்ணில் ஒத்திக் கொண்டு, "அம்மா, ஏதாவது பேசு!" என்று அரற்றினான்.

பிறகு நீர் ததும்பும் கண்ணோடு எழுந்து, திருக்காஞ்சியிலிருந்து தான் கொண்டுவந்த சுமையை எடுத்துவந்து தாயார் முன்னிலையில் பிரித்தான்.

அதில் வெண்ணிறத்துப் பட்டுத் துகில்கள் மூன்றும், பொன் இணைத்த பவழமாலைகள் இரண்டும் இருந்தன. திருப்பதிக்கு அவன் போய் வந்தபோது வாங்கிவந்த கற்கண்டுக் கட்டிகளும், மஞ்சள் அரிசியும், உலர்ந்து வற்றிய திருத்துளவமும் இருந்தன.

"அம்மா! திருப்பதிக்குச் சென்று திருவேங்கடரைத் தரிசித்தேன். அவரது பிரசாதங்கள் இவை" என்று அவள் முன்னே வைத்தான். தாயாரின் மெலிந்த பலவீனமான கைகளில் பட்டுத் துகிலை வைத்து, அவள் முகம் மகிழ்ச்சியால் திரும்புவதை ஆர்வக் கண்களோடு பார்த்தான். பிறகு உள்ளே போய் கற்கண்டைப் பொடித்து வந்து அவள் நாவில் பாசத்துடன் வைத்து அவளை மெள்ள மெள்ள உண்ணச் செய்தான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தாயாரின் விழிகள் விழித்திருந்தனவே ஒழிய, அவளிடம் பேச்சும் இல்லை,

சைகையும் இல்லை என்பதை உணர்ந்து கொண்டான். அவன் கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் வழிந்தது.

"ஆகா, எவ்வளவு பெரிய துரதிர்ஷ்டசாலி நான்! மாலையில் வந்தபோது தாயார் என்னுடன் பேசினாள். அப்போதே இங்கு தங்கி இருந்து மனம் குளிர அவளுடன் பேசாமல் போய்விட்டோமே!" என்று வருத்தப்பட்டான்.

இனி என்ன செய்வது என்று யோசித்தபோது தானும் மற்றவர்களைப் போல நகரத்தை விட்டு வெளியேற வேண்டும் என்று தீர்மானித்தான்.

ஆனால் தாயார் இருக்கும் நிலையில் அவளை நடத்திச் செல்ல முடியாது. பல்லக்கோ, வண்டியோ அமர்த்த அவனுக்குப் பொருள் வசதி போதாது. எனவே அவளை எவ்விதத்திலாவது தானே தூக்கிச் செல்வது என்று தீர்மானித்தான்.

கைவிளக்கு ஒன்றை எடுத்து வந்து வீட்டின் ஒவ்வொரு பகுதியாகச் சென்று, பாத்திரங்களை எல்லாம் கொணர்ந்து இரு மூட்டைகளாகக் கட்டினான். பிறகு அந்த மூட்டைகளைக் கிணற்றருகில் எடுத்துச் சென்று சகடையில் ஒவ்வொன்றாகக் கட்டி தண்ணீரின் ஆழத்தில் இறக்கி வைத்தான்.

பின்னர் ஒரு பெரிய கூடையைக் கொண்டு வந்து அதற்குள் வசதியாக துணிகளைப் பரத்தி வைத்தான். தாயார் அருகில் மீண்டும் வந்தபோது அவள் உறங்கியிருப்பது தெரிந்தது. மெள்ள அவளைத் தூக்கிக் கூடைக்குள் அணைவாகப் படுக்க வைத்துக் கூடையுடன் வெளியே வந்தான் குலசேகரன்.

பிறகு வீட்டுக் கதவைச் சாத்திப் பூட்டிவிட்டுக் கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு வீதி வழியே நடக்க ஆரம்பித்தான்.



சிறிது தூரம் போயிருப்பான். அப்போது, "தம்பி" என்ற குரல் கேட்டது. யாரோ பின்னால் வந்து அவன் கையைப் பிடிப்பதை உணர்ந்ததும் திடுக்கிட்டு நின்றான் அவன்.

ஆற்றில் வரும்போது சந்தித்த அந்தப் பெரியவர் தான் அவர் என்று தெரிந்ததும் வியப்புடன் அவரை நோக்கினான் அவன்.

# 4



வடதிருக்காவேரியில் சந்தித்த அந்தப் பெரியவரைக் கண்டவுடன் அகமும் முகமும் குழைந்த குலசேகரன் அவரை நோக்கி, "சுவாமி! வணக்கம் தெரிவிக்கிறேன்!" என்றான்.

பெரியவர் தமது திரண்ட தோள்களைக் குலுக்கிக் கொண்டு லேசாகச் சிரித்து, "தம்பி! ஆற்றைக் கடக்கும் போது சுமை கொண்டு வந்தாயே! அது எங்கே?" என்று கேட்டார்.

"அந்தச் சுமையை வீட்டில் வைத்துவிட்டேன் சுவாமி! இப்போது இந்தச் சுமையை ஏற்றிக் கொண்டிருக்கிறேன்!" என்று கூறி தலைமேல் உள்ள கூடையைக் காண்பித்தான்.

அதைப் பார்த்த பெரியவர், "தம்பி! ஆற்றில் அந்தச் சுமையைப் பாதுகாப்பதற்கு எவ்வளவு பாடுபட்டாய்! கடைசியில் அது பயன்படாமல் போய்விட்டதே! சரி! இப்போது இரண்டாவது சுமையைச் சுமந்து கொண்டிருக்கிறாய்! இது பயன்படக் கூடிய சுமை! ஆனால் இந்தச் சுமையையும் தவிர மூன்றாவது சுமை ஒன்று இருக்கிறது. கடைசி கால ஆபத்துக்கு அதுதான்

வழித்துணை. அந்தச் சுமையையும் காக்க வேண்டாமா?" என்றார்.

"மூன்றாவது சுமையா சுவாமி? அது என்ன சுமை? எங்கே இருக்கிறது?" என்றான் குலசேகரன்.

"வா! அதைக் காட்டுகிறேன். உன்னை நான் இங்கே பார்த்தது என் அதிர்ஷ்டம்!" என்று கூறிய பெரியவர் அவனை அழைத்துக் கொண்டு முன்னே செல்லத் தொடங்கினார்.

நல்ல திடமான உடற்கட்டுடன், அதி கம்பீரமாக நடந்து செல்லும் அவரைப் பார்க்கும்போது, குலசேகரனுக்குத் தன்னையும் அறியாமல் ஒரு பயபக்தி ஏற்பட்டது. வழித்துவிட்ட மொட்டைத் தலையும், நீண்ட கைகளில் கங்கணமும், பரந்த மார்பில் துளவ மாலையும் தரித்திருந்த அவர் இடையிடையே திரும்பிக் குலசேகரன் வருகிறானா என்று பார்த்தவாறு மேலே நடந்து கொண்டிருந்தார்.

அப்போது இருட்டி அரை நாழிகை இருக்கும். வழக்கமாக நகர மாந்தரின் கலகலப்பும், ஒளிகளின் தகதகப்பும் குமிழிடும் வீதிகளில் ஒரே கும்மிருட்டும் குமைந்து கொண்டிருந்தது. வீதியில் உள்ள விளக்குத் தூண்கள் யாவும் தீபம் வைக்கப்படாமல் மூளியாகக் காட்சி அளித்தன. வீடுகளில் உள்ள புரை விளக்குகளும் அன்று எரியவில்லை. பாதி வீடுகளும் அதற்குள் அடைபட்டு விட்டதால் வீதியே வெறிச்சோடி விட்டது. எங்கும் சூழ்ந்த மையிருட்டினூடே பல்லக்குகள் வரும் போது, "எச்சரிக்கை! எச்சரிக்கை!" என்று அதைச் சுமப்போர் குரல் கொடுத்துக் கொண்டே வந்தார்கள். வீதியில் செல்வோர் வருவோரிடையே ஒரே பரபரப்புத் தென்பட்டது.

நான்முகன் வாசலைப் பெரியவர் கடந்ததும், அவர் கோவிலுக்குள் போய்க் கொண்டிருக்கிறார் என்பதை அறிந்தான் குலசேகரன். அடுத்து கார்த்திகை வாசலை



அடைந்த போது, அங்கு கண்ட காட்சியில் அவனுக்கு ஒரு அதிர்ச்சி ஏற்பட்டது. தலைகளில் சுமைகளைத் தாங்கி இருந்த அநேகர் கைகளில் பெண்டிர் பிள்ளை களைக் கோர்த்துக் கொண்டு கோவிலுக்குள் அவசரமாக நுழைந்து கொண்டிருந்தார்கள்.

நகரத்துக்கு வெளியே போகாமல் கோவிலுக்கு உள்ளே ஏன் இவர்கள் போகிறார்கள் என்று நினைத்த குலசேகரன் அடுத்த வாசலைக் கடந்ததுமே, மற்றொரு அதிசயமான காட்சியைக் காண நேர்ந்தது. கோவில் அணி விளக்கு வெளிச்சங்களின் ஒளியில் ஆரியபட்டாள் வாசலை நெருக்கிக் கொண்டு, இரு மருங்கிலும் மக்கள் கூட்டம் வெள்ளமாக மொய்த்துக் கொண்டிருந்தது. வாசலை ஒட்டிச் செல்லும் ஆலிநாடன் திருச்சுற்று முழுவதிலும் அந்த மக்கள் ஒரே திரளாக நிறைந்திருந்தார்கள். கோவிலுக்குள் அவர்கள் செல்லாவண்ணம் ஆரியபட்டாள் கொத்தினர்* வாசல் நிலையைக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

பெரியவரும் அவனும் அந்த வாசலைக் கடந்து போன போது, பட்டாள் கொத்தினர் அவர்களுக்கு மரியாதை செய்து வழிவிட்டார்கள்.

உள்ளே அணியரங்கன் முற்றத்தில் வந்ததும் குலசேகரன் ஆவல் பொறுக்காதவனாய், "சுவாமி!" என்று அழைத்தான்.

பெரியவர் திரும்பிப் பார்த்தார்.

"எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள் சுவாமி? நகருக்கு ஆபத்து வந்திருக்கும்போது இங்கே எதற்கு இந்தக் கூட்டம்?" என்றான் குலசேகரன்.

"அதை விளக்கத்தான் அழைத்து வந்திருக்கிறேன்" என்று சொல்லிய அவர், "தம்பி! என் பெயர்

* கோவிலைப் பாதுகாக்கும் வீரர் குழுவினர்

பஞ்சுகொண்டான்! நீ என்னை அறிய மாட்டாய்! உன் தந்தை வில்விதாசரை நான் அறிவேன். இப்போது உன் தாயார் வயது முதிர்ச்சியால் நோய்வாய்ப்பட்டு இருக்கிறார். அவரை அதோ அந்த மண்டபத்தின் கீழே படுக்க வைத்துவிட்டு வா! எல்லாம் சொல்கிறேன்!" என்றார்.

துலா புருட மண்டபத்தின் ஓரமாகக் கூடையை வைத்துவிட்டுத் தாயாரை நோக்கிய போது, குலசேகரனுக்கு வருத்தம் பொத்துக் கொண்டு வந்தது. தாயார் நிச்சிந்தையாக உறங்குகிறாள் என்பதை அறிந்ததும் அவளைக் கீழே இறக்கி விரிப்பில் படுக்க வைத்து. அவள் மீது துணி எடுத்துப் போர்த்தி. அவளது திருவடிகளைத் தொட்டு வணங்கிவிட்டு எழுந்து வந்தான் அவன்.

அணிமா மண்டபத்தைச் சுற்றிலும் மற்றொரு கூட்டம் கூடியிருந்தது. ஒரு பக்கம் நகரத்துப் பெரியவர்கள் எல்லாரும் நின்று கொண்டிருக்க, மறுபக்கம் வயோதிகர்கள் யாவரும் கீழே அமர்ந்து இருந்தார்கள். மற்றொரு பக்கம் தேவதாசிகள் அனைவரும் கூட்டமாகக் கூடி வருத்தம் தோய்ந்த முகத்துடன் நின்று கொண்டிருந்தார்கள்.

அத்தனை பேர் அங்கே குழுமி இருந்தாலும் சிக்கென ஒரு நிசப்தம் அந்த முற்றம் எங்கும் பரவிக் கிடந்தது. மண்டபத்தின் படிகளில் குலசேகரனை ஏற்றிச் சென்ற பஞ்சுகொண்டான், திருமேடைக்கு அவனை அழைத்துச் சென்று, "இவர்தான் இப்போது நமது சுமை!" என்று அங்கே 'தோளுக்கு இனியானில்'* வீற்றிருக்கும் திருவரங்கப் பெருமானையே சுட்டிக் காண்பித்தார்.

குலசேகரனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. முகத்தில் தோன்றிய முறுவல் நகைப்பாக மாற, "சுவாமி! இவரையா

* தோளுக்கு இனியானில் - வாகனத்தின் பெயர்



கூறுகிறீர்கள்? இவரையா நாம் காப்பாற்ற வேண்டும் என்கிறீர்கள்?" என்று அவநம்பிக்கையுடன் கேட்டான் அவன்.

"பிள்ளாய் குலசேகரா! சிரியாதே! இவரை பார்! திருமுடியிலிருந்து திருவடி வரைக் கண்குளிரப் பார்! இவரது திருக்கண்களைப் பார்! திருச்செவிகளைப் பார்!" என்று அடுக்கியவாறு திருவரங்கனது தெய்வீக அழகு அனைத்தையும் சொல்லிக் கொண்டே போனார் பஞ்சுகொண்டான்.

சாத்துப்படி* களைந்து மேனி மீது ஒரே ஒரு பூமாலை மட்டுமே பூண்டு தோளுக்கினியானில் வீற்றிருக்கும் திருவரங்கனைக் குலசேகரன் அதிக ஆர்வமுடன் பார்த்தான்.

சில கணங்கள் சென்றன.

"என்ன பார்த்தாய்?" என்று கேட்டார் பஞ்சு கொண்டான்.

"திருமுகத்தில் குளிர்ச்சியான அமைதி! உதட்டில் புன்முறுவல்! கண்களில் யோகமயமான கவர்ச்சி! இவைகளைத்தான் காண்கிறேன் சுவாமி!" என்றான் குலசேகரன்.

"வேறு எதையும் காணவில்லையா?" என்று கேட்டார் பஞ்சுகொண்டான்.

"இல்லையே, சுவாமி!" என்றான் அவன்.

"பிள்ளாய்! புறம் காணுவார்க்குப் புறம்தான் தெரியும். அகம் காணுவார்க்கு அகம் தெரியும்" என்றார் அவர்.

* சாத்துப்படி - அலங்காரம்

"என்ன சொல்கிறீர்கள் சுவாமி?"

"இப்படி வா! இப்போது நான் என்ன பார்க்கிறேன் என்று சொல்கிறேன்" என்றார் அவர்.

குலசேகரன் அவர் சொல்லப் போவதை ஆவல் பொங்கக் கேட்டான்.

"பிள்ளாய்! இப்போது நான் பார்க்கிறேனே, அரங்கனது திருமுகத்தை அதை நான் காணவில்லை!"

"அப்படியா?"

"ஆமாம்! நான் பார்ப்பது என்ன தெரியுமா? இங்கே கூடியிருப்பவர்களின் முகங்களை எல்லாம் அரங்கனது திருமுகத்தில் காண்கிறேன்."

"அதிசயம் சுவாமி!"

"அவர்கள் ஆர்வத்தைப்பார்க்கிறேன், விளைவைப் பார்க்கிறேன். மன உறுதியைப் பார்க்கிறேன். அவர்களது நம்பிக்கையையே பார்க்கிறேன்."

குலசேகரன் சிரித்தான். பஞ்சுகொண்டான் திரும்பினார்.

"ஆமாம், தம்பி! இங்கே கூடியிருப்பவருடைய ஆர்வம், விழைவு, உறுதி, நம்பிக்கை எல்லாமே திரண்டு இந்தத் திருவரங்கனது திருமுகமாக எனக்குத் தோன்றுகிறது!" என்றார் பஞ்சுகொண்டான்.

"அப்படியா சுவாமி?"

"ஆமாம். திருவரங்கன் ஒரு ஒப்பரிய தெய்வம் என்பது ஒருபுறம் இருக்கட்டும். கூடியிருக்கும் இந்த சமூகத்தினரது அசையாத நம்பிக்கையே அவர்! இவர்களது லட்சியங்களின் பிரதிபிம்பமே அவர்! சொல்லப் போனால் இவர்களது உயிருக்கு உயிரே அவர்!"

அவர் சொல்லும் செஞ்சொற்களின் தீவிரம் அவன் மனத்தில் தைத்ததும் அன்றி அவன் கொண்ட நகைப்பையும் குலைத்துவிட்டுச் சென்றது. அவனையும் அறியாமல் ஒருவித பயம் நிறைந்த விநயம் அவனை உடனே பற்றிக் கொண்டது.

"உயிருக்கு உயிரான அரங்கனைவிட்டுப் பிரிய மனம் இல்லாமல்தான், ஆபத்து வந்துள்ள இந்த நிலையிலும் நகரைவிட்டு வெளியேறாமல் மக்கள் யாவரும் அரங்கனே தஞ்சம் என்று இங்கே வந்து குழுமி இருக்கிறார்கள்" என்று சொல்லிக் கூடியிருப்போர் எல்லாரையும் கை விரித்துச் சுட்டிக் காட்டினார் பஞ்சுகொண்டான். பார்க்கும் இடமெல்லாம் படம் எழுதினாற் போல் ஒரு பெரும் ஜனத்திரளே மெய் மறந்து வாய் புதைத்துக் காண்பதற்கு அரிய கட்டுப்பாட்டுடன் நின்று கொண்டிருப்பதைக் குலசேகரன் அதிசயத்துடன் பார்த்தான்.

அவன் கண்கள் பனித்து நின்றன. ஒரு ஆழமான நம்பிக்கையே அங்கு கூடியுள்ள ஆயிரமாயிரம் மக்களாக வடிவு எடுத்திருப்பது போல அவனுக்குத் தோன்றியது.

அந்த நினைப்பின் முதல் திவலையே அவன் இதுவரை அனுபவித்து அறியாத ஒரு அதிசயமான உள் அனுபவத்தை ஏற்படுத்தியது.

உடன் அவன் பெரியவர் பக்கம் திரும்பி, "சுவாமி! நகரத்தைவிட்டுச் செல்ல மறுக்கிறார்கள் என்று சொன்னீர்கள்! இவர்கள் வேண்டுவதுதான் என்ன?" என்று கேட்டான்.

"அரங்கன் இங்கு இருந்தால் இவர்கள் இங்கு இருப்பார்கள். அரங்கன் வெளியே போனால் இவர்களும் போவார்கள். இப்படிப்பட்ட ஒரு மன உறுதியோடு இவர்கள் வந்திருக்கிறார்கள். நாங்கள் என்ன சொல்லியும் இடத்தைவிட்டு நகர மாட்டேன் என்கிறார்கள். உனக்குத் தெரியுமா? இவர்களில் பெரும்பாலோர் தினமும் அரங்கனைத் தரிசித்து விட்டுத்தான் வீட்டுக்குச் சென்று உணவு அருந்துவார்கள். அவ்வளவு நம்பிக்கை! அவ்வளவு பக்தி!" என்றார் பஞ்சுகொண்டான்.

குலசேகரன் திகைத்து நின்றான்.

"இந்த ஜனங்களை எல்லாம் காப்பாற்ற வேண்டு மானால் நாம் தான் திருவரங்கனைக் காப்பாற்ற வேண்டும். அதுதான் நமது பெரிய கடமை! அதுவேதான் நமது பெரிய சுமை!" என்றார் பஞ்சுகொண்டான்.

"அதற்கு என்ன செய்யலாம், சுவாமி?"

"திருவரங்கனையே இந்த நகரைவிட்டு வெளியே எழுந்தருளச் செய்து தென்திசை நோக்கிப் போய் விடவேண்டும். அதுதான் ஒரே வழி! அவ்விதந்தான் நம் பெரியவர்களும் முடிவு எடுத்திருக்கிறார்கள். அப்படிச் செய்தால்தான் இவர்கள் யாவரும் நகரைவிட்டு வெளியேறுவார்கள். இல்லாவிடில் இங்கேயே தங்கிவிடு வார்கள்!" என்றார் அவர்.

"நீங்கள் சொல்வது சரி சுவாமி! நான் இதில் எவ்விதம் உதவ முடியும்?" என்றான் குலசேகரன்.

"இன்னும் சிறிது நேரத்தில் திருவரங்கனை எழுந்தருளச் செய்து கொண்டு ஒரு கூட்டம் புறப்படப் போகிறது. அந்தக் கூட்டம் தென் திருக்காவேரியைத் தாண்டி மறுகரை போகும்வரை மக்கள் கூட்டத்தை



ஒழுங்குபடுத்துவது உன் பொறுப்பு! உனக்கு இன்னும் இரண்டு இளைஞர்கள் இதில் துணை புரிவார்கள்!"

"ஏன் சுவாமி! இந்தப் பணிக்கு வேறு யாருமே உங்களுக்குக் கிடைக்கவில்லையா?"

"கிடைத்திருக்கிறார்கள். அவர்கள் எல்லோருக்கும் கோவிலுக்குள் பல அவசர வேலைகள் இருக்கின்றன. அதனால்தான் இந்தக் காரியத்தை உன்னிடம் ஒப்பு விக்கிறேன். நீ திருவரங்கனை மறுகரையில் பத்திரமாகச் சேர்ப்பித்துவிட்ட பிறகு மீண்டும் கோவிலுக்கே வர வேண்டும். அதுவரை உன் தாயாரை இங்கே கவனித்துக் கொள்ள நான் ஏற்பாடு செய்கிறேன். அவளைப் பற்றிக் கலங்காதே!" என்றார் பெரியவர்.

குலசேகரன் சிறிது நேரம் யோசித்து நின்றான். பிறகு "சுவாமி!" என்றான் தயக்கத்துடன். "அடியேனிடம் ஏன் இந்தப் பொறுப்பைத் தருகிறீர்கள்? நான் இதற்குத் தகுதி பெற்றவனல்ல சுவாமி! இது எனக்கு இந்தச் சமயத்தில் ஏற்ற தொழிலும் அல்ல" என்றான் அவன்.

அப்போது பஞ்சுகொண்டான் அவனை முறுவல் பொங்கும் கண்களுடன் பார்த்தார்.

"குலசேகரா! உன் தகுதியை நான் அறிவேன். கண்ணபுரத்து மருத்துவரிடம் நீ கத்தியை நீட்டிய போதே அது தெரியும்!" என்றார் அவர் அழுத்தமாக.

திடுக்கிட்ட குலசேகரன், "சுவாமி! உங்களுக்கு எப்படித் தெரியும்? மருத்துவர் கூறினாரா?" என்றான் தடுமாறிக் கொண்டு.

"தம்பி! நகரத்தின் அரையர்* நான். நகரத்தில் நடப்பவை எல்லாம் என் காதுக்கு எட்டுகின்றன. இந்த

* அரையர் - நகரத்து நலன்களைப் பேணும் அதிகாரி

அற்ப நிகழ்ச்சியை விடு! நீ தமிழ் மறைகளும், வேதங்களும் கற்பதற்காகக் காஞ்சி போனது தெரியும். ஆனால் கற்பதை நிறுத்திவிட்டு ஒய்சளப் படை வீரரிடமிருந்து மல், வில், வாள் யாவும் கற்றதுவும் தெரியும். அதனால்தான் நான் உன்னை இந்தப் பொறுப்புக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறேன்" என்றார் அவர் கணீரென்ற ஒரு குரலில்.

அவர் கூறுவதைக் கேட்ட குலசேகரன் பெரு வியப்புடனும் அதிர்ச்சியுடனும் நின்றான். பேச முடியாமல் அவன் தவித்தபோது பஞ்சுகொண்டான் மேலே தொடர்ந்தார்.

"பிள்ளாய்! நமக்கு அதிக நேரமில்லை. உனது தாயாரை பற்றிய ஒரே நினைப்புத்தான் இப்போது உன்னைத் தடுக்க முடியும். அதைப் பற்றியும் கலங்காதே! திருவரங்கன் அவளுக்கு எந்தக் குறையையும் வைக்க மாட்டார். இங்கேயே பத்திரமாக அவள் இருப்பாள். நாளைக் காலை விடியுமுன் நீ அவளை நகரத்துக்கு வெளியே எடுத்துச் சென்றுவிடலாம்! அதுவரை அவளைக் காப்பது எம் பொறுப்பு! தயங்காதே! விரைவில் பணியில் இறங்கு!" என்றார் அவர்.

அடுத்த நாழிகைக்குள் காரியங்கள் யாவும் விரைவாக நடந்தேறின. திருவரங்கனையும் நாச்சிமார் களையும் பல்லக்கில் எழுந்தருளச் செய்தார்கள். வேத்திர பாணிகள்* தங்கப் பிரம்பு, வெள்ளிப் பிரம்பு, தலை வளைசல் பிரம்பு, ஆகியவைகளைக் கையில் எடுத்துக் கொண்டு, 'எச்சரிக்கை! எச்சரிக்கை!' என்று விண்ணப்பம் செய்து, கைகளை ஓங்கித் தட்டிப் பேரோசை எழுப்பவே, திருவரங்கனின் பல்லக்கு மெள்ள அசைந்து எழுந்து நகர ஆரம்பித்தது. அதன் பின்னால் ஒரு நகரமே ஊர்வலமாகச் செல்லத் தொடங்கியது.

* பிரம்பைக் கையிலேந்தி ஒழுங்கு முறை ஏற்படுத்துவோர்.



# 5

இரா வேளையில் கிளர்ந்த அந்த ஊர்வலத்தின் முதல் அணியில் இருந்தவர் புகழ் வாய்ந்த வைணவப் பெரியவரான 'பிள்ளை உலகாசிரியர்'.

அறுபது பிராயத்தை நெருங்கிக் கொண்டிருந்த அவர் தூய பிரம்மச்சாரியாகவே வாழ்ந்து, அரங்கனுக் கும் வைணவத்திற்கும் தம்மை அர்ப்பணம் செய்து கொண்டிருந்தார்.

திருச்செவிகளில் கடுக்கனும், திருமார்பில் துளவ பட்டு நூல் மாலைகளும் அணிந்திருந்த அவர் தீவர்த்திகள் வெளிச்சத்தின் இடையே தாமும் ஒரு தீப ஒளியாக விளங்கிக் கொண்டிருந்தார்.

நிதானமும், ஆனால் அவசரமும் கலந்த நடை யுடன் ஆரியபட்டாள் வாசலைக் கடந்து அவர் வெளியே வர, அவரது இருமருங்கிலும், பின்னாலும் சீடர்களும், மற்ற பெரியவர்களும் வந்து கொண்டிருந்தார்கள்.

அவர்களை அடுத்தாற்போல் அரங்கனின் திருப் பல்லக்குக் குட்டிக் குஞ்சரம்போல் ஆடிக் கொண்டு வந்தது.

அதன் தனுசுக் கொம்பின்மீது ஒரு ராஜகிளி அமர்ந்து கண்களைச் சிமிட்டியவாறு கூட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தது.

இடையே ஒரு முறை தனது கோல மழலையில் "ரங்கா" என்று சோகமாக மிழற்றியது. கூட்டத்தின் கண்கள் யாவும் பல்லக்கின் உட்புறத்தை நோக்கி ஆவலோடு திரும்பியிருந்தன.

அங்கே, பல்லக்கின் உள்ளே, தொங்கும் குஞ்சலங் களுக்குக் கீழே, பட்டு மஞ்சங்களின் நடுவே,

திருவரங்கன் ஒரு எளிய திருக்கோலத்தில் எழுந்தருளி இருந்ததைக் கண்டதும் கூட்டத்தின் வாயினின்று 'ஆகா!' என்ற திடுக்கிடும் சத்தம் பெயர்ந்து எழுந்தது.

அணிமணிகள் ஏதும் பூணாதவராய், அடர்த்தியான மாலைகள் ஏதும் புனையாதவராய், சாதாரண ஒரு எளியவர் போல் உள்ளே காட்சி அளித்துக் கொண்டு இருந்தார் திருவரங்கன்.

அதைக் கண்ணுற்ற எல்லோர் கண்களும் பனித்துப் பொங்கிவிட்டன. விக்கலும், விம்மலும், விசும்பலும், தேம்பலுமாகச் சத்தங்கள் எல்லாத் திசைகளிலும் எழுந்துவிட்டன.

"நாடுவிட்டுக் காடு சென்ற ராமபிரானின் கதி உமக்கும் ஏற்பட்டதோ?" என்று சொல்லிக் கண்களில் இருந்து நீரை உகுத்தார்கள் பலர்.

"அரசனைக் காண வந்தோம். இங்கே ஆண்டியைக் காண்கிறோமே!" என்று சொல்லி விசித்தார்கள் பலர்.

"திருச்சின்னங்கள் ஊத, மங்கள வாத்தியம் முழங்க, தமிழ் மறை ஓசையும், வேத ஓசையும் புடைசூழ ஊர்வலம் எழுந்தருளுவீரே! இன்று ஓசை ஏதும் இல்லாமல் மௌனமாக எழுந்தருளும் காலம் உமக்கு வந்ததோ!" என்று புலம்பினார்கள் பலர்.

பலர் மூர்ச்சித்தார்கள். பலர் சித்தப்பிரமை பிடித்தது போல் பார்த்த பார்வையாகவே நின்றார்கள்.

பல்லக்கை அடுத்தாற்போல் அதன் பின்னால் கோயில் பெட்டகங்களைச் சுமந்து கொண்டு வரிசையாகப் பல ஊழியர்கள் வந்து கொண்டிருந்தார்கள். பெட்டகங்களில் அரங்கனது அணிமணிகளும், ரத்தின ஆரங்களும், முத்தங்கிகளும் வைரக் கங்கணங்களும் பலவிதப் பதக்கங்களும், பொன், வெள்ளி வட்டில்



களும், பட்டாடைகளும், பீதாம்பரங்களும் வரிசைப் படுத்தி அடுக்கப்பட்டிருந்தன. அவைகளைச் சுற்றியும் பட்டாள் கொத்தினரும், திருவேளக்காரர்களும் கையில் வேல் தாங்கிக் காவலாக வந்து கொண்டிருந்தார்கள்.

அந்தத் தொடரின் முடிவில் கிங்கரர்களைப் போல் தெரிந்த பலர் தங்கள் திரண்ட தோள்களில் பெரும் பொதிகளைச் சுமந்து கொண்டு பூமி அதிர நடந்து வந்தார்கள்.

இந்தச் சிறு ஊர்வலம் அடுத்த வாயிலுக்குப் போய்ச் சேரும்வரை, சுற்றியுள்ள கூட்டம் முழுவதும் அப்படியே அசைவற்று நின்று கொண்டிருந்தது. கடைசி அணி சென்றதும் இரு பக்கலிலும் கூடியிருந்த கூட்டத்தின் நுனிப்புறங்கள் மெள்ள மெள்ளக் கரைந்து அரங்கனை ஊர்வலமாகப் பின்பற்றத் தொடங்கின.

அந்தத் திருவரங்க நகரமே மௌனமான, நிசப்தமான ஒரு நீண்ட ஊர்வலமாக அப்போது மாறி நகரத் தொடங்கியிருந்தது.

கூட்டத்தில் செல்வோர் யாவரும் தங்கள் கைகளிலும் தோள்களிலும் சுமைகளைச் சுமந்து கொண்டுச் சென்றார்கள். பெண்கள் தம் ஒக்கல்களில் குழந்தைகளை ஏந்தி, தலைகளில் கூடைகளையுந்தாங்கி, கால் நோவ நடந்துச் சென்றார்கள்.

தூளிகளை கட்டி இடையே கொம்புகளை கொடுத்துத் தம் வயதான தாய் தந்தையரை பலர் தோள்களில் தூக்கிச் சென்றார்கள். சிறுவர்களும் ஓடி ஓடிக் கூட்டத்தைத் தொடர்ந்து கொண்டே இருந்தார்கள்.

கூட்டத்தின் இடையே வசதி படைத்த பலர் பல்லக்குகளிலும், குதிரைகள் மீதும் ஏறிச் சென்றார்கள்.

கோவில் மதில் வாயிலில் இருந்து திருக்காவேரிக் கரை வரை அந்த ஊர்வலம் நீண்டு நகரும்போது எண்ணற்ற ஒளிப் புள்ளிகள் நகர்வன போல் தோன்றின.

குலசேகரன் மக்களிடையே முன்னும் பின்னுமாக ஓடியும், நடந்து போவோரை அவசரப்படுத்தியும் பின் தங்குவோர்க்கு உதவி செய்தும், விழும் குழந்தைகளைத் தூக்கி நிறுத்தியும், பம்பரம் போல் வேலை செய்து கொண்டிருந்தான்.

திருக்காவேரிக் கரையைக் கூட்டம் அடைவதற்கு வெகு நாழிகை ஆகியது. ஊர்வலத்தின் முன்னால் போய் நின்ற குலசேகரன் அப்போது தன் இரு கைகளையும் குவித்து, "குருகையப்பா! சோலையப்பா!" என்று கூவி அழைத்தான்.

"இதோ வந்தோம்" என்று கூவி, இரு இளைஞர்கள் ஜனங்களை ஊடுருவிக் கொண்டு முன் நோக்கி ஓடி வந்தார்கள்.

இருவரில் ஒருவன் சற்றுப் பருமனாக இருந்தான். தலையை மொட்டையிட்டிருந்தான். அவன் பெயர் குருகையப்பன். மற்றவன் குறுந்தாடியுடன், பின்னால் வளர்ந்த நீண்ட முடியுடனும் இருந்தான். அவன் பெயர் சோலையப்பன்.

இருவரும் முன்னால் வந்து நின்ற போது குலசேகரன் அவர்களைப் பார்த்து, "குருகையப்பா! சோலையப்பா! கூட்டத்தை இங்கே நிறுத்த வேண்டும். அரங்கனது பல்லக்கும் பரிவாரமும் அக்கரை போய்ச் சேரும்வரை இவர்கள் இந்த இடத்தைவிட்டு நகரக் கூடாது" என்றான்.

"அப்படியே செய்வோம்!" என்றார்கள் இருவரும்.

மறுகணமே இரு இளைஞர்கள் தங்கள் பூண்பிடித்த கைத்தடிகளை மேலே தூக்கிக் கூட்டம் வரும் வழியில் குறுக்காக நின்று, "ஹோ! ஹோ! நில்லுங்கள்!" என்று தொண்டை கிழியக் கத்தினார்கள்.



கூட்டத்திற்கு முன் அணியாக வந்த பட்டாள் கொத்தினர் நின்றுவிடவே, மந்திரம் இட்டது போல் கூட்டம் முழுவதுமே அங்கங்கே நின்றுவிட்டது. தீவர்த்திகளும் நின்று விட்டதால், நெய்யும் எண்ணெயும் கலந்த வாடை அந்தப் பிரதேசம் முழுவதும் வீச ஆரம்பித்தது.

குலசேகரன் அந்தக் கணமே மணல் வெளியில் இறங்கி ஓடிப் போய், திருவரங்கன் முன்னால் சென்று கொண்டிருக்கும் பிள்ளை உலகாசிரியர் முன்பாக வீழ்ந்து வணங்கி எழுந்திருந்தான்.

தீவர்த்தி ஒளியைக் கொண்டு வரச் சொல்லி அவனைத் தம் திருக்கண்களால் பார்த்த உலகாசிரியர், "பிள்ளாய் குலசேகரா! பஞ்சுகொண்டானும் நீயுமாகச் சேர்ந்து அரங்கனுக்குச் செய்யும் சேவை எல்லாம் வீண் போகாது. நாங்கள் முடிவு எடுத்த விதமெல்லாம் குறைவற நடந்து கொள்கிறோம். ஆனால் மக்களின் கூட்டத்தை எம்பின்னால் வரவிடாமல் செய்வது உங்கள் பொறுப்பு! அதற்கான வழிகளைக் கடைப்பிடிப்பாயாக!" என்று கூறினார்.

"சுவாமி! தங்கள் விருப்பம் போல் செய்வோம்!" என்று கைகூப்பிக் கூறினான் குலசேகரன்.

"எல்லாம் பெருமாளது சித்தம்" என்று கூறிய உலகாசிரியர் மேலே நடக்க ஆரம்பித்தார்.

மணலில் புதையும் அவரது திருப்பாதங்களையும் அதனால் சற்றுத் தளர்ந்துவிட்ட அவரது நடையையும் கண்களில் ஈரம் பொங்கப் பார்த்தான் குலசேகரன்.

சில கணங்கள் வரை அப்படியே நின்ற அவன் சட்டென்று மனத்தில் தெளிந்து, பரபரவென்று மேலே செய்ய வேண்டிய காரியங்களில் இறங்கத் தொடங்கினான்.

ஆற்றில் கொண்டைக் கோல்கள்* நட்டிருந்த இடங்களில் எல்லாம் தீவர்த்திக்காரர்களை நிறுத்தி வைத்து விட்டு, அரங்கனது ஊர்வலம் ஆபத்தில்லாமல் செல்வதற்காக ஒரு வளைவான பாதையை ஏற்படுத்திக் கொண்டான் குலசேகரன். வழியில் தானே நடந்து பார்த்து ஆழமில்லை என்று உறுதியாக அறிந்த பிறகு, திருவரங்கனது பல்லக்கையும் பரிவாரங்களையும் அந்தப் பாதையில் செல்வதற்கு அனுமதி வழங்கினான் அவன்.

ஊர்வலம் நகர்ந்தது. ஆற்று நீரில் அடுக்கடுக்கான அலைகளையும் சலசலப்பையும் ஏற்படுத்திக் கொண்டு நிதானமாக அது செல்லத் தொடங்கியது. அங்கங்கே பொட்டுகளைப் போல் நின்ற தீவர்த்திகளின் ஒளிகள், ஆற்று நீர் அலைகளின் மீது ஏறி இறங்கி விதவிதமாக விளையாட ஆரம்பித்தன.

கணுக்கால் ஆழத்தைத் தாண்டி, முட்டளவையுந் தாண்டி இடுப்பளவு ஆழத்தில் செல்லும் போது பல்லக்கை மிகக் கவனமாகச் சுமந்து சென்றார்கள் ஸ்ரீபாதந்தாங்கிகள்.

பல்லக்கின் தனுசின் மீது உட்கார்ந்திருந்த ராஜகிளி மட்டும் பயத்தில் அங்குமிங்கும் பார்த்து அடிக்கடி இறக்கைகளை அடித்துக் கொண்டிருந்தது.

அரை ஆடைகள் யாவும் நீரில் மூழ்கி நனைந்து விட்ட படியால் ஊர்வலத்தில் சென்ற அத்தனை பேர்களும் தண்ணீர் சொட்டச் சொட்ட மறு கரையை அடைந்தார்கள்.

மறு ஆடை உடுத்தக் கூட நேரமில்லை என்று உணர்ந்த அவர்கள், அரைக்கணம் கூடத் தாமதியாமல், தங்களது களைப்பையும் கூடப் பொருட்படுத்தாமல் ஒரு ஹுங்காரம் இட்டு பல்லக்கைக் கரைமீது ஏற்றினார்கள்.

* தண்ணீரில் ஆழமான பகுதிகளைக் குறிப்பதற்காக ஆற்றில் நடப்பட்டிருக்கும் கோல்



முன் ஏற்பாட்டின்படி தீவர்த்திகள் எல்லாம் நீரிலேயே நின்றுவிடவே, ஒரே ஒரு பந்தத்தை மட்டும் துணையாகக் கொண்டு அரங்கனது பல்லக்கு மேலே செல்ல ஆரம்பித்தது.

அந்தப் பந்தத்தின் ஒற்றைப் புள்ளியை மட்டிலும், கண்ணீர்க் கண்ணோடு பார்த்துக் கொண்டிருந்த குலசேகரன், அந்தத் திரு ஊர்வலம் மேடு ஏறிவிட்டது என்பதை உணர்ந்ததும் கடைசியாக ஒரு முறை கை கூப்பி வணங்கினான்.

பிறகு மணல் பகுதியை விரைவாகத் தாண்டிப் புல்லாந்தரிசையில் ஏறி, பட்டாள் கொத்தினர் நின்று கொண்டிருக்கும் இடத்தை வெகு சீக்கிரம் சென்று அடைந்தான்.

மீண்டும் மறுகரையைப் பார்த்தபோது, அங்கே பெருமாளின் ஊர்வலத்துடன் செல்லும் தீப்பந்தத்தை யாரோ மேலே தூக்கி, மேலும் கீழுமாக அசைத்துக் காட்டியது அவனுக்குத் தெரிந்தது.

உடனே அவனும் அருகிலுள்ள தீவர்த்திக் காரரிடம் இருந்து பந்தத்தை வாங்கி, மறுமொழி கூறுவது போல் மேலும் கீழுமாக அசைத்துக் காண்பித்தான்.

உடனே மறுகரையில் உள்ள பந்தத்தின் ஒளி சட்டென்று மாயம் போல் மறைந்துவிட்டது. அப்படி மறைந்ததன் அர்த்தத்தை குலசேகரன் மட்டும் நன்றாக அறிந்து கொண்டான்.

"குருகையப்பா!" என்று உடன் அவன் கூவியதும், "இதோ" என்று முன்னே நின்றான் குருகையப்பன்.

"ஊர்வலத்தை நகர விடு!"

"ஹோ! நகருங்கள்! ஹோ! ஹோ!" என்று இரைந்தான் குருகையப்பன்.

ஊர்வலம் நகர்ந்தது.

முகத்தில் சோகம் நிழலாட, கண்களில் நீர் அலை பாய, ஆடவரும், பெண்டிரும், பெரியவரும், சிறியவரும் கும்பல் கும்பலாக நடந்து முன்னே சென்றார்கள்.

அவர்கள் எழுப்பிய புழுதிப் படலம், தீவர்த்திகளின் ஒளியைக் கூட மறைப்பதாக இருந்தது.

பார்க்க பார்க்க முடிவே இல்லாததாய் அனுமனின் வாலைப் போல ஊர்வலக் கூட்டம் நீண்டு கொண்டே இருந்தது.

ஒரு நாழிகை நேரமாக அது போய்க் கொண்டே இருந்தது.

கூட்டத்தின் முடிவில் வரிசை வரிசையாகப் பல்லக்குகளும் குதிரைகளும் வந்தன. அவற்றின் தொடர்ச்சி முடிந்த நேரத்தில் எருது பூட்டிய வண்டிகள் ஒற்றை வரிசையாய் வரத் தொடங்கின.

தீவர்த்திகளும், சூழ்ந்திப் பந்தங்களும், விளக்குக் கூடுகளும், கண்ணுக்கு எட்டிய தூரம் வரை இரத்தினம் இறைத்தாற் போல் ஒளிப் புள்ளிகளைச் சிதறவிட்டிருந்தன.

கூட்டத்தில் தலைப்புப் பகுதி அதற்குள் ஆற்று நீரில் இறங்கி, மறுகரையை நோக்கி விரைந்து சென்று கொண்டிருந்தது.

நீர் பரப்பின் ஊடே வளைந்து சென்ற விளக்குகளும், பந்தங்களும், ஆற்று அலைகளின் மேல் நடுக்கமிடும் பிரதிபிம்பங்களை எழுப்பியபோது அந்த ஒளிச் சிதறல்கள் இரவு வேளையில் ஒரு கண்கொள்ளாக் காட்சியை உருவாக்கிக் கொண்டிருந்தன.

கரை ஓரத்தில் நின்று இந்தக் காட்சியை மெய்மறந்து கவனித்த குலசேகரன் கூட்டம் பாதி ஆற்றைக் கடந்துவிட்டது என்று தெரிந்ததும் இனி



கோயிலுக்குத் திரும்பலாம் என்று தீர்மானித்துத் திரும்பத் தொடங்கினான். இரண்டு எட்டுக்களை எடுத்து வைத்ததும் ஏதோ ஒரு நெடி அவன் மூக்கில் விறுவிறு என்று ஏறியது.

மனத்தில் சிறு சந்தேகம் ஏற்படவே சுற்றியுள்ள பகுதிகளைக் கூர்ந்த கண்களோடு உற்றுப் பார்த்தான். அடர்ந்த புதர்களும், இடைவெளியில்லா மரங்களும் உள்ள அந்தச் சூழலில் அவன் கண்களுக்கு எதுவும் படவில்லை. மேலே நடக்க முற்படும் போது, குதிரை சிறுநீர் இட்டதால் கிளம்பியிருந்த ஒரு கனமான நெடி அவன் எண்ணத்தை மீண்டும் உலுக்கியது.

இங்கே, இந்தக் கணத்தில் குதிரை எப்படி இருக்க முடியும் என்று மூளையைக் குடைந்து கொண்ட அவன், மறுகணம் சட்டென்று ஒரு யோசனைக்கு வந்தவனாய்க் கீழே குனிந்து கற்களை எடுத்து தன்னைச் சுற்றி நானா திசைகளிலும் உள்ள புதர்களை நோக்கி விட்டு எறிந்தான்.

அப்படி அவன் எறிந்த ஒரு கல் எங்கேயோ சொத்தென்று படுவதையும், உடனே, குளம்பொலிகள் தரையில் மாறி மாறித் துவைக்கப்படுவதையும் அவன் கேட்டபோது திடுக்கிட்டு நின்றான்.

இன்ன செய்வதென்று யோசிக்குமுன் யாரோ அவன் பின்னால் பாய்ந்து வந்து அவன் கழுத்தைச் சுற்றித் தன் கையை வளையமிட்டு அப்படியே அவனது மூச்சை நெறிக்கத் தொடங்கினான்.

# 6

கழுத்தில் பிடி இறுக இறுகக் குலசேகரனுக்கு மூச்சுத் திணற ஆரம்பித்தது. நொடியில் இது யாரோ வேடிக்கையாகச் செய்வதல்ல; வினைக்காகவே

செய்கிறார்கள் என்பதை ஊகித்துக் கொண்டான். அதே நேரத்தில் கழுத்தில் இறுகும் கை மிகப் பலம் வாய்ந்த கை; அதிலிருந்து நழுவுவது கடினம் என்பதையும் உணர்ந்து கொண்டான்.



மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும்போது மெள்ள மெள்ள அவன் தன் வலுவான இரு கால்களையும், அந்தப் புதியவனின் கால்கவடுக்கு இடையில் கொடுத்துப் பிரித்துக் கொண்டான்.

பிறகு, "ம்" என்று ஒரு துள்ளுத் துள்ளிப் பின்புறமாகச் சாய்ந்து அப்படியே மல்லாந்தான். புதியவன் கீழே விழ இவன் அவன் மீது விழுந்தான்.

அதைத் தொடர்ந்து புதியவனும் குலசேகரனும் ஒருவரை ஒருவர் கட்டிப் புரண்டு பெரிய துவந்தப் போர் நடத்தத் தொடங்கினார்கள்.

போராட்டத்தின்போது புதியவன் ஒரு நேரத்தில் திடீரென்று தன் குறுக்கத்தியை உருவி குலசேகரன் மீது பாய்ச்சப் போக, நொடி மாத்திரத்தில் அதிலிருந்து விலகிய குலசேகரன் ஆர்ப்பரித்து எழுந்து, புதியவனை ஒரே புரட்டில் கீழே தள்ளி, கச்சத்துள் இருந்த கத்தியை இமைப்பதற்குள் வெளியே உருவி, புதியவனது மார்பில் ஆவேசத்துடன் செருகினான்.

'ஆ' என்று தீனமான குரலை எழுப்பிய புதியவன், இரு முறை உடலை உதறிக் கொண்டு நிலத்தோடு நிலமாகக் கீழே சாய்ந்தான்.

குலசேகரன் களைத்துப் போய் மூச்சு வாங்கப் பாதை ஓரத்தில் போய்த் தரையில் அமர்ந்தான். அவன் இளைப்பாறுவதற்குச் சிறிது நேரம் ஆகியது.

பிறகு எழுந்து வந்து புதியவனைக் கவனித்தபோது அவனது உயிர் நீங்கியிருப்பது தெரிந்தது.

அவனது உடலைப் புரட்டிப் பார்த்ததில் அவன் அந்த டில்லிப் படையின் வேவுகாரன் என்பதையும், நகரத்தின் நடவடிக்கைகளை உளவு பார்க்க அங்கே அனுப்பப்பட்டிருக்கிறான் என்பதையும் ஊகித்துக் கொண்டான்.



வாழ்க்கையில் முதன் முதலாக ஒருவரைக் கொன்றோமே என்று அவன் மனம் வருத்தப்பட்ட போது தன்னைக் கொல்ல வந்தவனைக் கொல்வது தவறல்ல என்று நினைத்து மனம் தேறினான். பிறகு கையிலும், உடலிலும் ஏதோ பசபசப்பு அரிப்பதை உணர்ந்து, அந்த வேவுகாரனின் இரத்தம் பீச்சியதால் ஏற்பட்டது என்பதை அறிந்ததும், நேராக ஆற்றை நோக்கிச் செல்லத் தலைபட்டான்.

ஆடைகளைக் களைந்து ஆற்று நீரில் குடைந்து நீராடித் துணிகளையும், அலசிப் பிழிந்து எடுத்து, ஈரத் துணியை மட்டும் அரையில் உடுத்திக் கொண்டு கரை மீது அவன் விரைவாக ஏறினான்.

மீண்டும் சண்டை நடந்த இடத்திற்கு வந்து ஒரு கணம் தயங்கி நின்றபோது, புதர் அருகே மரத்தின் அடித் தூரில் வேவுகாரனின் குதிரைக் கட்டப்பட்டிருப்பது நினைவுக்கு வந்தது. உடனே அங்கு சென்று அதை அவிழ்த்து அதன் மீது ஏறி அமர்ந்து கோவிலை நோக்கி விரைவாகச் செல்லலானான்.

அப்போது நடு இரவு ஆகி இருக்கும். எங்கும் இருள் குமைந்து கொண்டிருந்ததால் பாதையின் மீது நிதானித்துப் போக வேண்டி வந்தது. பலவித சிந்தனைகளும் குழப்பங்களும் அவன் மனதை வெகுவாகக் கலக்கிக் கொண்டிருந்தன. ஒருநாள் பொழுதுக்குள் எத்தனை நிகழ்ச்சிகள் நடந்துவிட்டன என்று எண்ணி வியந்தவாறு குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தான் அவன்.

Released by Maran's Dog. Toronto, Canada

நகர எல்லை வந்ததும் ஊர் நிசப்தமாகி விட்டது தெரிந்தது. விளக்கோ, வெளிச்சமோ, சந்தடியோ, சப்தமோ எதுவுமே புலனாகவில்லை. பெரிய பெரிய

கரிய நிழல்கள் படர்ந்த ஒரு வேதாள உலகத்தில் நுழைவது போல் அவனுக்குத் தோன்றியது.

வெளி வாயில்களைத் தாண்டிக் கோவிலின் ஆரிய பட்டாள் வாயிலை அணுகியதும், அதன் பெரிய கதவு மூடப்பட்டு இருப்பது தெரிந்தது.

ஒரு கணம் திகைத்துப் போய், குதிரையைச் செலுத்திக் கதவின் அருகே நிறுத்தியதும், உள்ளே ஏதோ அரவங்கள் எழுந்து கொண்டிருப்பது தெளிவாகக் கேட்டது.

உடனே அவன், "யாரங்கே? கதவைத் திறவுங்கள்! கதவைத் திறவுங்கள்!" என்று இடிபோல்கூக்குரலிட்டான்.

மதில் மேலே அப்போது ஒரு நெடிய உருவம் ஒரு நிழலாக எழுந்து நின்றது.

"யாரங்கே?" என்று அந்த உருவம் மேலிருந்து கீழ் நோக்கிச் சிம்ம கர்ஜனை செய்தது.

"நான் தான் குலசேகரன்!" என்று கூவினான்.

சில கணங்கள் வரை எந்தச் சப்தமுமில்லை. பிறகு மதிலின் மேற்புறம் திடீர் என்று பிரகாசமாகியது. யாரோ ஒருவர் ஒரு கொளுத்திய சூழ்ந்திக் கத்தையை உயரத்திலிருந்து கீழே விட்டெறிந்தார். அது விழுந்த வேகத்தில் பொறிகள் வீசிச் சிதறவே, குதிரை ஒரு துள்ளுத் துள்ளி நகர்ந்தது.

கடிவாளத்தை இழுத்து அதை அடக்கிய குலசேகரன் மதிலின் மேற்புறத்தை நோக்கிப் பார்வையைத் திருப்பினான்.

சூழ்ந்தியின் வெளிச்சத்தில் அவன் யார் என்பதை உறுதிப்படுத்திக் கொண்ட பஞ்சுகொண்டான், மதில் மேலிருந்து கொண்டு 'கடகட'வென்று சிரித்தார்.



"பிள்ளாய் குலசேகரா! வெறும் கையோடு போனாய் குதிரையைச் சம்பாதித்து வந்துவிட்டாயே!" என்று ஒரு உல்லாச நகைப்புடன் கூறினார்.

"ஆமாம் சுவாமி! டில்லி அரசர் நமக்குத் தந்த முதல் பரிசில் இது!" என்றான் குலசேகரன்.

"ஆகா! ஆகா! மெத்த மகிழ்ச்சி, தம்பி! வெகு நாழிகை திரும்பி வரவில்லையே என்று கவலைப் பட்டேன். இதோ கதவைத் திறக்கிறேன்" என்று கூறி மதில் மேலிருந்து கீழே இறங்கத் தொடங்கினார் பஞ்சுகொண்டான்.

சிறிது நேரத்தில் ஆரியபட்டாள் வாயிற் கதவு திறக்கப்பட்டது. கதவுகள் இரு பக்கமும் ஒருக்களித்தாற் போல் திறக்கப்பட்டிருப்பதைக் கண்டு குலசேகரன் குதிரையிலிருந்து கீழே குதித்து அதை நடத்தியவாறு உள்ளே சென்றான்.

தீவர்த்தி வெளிச்சத்தில் உள்ளே பார்த்தபோது நிலைவாயில் அருகே, கதவை ஒட்டினாற் போல் கற்சுவர் ஒன்று வேகமாக எழும்பிக் கொண்டிருப்பது தெரிந்தது. பரபரப்புடனும் சுறுசுறுப்புடனும் பலர் அங்கே வேலை செய்து கொண்டிருந்தார்கள்.

கையில் ஒரு தீவர்த்தியைப் பிடித்துக் கொண்டு பஞ்சுகொண்டான் அந்தக் கற்சுவரை ஒரே தாவலில் தாண்டி அவன் முன்னால் வந்து நின்றார்.

"வா குலசேகரா!" என்று கூறிய அவர், அவன் உள்ளே வந்ததும் வாயிற்கதவைத் தமது வலுமிகுந்த ஒற்றைக் கையால் இழுத்து மூடினார்.

குதிரையை இழுத்து அந்தச் சுவரைத் தாண்ட வைத்து உள்ளே வந்தான் குலசேகரன். பிறகு ஒரு தூணில் அதைக் கட்டிய பிறகு பஞ்சுகொண்டான் முன்பாக வந்து நின்றான்.

"குலசேகரா! என்ன நடந்தது? திருவரங்கன் யாதொரு குறைவுமின்றி அக்கரை சேர்ந்தாரா? நகரத்தார் ஊர்வலமும் அக்கரை போய்ச் சேர்ந்ததா? இரு ஊர்வலங்களையும் இரண்டாகப் பிரித்துத் தானே அனுப்பி இருக்கிறாய்?" என்று சரமாரியாகக் கேட்க ஆரம்பித்தார்.

நடந்ததை எல்லாம் குலசேகரன் விவரமாகக் கூறினான். கடைசியில் வேவுகாரனுடன் மோதி அவனைக் கொன்றுவிட்டுக் குதிரையைப் பறித்து வந்ததையும் விரிவாகக் கூறி முடித்தான்.

வேவுகாரனைப் பற்றிக் கேள்விப்பட்டதும் பஞ்சு கொண்டான் சற்று யோசனையில் ஆழ்ந்துவிட்டார்.

அவரைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த குலசேகரன், "சுவாமி!" என்று மெதுவாக அழைத்தான். பஞ்சுகொண்டான் திரும்பினார். "எனது தாயார் எப்படி இருக்கிறாள் சுவாமி! அவளை நான் உடனே போய்ப் பார்க்க வேண்டுமே! அவளை நான் வெளியில் சீக்கிரம் அழைத்துக் கொண்டு போக வேண்டுமே" என்று பரபரத்துக் கேட்டான்.

"குலசேகரா! பொறு! உன் தாயார் தக்க பாதுகாப்பில் இருக்கிறாள். எம்பெருமானடியார்களில் சிலர் அவளைக் கோவில் திருமடைப்பள்ளி அறையில் படுக்க வைத்துப் பேணி வருகிறார்கள். அவளுக்கு எந்தக் குறையும் நேராது. நாம் இப்போது வேறு காரியங்களை அவசரமாகக் கவனித்தாக வேண்டும்" என்றார் பஞ்சுகொண்டான்.

"என்ன காரியம் சுவாமி?" என்றான் குலசேகரன்.

"நாம் போரிடப் போகிறோம்" என்று கூறி இடிபோல் சிரித்தார் பஞ்சுகொண்டான்.

குலசேகரனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.



"சுவாமி! என்ன சொன்னீர்கள்? போரா? நாமா? நடக்கக் கூடிய காரியமா இது! பெருங்காற்றைத் தாம்பால் கட்ட முடியுமா?" என்று கேட்டான் அவன்.

பஞ்சுகொண்டான் அவனை ஆழமாகப் பார்த்தார்.

"ஏன் முடியாது, தம்பீ? பயப்படாதே! நம்மால் முடியும்! போர் என்றால் நேருக்கு நேரான போர் அல்ல! ஒரு முற்றுகைக்கு நாம் ஆட்படப் போகிறோம்" என்றார் பஞ்சுகொண்டான்.

"அதுகூட நம்மால் முடியுமா சுவாமி!"

"மனம் இருந்தால் முடியும்" என்றார் அவர்.

குலசேகரன் அவரை ஆச்சரியத்துடன் பார்த்தான்.

"சுவாமி! நமக்குப் படைபலம் ஏது? ஆள் பலம் ஏது? இது நடக்கக் கூடிய காரியமா, சுவாமி? எல்லாவற்றையும் சரியாக யோசித்தீர்களா?" என்றான்.

பஞ்சுகொண்டான் ஒரு கணம் மௌனத்தில் ஆழ்ந்தார். அவர் பார்வை அங்கே பட்டாள் வாயிலை அடைத்துக் கொண்டு எழுகிற கல்சுவர் மீது சிறிது நேரம் பதிந்தது. பத்துபேர் வரிசையாக நின்று கொண்டு கற்களைக் கொடுத்துக் கொண்டிருக்க, நான்கு பேர் அவைகளை வைத்துச் சாந்துபூசிச் சுவர் எழுப்பிக் கொண்டிருந்தார்கள்.

மற்றொரு இடத்தில் ஒரு பெரிய அம்மிக்கல்லின் மீது பலர் சாந்து அரைத்துக் கொண்டிருந்தார்கள். எங்கும் வேலை மளமளவென்று நடந்து கொண்டிருந்தது.

"குலசேகரா!" என்று ஆழ்ந்த யோசனையிலிருந்து விடுபட்டவர் போல் அழைத்தார் பஞ்சுகொண்டான். அவரது குரல் தழதழத்து இருந்தது.

"சொல்லப் போனால் இது நம் மானத்திற்குரிய விஷயம் குலசேகரா! நம் மானத்திற்குரியது மட்டுமல்ல! நகரத்தின் மானத்திற்குரியதாகும். குலசேகரா! உனக்கு நன்றாகத் தெரியும்! இந்த நாட்டை ஐந்து துண்டுகளாகப் பிரித்துக் கொண்டு ஐந்து பாண்டியர்கள் ஆளுகிறார்கள். இவர்களிடையே ஒற்றுமைகிடையாது. உறவுக்காரர்களே ஆனாலும் ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஒரு பொதுவான ஆபத்து வந்த போது கூட அவர்கள் ஒன்று கூடாமல் இருக்கிறார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் வந்த டில்லிப்படைகள்* நாட்டை எவ்வளவு சின்னா பின்னப்படுத்தினர் என்பதை அறிந்தும் கூட, இவர்கள் ஒன்று கூடாமல் இருக்கிறார்கள். இதுதான் என்னை மிகவும் வருத்தத்திற்குள் ஆழ்த்தியிருக்கிறது. இது என் மனத்தையும் பாதிக்கிறது" என்று கூறி ஒரு கணம் கண்ணை மூடினார் பஞ்சுகொண்டான்.

அவர் சிலையாக நிற்கும் நிலையிலிருந்தே அவரது துயரத்தின் ஆழத்தைக் கண்டுகொண்ட குலசேகரன் வெகுவாகக் கலங்கி நின்றான். பஞ்சுகொண்டான் உணர்ச்சி தாளாமல் பல கணங்கள் மௌனமாக நின்றார். பிறகு தழுதழுத்த குரலில் மேலே தொடர்ந்தார்.

"தம்பீ, இது நமக்கு அவமானம்! பெரிய அவமானம்! யாதொரு எதிர்ப்பும் இல்லாமல் டில்லிப் படைகள் இந்தத் தெற்கு நாடு முழுவதிலும் சூறையாடிவிட்டுச் செல்வதா? அதைப் பார்த்து நாம் வாளாவிருப்பதா? ஏற்கெனவே முன்பு ஒரு முறை அவை நம்மைச் சூறையிடுவதைப் பார்த்துவிட்டுப் பேசாமலிருந்தோம். இனியும் அப்படி இருப்பதா? நமது ஜனங்கள் யாவரும் வாயில்லாப் பிராணிகளைப் போல் எந்தக் கொடுமையையும் ஏற்றுக் கொள்வதா? இறை* வாங்கும் அரசர்கள் நம்மைக் காக்க வேண்டியதில்லையா? நம்மை நாமே பாதுகாத்துக் கொள்ளத்தான் கடமைப்பட்டோமா? என்

* கி.பி. 1311ல் நடந்த மாலிக்காபூரின் படை எடுப்பு.

* இறை - வரி



நெஞ்சம் குமுறுகிறது தம்பீ! என்னால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை?" என்று கூறிய அவர் உணர்ச்சிப் பரவசராக மாறித் தம் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

அவரது தீவிரத்தையும், நாட்டின் மீது அவர் கொண்டிருக்கும் ஆழமான அன்பையும் கண்டு குலசேகரன் மனம் நெகிழ்ந்து நின்றான்.

அவரது நிலையை உணர்ந்து, மனத்தில் பெருத்த வேதனைப்பட்ட குலசேகரன், "சுவாமி!" என்று ஈரம் பொங்கும் குரலில் அவரை அழைத்து, "தங்கள் நினைவுகள் யாவும் உன்னதமானவை! அவற்றை நிறைவேற்றி வைப்பதில் என்னால் ஆனதைச் செய்கிறேன்" என்று கூறினான்.

பஞ்சுகொண்டான் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு தெளிந்த பார்வையுடன் அவனை நோக்கினார்.

"குலசேகரா! நான் உன்னிடம் என்ன சொன்னேனோ அதைத்தான் அந்த ஐந்து பாண்டியர்க்கும் சொல்ல விழைந்தேன். வீரபாண்டியன், விக்கிரம பாண்டியன், பராக்கிரம பாண்டியன், சுந்தர பாண்டியன், குலசேகர பாண்டியன் ஆகிய ஐவருக்கும் தனித்தனித் திருமுகம்* எழுதி அனுப்பி இருக்கிறேன். பாண்டியர்க்கு மட்டுமல்ல, ஒய்சள மன்னர் வீரவல்லாளருக்கும் திருமுகம் அனுப்பி இருக்கிறேன். இந்தத் *திருவரங்கத் திருவைக் காப்பாற்றுவது உங்கள் எல்லாரது கடமை. இந்த விஷயத்தை முன்னிட்டாவது எல்லாரும் ஒன்று சேருங்கள் என்று தாழ்ந்து விண்ணப்பம் விடுத்து இருக்கிறேன்" என்றார் பஞ்சுகொண்டான்.

"அவர்கள் உதவி செய்வார்கள் என்று எதிர்பார்க்கிறீர்களா?" என்று கேட்டான் குலசேகரன்.

* திருமுகம் - ஓலை

* திருவரங்கத் திரு - திருவரங்கம் என்கிற செல்வம்

"விண்ணப்பம் விடுத்துள்ளேன். பலன் கிடைத்தால் உண்டு. இல்லாவிட்டால் இல்லை. கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் நான் இந்த ஆக்கிரமிப்பை எளிதில் விட்டுவிடப் போவதில்லை. என்னால் முடிந்த வரை தடுத்து நிறுத்தப் போகிறேன்" என்றார் பஞ்சுகொண்டான்.

அவரது உள்ளார்ந்த ஆர்வத்தையும், கட்டுத் தெறித்துக் காட்டு வெள்ளம் போல் வரும் வீரத்தையும் கண்டு குலசேகரன் மெய்மறந்து நின்றது மட்டுமின்றி அவர் ஒரு உன்னதமான மனிதர் என்றும் அவருக்கு உதவி செய்வது தனது கடமை என்றும் நினைத்துத் தீர்மானித்தான்.

அடுத்த நாழிகையில் பஞ்சுகொண்டானும் குலசேகரனும் கோவிலின் மூன்றாவது திருச்சுற்றுக்குள் அங்குமிங்கும் காற்று வேகத்தில் அலையத் தொடங்கினார்கள். அவர்களுடன் களைப்பையும் பொருட்படுத்தாமல் பல இளைஞர்களும் ஊர்ப் பெரியவர்களும் அலைந்தார்கள்.

ஆரியபட்டாள் தெற்கு வாயிலைக் கல் சுவரால் மூடிய பிறகு வடக்கு வாயிலுக்குச் சென்று, அதையும் வேகமாகச் சுவரிட்டு மூடினார்கள். வருகிற அந்நியர் படை வடக்கு வாயிலில்தான் முற்றுகையை ஆரம்பிக்கும் என்று எதிர்பார்த்து, அந்த வாயிலில் அவர்கள், அதிகக் கவனம் செலுத்தத் தொடங்கினார்கள்.

வடக்கு வாயில் அருகிலுள்ள மதில் மேல் ஏறுவதற்கு வசதியாகப் பெரிய மரப் பலகைகளைக் கொண்டுவந்து அடுக்கி மண்ணையும் குவித்து ஒரு சாரத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். மதில்கள் மீது பரண்களைக் கட்டி அவைகளில் ஓலைக் கட்டுகளையும் வைக்கோல் கட்டுகளையும் அடுக்கி வைத்தார்கள். சில பரண்களில் கருங்கற்களை ஏராளமாகக் குவித்து வைத்தார்கள்.



வாயிலின் அருகே பெரிய காளவாய்போல் நான்கு பெரிய அடுப்புகளைக் கட்டினார்கள். அவை மீது ஆழமும் அகலமும் உள்ள வெண்கல உருளிகளை ஏற்றி வைத்தார்கள். அடுப்புகளுக்கு இரு பக்கங்களிலும் வரிசையாக நெய், எண்ணெய்க் குடங்களை நூற்றுக் கணக்கில் அடுக்கிவைத்தார்கள்.

போராட்ட சித்தமாக வந்திருக்கும் இளைஞர்களுக்குத் தனித்தனியே வில், வேல் முதலியவற்றில் நூறு நகரப்படை வீரர்கள் பயிற்சி அளித்தார்கள்.

ஒரு ஓரத்தில் பலர் நூலேணிகள் முடைவதில் அவசரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

இவ்விதம் அந்த நடு இரவு நேரத்தில் அந்தத் திருச்சுற்றுக்குள் ஒரு பெரிய இயக்கமே நடந்து கொண்டிருந்தது.

# 7

அந்த சோதனையான தினத்தின் மாலையில் இருந்தே பஞ்சுகொண்டானுக்கு ஒரு லட்சிய வெறி தோன்றிவிட்டது. திருவரங்கம் என்னும் திருவை எப்படியும் கட்டிக் காக்க வேண்டும் என்று ஒரு பெரும் துணிவு மனத்தில் பிறந்துவிட்டது.

அதற்குப் பல காரணங்கள் இருந்தன.

முக்கியமாக ஜனங்களில் பெரும்பாலோர் அரங்கனுடன் நகருக்கு வெளியே போய்விட்டாலும், ஆயிரக்கணக்கானவர் கோவிலுக்குள்ளேயே தங்கி விட்டார்கள்.

இவர்களில் பலர் கோவிலின் மூலவரான பெரிய பெருமாளை மனதார, நெஞ்சிழிய, உளம் உருக நேசிப்பவர்கள், அவர்களுக்கு மூலவர் வெறும்

கல்லாலோ, சுதையாலோ ஆன வடிவமே அல்ல. அரங்கனின் சான்னித்யம் நிறைந்த சொரூபந்தான் அவர். அதை அவர்கள் உறுதியாக நம்பினார்கள்.

அந்த மூலவர் மீது ஆறாக் காதலை வைத்து அனுதினமும் அவரையே நினைந்து, அவரது திருப் பெயரையே உச்சரித்து, ஒரு பரவசமான பிரேமைக் கடலில் மூழ்கியிருக்கும் அவர்களுக்கு, புறத்தே வரும் படையெடுப்போ, வேறு ஆபத்துகளோ எந்தவிதச் சிறு சலனத்தையும் உண்டு பண்ணாதது ஆச்சரியமல்ல!

"ஓ! சோதனையா? ஆபத்தா? எங்களது பிரேமைக்கு உரிய காதலர் எமக்கு அனுப்பிய இன்பப் பரிசில் இது" என்று நினைத்து, துன்பத்தையே இன்பமாக மாற்றிக் கொள்ளும் ரசவாதம் தெரிந்தவர்களாக அவர்கள் இருந்தார்கள்.

அப்படிப்பட்டவர்களது நம்பிக்கையை குலைப்பது முடியாது என்பதை பஞ்சுகொண்டான் நன்றாக அறிந்து இருந்தார். எனவே, படையெடுப்பு நடந்தாலும் அவர்கள் கோவிலுக்கு உள்ளேயேதான் இருப்பார்கள் என்பதை அவர் பூரணமாக உணர்ந்துவிட்டார்.

அவர்களுக்கு அடுத்தபடியாக, அதே நம்பிக்கை யில் ஆழ்ந்திருந்த திறையப் பெண்மணிகளும் கோவில் உள்ளே தங்கிவிட்டார்கள். அவர்கள்தான் எம்பெருமான் அடியார்கள்! அரங்கனது பார்வைக்கு சுகம் அளிப்பதற் காக அவர் முன்னிலையில் இனிய நாட்டிய வகைகளை ஆடி உகப்பிக்கும் அவர்கள், அரங்கனைவிட்டு என்றும் அகலமாட்டோம் என்ற ஒரே தீவிர சிந்தையை உடையவர்களாக உள்ளே தங்கிவிட்டார்கள்.

அவர்களையும் கோவிலைவிட்டு அகற்றுவது முடியாது என்பதை உணர்ந்திருந்தார் பஞ்சுகொண்டான்.

கடைசியாக இரக்கத்திற்கும், கருணைக்கும் பாத்திரமாக மற்றொரு குழுவினரும் கோவிலுக்குள் தங்கி இருந்தார்கள்.



உடல் நோயாலோ, அல்லது வேறு கோளாறி னாலோ பீடிக்கப்பட்ட முதியவர்கள் பலர் நகரத்திற்கு வெளியே செல்லத் திறன் இல்லாது இருந்தார்கள். அவர்களில் பலரை, அவர்களது உறவினர்கள் கோவிலிலேயே விட்டுச் சென்றுவிட்டார்கள். வேறு வழி இல்லாமல் அவர்களும் உள்ளேயே தங்க வேண்டி வந்தது.

ஆக, தியாகத்தினால் தஞ்சம் அடைந்தவர் களும், தள்ளாமையால் தஞ்சம் அடைந்தவர்களும் பிரேமையினால் தஞ்சம் அடைந்தவர்களும் கோவில் முழுவதிலும் நிரம்பி இருந்தார்கள்.

இவர்கள் யாவரையும் காப்பாற்றுவது தமது பொறுப்பு என்று எண்ணிய பஞ்சுகொண்டான் அதற்காக அவசியம் போராட வேண்டும் என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டார்.

இதற்காகத்தான் மாலையில் இருந்தே ஒரே முனைப்பாக அவர் வேலை செய்யத் தொடங்கி இருந்தார்.

நகரப் படையினர் நூறு பேர்கள் இதில் அவருக்குப் பெரும் உதவி செய்தார்கள்.

அரங்கனது ஊர்வலத்தை நகருக்கு வெளியே அனுப்பி முடித்தபிறகு, மற்றொரு சிறு ஊர்வலத்தை உண்டாக்குவதிலும் அவர் உடனே ஈடுபட்டார். திருவரங்க நாச்சியாரின் உற்சவப் பேரத்தை* ஒரு பல்லக்கில் வைத்து, அவரது அணிமணி ஆபரணங்களை எல்லாம் பெட்டகங்களில் வைத்து, எல்லாவற்றுக்கும் காவலாகவும் பொறுப்பாகவும் ஆட்களை நியமித்து, யாவரையும் திருக்காவேரிக்கரை வழியாக மேற்கு நோக்கிப் போவதற்கு உத்தரவு வழங்கினார். இது முடிந்த பிறகு, உள் விஷயங்களில் அவர் முழுதுமாகக் கவனம் செலுத்தத் தலைப்பட்டார்.

* உற்சவ பேரம் - உற்சவ விக்கிரகம்

நான்காவது திருச்சுற்றுக்குள் இருந்த கொட்டாரத்தில் இருந்து தானியங்கள் யாவற்றையும் மூன்றாவது சுற்றுக்குள்* கொண்டுவர ஏற்பாடு செய்தார். வரிசையாக ஆட்களை நிறுத்தி, கூடை கூடையாகக் கைமாற்றம் செய்வதன் மூலம் கொட்டாரம் முழுவதையும் ஒரு நாழிகைக்குள் அவர் வெறுமை செய்துவிட்டார்.

பிறகு வெளிப்புறங்களிலிருந்து கொம்பு, கட்டை, விறகு, சுள்ளி வகைகளைச் சுமைச் சுமைகளாகக் கொண்டுவந்து உள்ளே குவிக்கவைத்தார்.

இன்னும் அம்பு முனைகள், அவற்றைத் தாங்குவதற்கான குச்சிகள், வேல்கள், கொடுவாள்கள், சூர்க் கத்திகள் யாவற்றையும் உள்ளே அணி அணியாகச் சேகரித்து வைத்தார்.

யந்திரம் போல் இயங்கி இவை யாவற்றையும் செய்து முடிப்பதற்குள் நடுநிசியாகிவிட்டது. அதன் பின்னர் குலசேகரனும் அவருடன் கலந்து கொள்ளவே, அவர்கள் இருவரது மேற்பார்வையின் கீழ் திருவரங்கம் கோவில் விரைவில் ஒரு தற்காப்பு அரணாக அந்த இரவுப் பொழுதில் மாறிக் கொண்டு இருந்தது.

நடுநிசிக்கு மேல் ஒரு நாழிகைச் சென்றிருக்கும். மூன்றாவது திருச்சுற்றுக்குள் நடந்து கொண்டிருந்த பணிகள்யாவும் ஒருவாறு நிறைவு பெறும்போது, மிகவும் களைப்படைந்த குலசேகரன், துலா மண்டபத்தின் படிக்கட்டில் கால்களை நீட்டி நீவிக்கொண்டு அமர்ந்து கொண்டான். சிறிது நேரம் கூட ஆகியிருக்காது.

"தம்பீ! களைத்துவிட்டாயா?" என்ற குரல் கேட்டுத் தலை நிமிர்ந்தான். பஞ்சுகொண்டான் சிரித்தவாறு அவன் முன் நின்று கொண்டிருந்தார்.

* மூன்றாவது சுற்றைத்தான் அவர் கோட்டையாகப் பயன் படுத்தத் தீர்மானித்திருந்தார்.



களைப்போ, சோர்வோ சிறிதும் இல்லாதவராய், பார்ப்பதற்குப் பசுகு பசுகுவென்று பசுந்தளிர் போல் மின்னுபவராய் அவர் நிற்பதைப் பார்த்ததும் அவனுக்கு ஆச்சரியமே ஏற்பட்டது.

"சுவாமி!" என்று எழுந்த குலசேகரன், "வேலைகள் யாவும் முடிந்துவிட்டனவா, சுவாமி? தாங்கள் சிறிது களைப்பாறலாமே?" என்று கூறி அவரை நிமிர்ந்து நோக்கினான்.

"முடிந்து விட்டனவா?" என்று வியப்புடன் அவனையே திருப்பிக் கேட்டார் பஞ்சுகொண்டான். பிறகு "இப்படி வா தம்பி!" என்று கூறி சிரித்தவாறு அவனை அழைத்துக் கொண்டு முன்னால் நடக்கலானார்.

நாழிகை வட்டில்* வாயிலைக் கடந்து திருவரங்கனது சந்நிதியை நோக்கி விரைவாகச் சென்றார் பஞ்சுகொண்டான். குலசேகரன் அவரைப் பின் தொடர்ந்து சென்றான்.

உள்ளே சந்நிதிக்குள் நிறைய தீவர்த்திகள் ஒளிர்ந்து கொண்டிருந்தன. அதன் பிரகாசமான வெளிச்சத்தில் பெரியவர்களும், இளைஞர்களும் ஏதோ ஒரு அவசரப் பணியில் ஒரே மூச்சாக அங்கே ஈடுபட்டிருப்பது தெரிந்தது.

இவர்கள் என்ன செய்கிறார்கள் என்ற கேள்வி குலசேகரன் மனத்துள் எழுந்த போது, அழகிய மணவாளன்* திருமண்டபத்திற்குள் பஞ்சுகொண்டான் விரைவாக ஏறிக் கொண்டிருந்தார்.

*நாழிகையைக் காட்டும் வட்டிலை அந்நாளில் அந்த வாயிலில் வைத்திருந்தார்கள். தண்ணீரால் இந்த வட்டில் இயங்கியது என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

* சந்நிதி முன்னால் உள்ள மண்டபத்தின் பெயர்.

அவரைப் பின்பற்றி குலசேகரனும் அந்த மண்டபத்தில் ஏறி, கருவறையைப் பார்த்தபோது ஒரு அதிர்ச்சியும் அதிசயமும் ஒருங்கே அவனைத் தாக்கலாயின.

கருவறையின் முன்னால் உள்ள *குலசேகரன் படியின் மேல் ஒரு கல்சுவர் வெகு வேகமாக எழுந்து கொண்டிருந்தது. அதைக் கட்டுவதில் அங்குள்ளவர்கள் அனைவரும் ஒரே முனைப்பாக ஈடுபட்டிருந்தார்கள். கோவில் துரந்தரரான திருரங்கராஜர் அந்தப் பணியை தாமே முன்னின்று செவ்வையாக நடத்திக் கொண்டு இருந்தார்.

நடக்கும் கொத்துவேலையில் வெகு தீவிரமாகவும் அவசரமாகவும் ஈடுபட்டிருந்தவர் வேதாந்த தேசிகர் என்னும் வைணவப் பெரியவர்.

தலையில் உத்தரியத்தால் பாகை கட்டிக் கொண்டு, கச்சத்தைத் தூக்கி இடுப்பில் செருகிக் கொண்டு, ஒரு திருக்கரத்தால் கல்லை வைத்து, மற்றொரு திருக்கரத்தால் சாந்து எடுத்துப் பூசி, கை தேர்ந்த ஒரு கொத்தனாரைப் போல் மளமளவென்று வேலை செய்து கொண்டிருந்தார் அவர்.

அவரது திருக்கரம்பட்டு கல் சுவர் வெகு வேகமாக எழுந்து கொண்டிருந்தது.

கருவறையின் வாயிலை அடைத்துக் கொண்டு எழுந்த அந்தக் கற்சுவரின் பின்னால், அரவணையில் துயிலும் அரங்கனின் அருள்மிகு உருவம் சிறிது சிறிதாக மறைந்து கொண்டிருந்தது.

அந்தக் காட்சியைக் கண்ட பல முதியவர்கள் கைகூப்பிக் கண்ணீர் உகுத்த வண்ணம் நின்றார்கள்.

வளர்ந்து வந்த அந்தச் சுவர் சிறிது நேரத்தில் முக்கால் உயரத்தையும் தாண்டி, அதிவிரைவில் முழு

* சந்நிதி வாசலிலுள்ள படிக்குக் குலசேகரன் படி என்று பெயர்.



உயரத்தையும் மூடிவிடவே அங்கிருந்த எல்லோரது கண்களிலிருந்தும் குபுகுபுவென்று நீர்வடியலாயிற்று.

நடப்பதை எல்லாம் இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த குலசேகரன், "சுவாமி! இது என்ன?" என்று பஞ்சுகொண்டானை மெதுவாக வினவினான்.

"திருவரங்கனுக்குத் தினமும் வழிபாட்டு வேளை களில் துணித் திரையைப் பரிமாறுவதில்லையா? இன்று கல்திரைப் பரிமாறுகிறார்கள்!" என்று கூறிய பஞ்சு கொண்டான் தம் கண்களை ஒரு விரலால் துடைத்துக் கொண்டார்.

பிறகு வெளியே விரைவாக வந்த அவர், நாழிகை வட்டில் வாயிலைக் கடந்ததும் சிறிது நேரம் தம்மையும் அறியாமல் கண்களை மூடி நின்றுவிட்டார்.

"சுவாமி!" என்றான் குலசேகரன் மெதுவாக.

பஞ்சுகொண்டான் கண்களை விழித்தார்.

"குலசேகரா!" என்றார் அவர் தழுதழுத்த குரலில்.

"சுவாமி! பெருமாளின் கருவறையை அடைத்து விட்டீர்கள். தாயாரின் கருவறை?" என்றான் குலசேகரன்.

எதிர்ப்புறம் உள்ள இருளை ஊடுருவுவதுபோல் பார்த்துக் கொண்டிருந்த பஞ்சுகொண்டான், "அங்கேயும் எல்லாம் நடந்துவிட்டன. நாச்சியாரின் மூலவரை அருகிலுள்ள வில்வ மரத்தடியில் மண்ணுக்குள் மறைத்து வைத்துவிட்டோம். இனிமேல் நடப்ப தெல்லாம் நடக்கட்டும்!" என்றார் கரகரத்த குரலில்.

பிறகு அவர் மௌனமாக நடக்கலானார்.

"சுவாமி! ஒரு கேள்வி கேட்கலாமா?" என்றான் குலசேகரன் தயக்கத்துடன்.

"கேள், தம்பி?" என்றார் அவர்.

"இப்படிச் செய்வதன் அர்த்தம்தான் என்ன?" என்றான் அவன்.

"அர்த்தமா?" என்றார் அவர். "ஒன்றுமில்லை! வரும் டில்லிப் படைகள் பொன்னுக்கும், மணிக்கும், ஆபரணங்களுக்கும் ஆசைபட்டுத்தான் தென்னாட்டை நோக்கி வந்திருக்கின்றன. கடந்த படையெடுப்பின் போது தெரிய வந்த உண்மை இது! இம்முறையும் அவர்கள் நம் கோவிலுக்குள் வந்து இந்த இடங்களில் எல்லாம் தேடும் போது, நமது நம்பிக்கைக்குரிய வடிவங்களுக்கு ஏதாவது பங்கமோ, குறைவோ நேர்ந்துவிடக் கூடாது என்பதற்காகத் தான் இப்படிச் செய்கிறோம்!" என்றார் அவர்.

பின்னர் அவர் மௌனமாக மூன்றாவது திருச்சுற்றுக்குள் நுழையவே, குலசேகரனும் அவரைப் பின்தொடர்ந்து நடக்கலானான்.

கோவில் கருவறையை மூடி மறைத்த சிறிது நேரத்தில் வேதாந்த தேசிகர் களைப்புடன் சந்நிதியின் முன்பாக உள்ள அழகிய மணவாளன் மண்டபத்தில் வந்து அமர்ந்து கொண்டார்.

திருமேனி மீதுள்ள வியர்ப்பை உத்தரியத்தால் ஒற்றிக் கொண்டு தமது திருக்கண்களை மூடிக் கொண்டார்.

அவர் மனத்துள்ளே அரங்கனைக் குறித்து ஒரு மானசீகமான பிரார்த்தனை உருக்கமாக எழுந்து கொண்டிருந்தது.

அரங்கபுரீசரே! உமக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நிலைக் கிரகண காலத்தில் சந்திரன் மீது விழும் நிழலைப் போல அற்ப நேரமே நிலைத்திருக்கட்டும்!




மீண்டும் நீர் எல்லா மங்களத்தையும் உடைய உமது பழைய உன்னத நிலையை அடைவீராக!' என்று நெக்குருகப் பிரார்த்தனை செய்தார்.

அவர் கண்ணை விழித்தபோது அவர் அருகே திருரங்கராஜர் நின்று கொண்டிருந்தார்.

"அடியேன்!" என்று உடனே சொல்லிக் கொண்டு எழுந்து நின்றார் வேதாந்த தேசிகர்.

"சுவாமி! நேரமாகிவிட்டது! தாங்கள் கோவிலை விட்டு உடனே வெளியில் எழுந்தருள வேண்டும். தங்களுக்காகத் தென்திருக்காவேரியின் எதிர்கரையில் அரங்கனது ஊர்வலம் ஒரு மறைவிடத்தில் காத்து இருக்கிறது!" என்றார் திருரங்கராஜர்.

வேதாந்த தேசிகர் அவரை ஆழ்ந்து பார்த்தார். "சுவாமி! இங்கே இவ்வளவு பெரியவர்கள் கூடி, அரங்கனே தஞ்சம் என்று இருக்கும்போது என் ஒருவனை மட்டும் நான் காத்துக் கொள்வது அவ்வளவு முக்கியமா? எனக்கு இதில் விருப்பமில்லை" என்றார் வேதாந்த தேசிகர்.

உடனே ஒரு பெரியவர் இடைமறித்து, "சுவாமி! தாங்கள் எங்களைப் போல் ஒருவர் அல்லர்! இந்த வைணவ சமயத்தை நிலை நிறுத்துவதற்காக வந்துள்ள உன்னத ஆசிரியர்களில் ஒருவர்! நாங்கள் மறைந்தால் எங்களைப் போல் லட்சம் பேர் தோன்றுவார்கள்! ஆனால் தாங்கள் மறைந்தால் தங்களைப் போல் ஒரு ஆசிரியர் கிடைப்பது துர்லபம்! ஆகையால் தாங்கள் கோவிலைவிட்டுப் போவதுதான் உசிதம்! தாங்கள் மதிலைவிட்டுக் கீழிறங்கிச் செல்ல நூலேணி சித்தமாக இருக்கிறது!" என்றார் விநயத்துடன்.

"இல்லை, சுவாமி!" என்றார் வேதாந்த தேசிகர் உருக்கத்துடன். "எனக்கும் அரங்கனை விட்டு

வெளியேற விருப்பம் இல்லை. கோவிலில் இருப்பதைத்தான் நான் பெரிதும் விரும்புகிறேன்" என்றார் உறுதியுடன்.

பிறகு அங்குள்ள பெரியவர்களுக்கும் தேசிகருக்குமிடையே ஒரு சிறிய விவாதம் எழத் தொடங்கியது.

இந்தப் பேச்சுகள் நடந்து கொண்டிருக்கும் நேரத்தில் கோவிலின் மூன்றாவது திருச்சுற்றில் பஞ்சுகொண்டானும், குலசேகரனும் மௌனமாக நடந்து கொண்டிருந்தார்கள்.

மதிலின் ஒருபுறத்தில் முளைகளை அடித்து அதில் நூலேணிகளைக் கட்டும் பணியில் பலர் ஈடுபட்டு இருந்தார்கள். அதை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்த போது, திடீரென்று வடக்கு வாயில் முனையிலிருந்து முரசு அடிக்கும் அரவம் கேட்டது.

திடுக்கிட்ட பஞ்சுகொண்டான், "குலசேகரா, ஆபத்தைக் குறிக்கும் முரசு இது! வா! உடனே போகலாம்!" என்று கூறிக்கொண்டு வடக்கு வாயிலை நோக்கி ஓட ஆரம்பித்தார்.

தலைதெறிக்க இருவரும் ஓடிச் சென்று வடக்கு வாயிலை அடைந்தார்கள். "யாரப்பா அங்கே?" என்று மதில் மேல் உள்ள பரணைப் பார்த்து இரைந்தவாறு கேட்டார் பஞ்சுகொண்டான்.

பரணிலிருந்து பரபரப்புடன் வெளிவந்து, மதில் மேல் நின்ற வீரன் ஒருவன், "சுவாமி! டில்லிப் படை வந்து கொண்டிருக்கிறது. ஆற்றைக் கடந்து கொண்டிருக்கிறது" என்றான் மூச்சு இழைக்க.

"யார்? குறளன் சேதி கொணர்ந்தானா?" என்றார் பஞ்சுகொண்டான்.



"ஆமாம் சுவாமி! இதோ மதிலின் மறுபுறத்தில் அவர் நிற்கிறார்" என்றான் வீரன்.

"குறளனை மீண்டும் ஆற்றின் கரையோரம் பதுங்கி இருக்கச் சொல்! கரையின் மேல் டில்லிப் படையின் முதல் அணி கால் வைத்ததும் மறுபடியும் வந்து தெரிவிக்கச் சொல்" என்று கூறிய பஞ்சுகொண்டான் ஒரு ஆத்திரத்துடன், "குலசேகரா! சோதனை தொடங்கி விட்டது. எல்லோரையும் ஆயத்தம் செய்!" என்று கத்தினார்.

# 8

வடகாவேரிக் கரைக்குத் திரும்பிப் போகும்படி உத்தரவு இடப்பட்ட குறளன் மீண்டும் ஆற்றை அடைந்தான்.

அப்போது விடிவதற்கு அரை நாழிகைக்கு மேல் இருக்கும். இருள் இன்னும் நீங்கவில்லை.

ஆவலுடன் ஆற்றுப் பகுதியைப் பார்த்த போது டில்லிப் படைகள் ஏற்கெனவே நீருள் இறங்கி ஒரு சலசலப்பை ஏற்படுத்தியிருப்பதை அவன் உணர நேர்ந்தது.

அவை எவ்வளவு தூரம் வந்துவிட்டன என்பதை இருட்டில் அவனால் ஊகிக்க முடியவில்லை.

ஆற்றில் உள்ள கொண்டைக் கோல்களை எல்லாம் பஞ்சுகொண்டானின் உத்தரவின் பேரில் மாலையிலேயே வீரர்கள் நீக்கிவிட்டார்கள். எனவே எதிரிப் படைகள் ஆழமில்லாத இடங்களைக் கண்டுபிடித்துக் கரையேறுவதற்கு வெகுநாழிகை ஆகும் என்று அவன் தீர்மானித்தான்.

கால்களைத் துவைத்துக் கொண்டு வெகுநேரம் நின்ற போது வைகறையின் முதல் ஒளி வானத்தை வீறிக் கொண்டு மேலே படரத் தொடங்கியது.

அது பரப்பிய மினுமினுப்பில் உற்று நோக்கிய போது ஆற்றின் திருவரங்கக்கரை மீது முதல் அணி வீரர்கள் தங்கள் குதிரைகளுடன் தண்ணீர் சொட்டச் சொட்ட ஏறி நிற்பது தெரிந்தது.

அடுத்த கணமே குறளன் நகரத்தை நோக்கிப் பறக்கலானான்.

ஆற்றின் கரையில் முதன் முதலாக டில்லிப் படையின் நூற்றுக்கணக்கான குதிரை வீரர்கள் ஏறினார்கள். ஆற்றின் ஆழமில்லாத பகுதிகள் அதற்குள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டதால், அந்த வழியாக மற்ற அணியினரும் வளைந்து சென்று கரையேறலானார்கள்.

படைகளின் நீளம் அளவிறந்ததாய் நீண்டு எதிர்க்கரை வரை சென்று அதற்கு அப்பாலும் எங்கேயோ முடிவில்லாமல் போய்க் கொண்டிருந்தது.

கரையேறிய படைகள் சீராகச் செல்லத் தொடங்கிய வுடன், "துதும் துதும்" என்று காது பிளக்க நகராக்களை அடித்துக் கொண்டு பறையடிப்போர் முன்னால் நடை போட ஆரம்பித்தார்கள்.

அவர்களை அடுத்தாற்போல் ஒய்சளப் போர் வீரர்கள் நூறு பேர் குதிரை மீது வாட்டமான முகங்களுடன் சென்று கொண்டிருந்தார்கள். டில்லிப் படைகளுக்கு வழிகாட்டுவதற்காக அவர்கள் அவ்விதம் முன்னால் சென்று கொண்டிருந்தார்கள்.

டில்லி சுல்தானுக்குக் கப்பம் கட்டும் நாடாக ஒய்சளம் இருந்ததால் இப்படி வழிகாட்டும் நிர்ப்பந்தம் அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது.



அவர்களை அடுத்தாற்போல் உயரமான கோலைத் தூக்கிக் கொண்டு ஒருவன் வெகு கம்பீரமாக நடந்து சென்றான். அவனது கோலின் நுனியில் காட்டெருமை வாலின் *குஞ்சம் ஒன்று செருகப்பட்டிருந்தது.

அதை அடுத்து நூற்றுக்கணக்கானவர்கள் கைகளில் மண்வெட்டிகளோடு நடந்து வந்தார்கள். போகும் வழியில் உள்ள பள்ளங்களைத் தூர்த்தும், இடங்களை விரிவு படுத்தியும் வழியைச் செப்பனிட்டவாறு அவர்கள் முன்னேறினார்கள்.

அவர்களுக்குப் பின்னால் ஆயிரக்கணக்கில் குதிரை வீரர்கள் மிக மிடுக்குடன் ஆரோகணித்து வந்தார்கள்.

இடுப்பில் வாளும், தோளில் வில்லும் அம்புக் கூடும் தரித்திருந்த அவர்கள் உடம்பை மறைத்துக் கவசங்கள் பூண்டிருந்தார்கள்.

அவர்களை அடுத்து ஒட்டகங்கள் ஏராளமாக நடந்துவந்தன. அவை ஒவ்வொன்றின் மீதும் நிறையச் சுமைகள் ஏற்றப்பட்டிருந்தன.

நூற்றுக்கணக்கான சுமைகளில் பொன், வெள்ளி, நாணயங்கள்* கட்டி வைக்கப்பட்டு இருந்தன.

தளபதி, உபதளபதிகளுக்கு வேண்டிய குடிநீர், சமையல் பொருட்கள், தானியங்கள் யாவும் பல ஒட்டகங்கள் மீது ஏற்றப்பட்டிருந்தன.

இவைகளை அடுத்து யானைகள் வந்தன. படை அதிகாரிகளின் ஆடை அணிவகைகள் வரும் வழியில் அரசர்களிடம் இருந்து பெற்ற காணிக்கைகள் கப்பங்கள் யாவும் பொதிகளாக்கப்பட்டு யானைகள் மீது வைக்கப்பட்டிருந்தன.

---

* அது ஒரு தாயத்தாகக் கருதப்பட்டது

*படைக்கு வேண்டிய ஊதியப் பணமும் செலவுப் பணமும் அதில் அடங்கியிருந்தன.

அவை பின்னால் அலங்காரப் பல்லக்கு ஒன்று வந்தது. சிலு சிலுக்கும் பட்டுத் துணிகள் இரு பக்கமும் ஆட, உள்ளே வெகு விமரிசையாக வீற்றிருந்தார் டில்லிப் படைகளின் தளபதி உலுக்கான்* என்பவர். போர்த்திறன் நன்றாகக் கற்றிருந்த இவர், டில்லி சுல்தானான கியாசுத்தீன் துக்ளக்கின் மூத்த குமாரர்.

தளபதியின் பல்லக்கின் இரு மருங்கிலும் வேல்களையும் கொடிகளையும் தாங்கிக் கொண்டு வீரர்கள் செல்ல, அவர்கள் பின்னால் உபதளபதிகளும் மற்ற அதிகாரிகளும் குதிரை மீது ஆரோகணித்து வந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் மீண்டும் ஒரு நீளமான குதிரைப் படை வந்தது. அவர்களை அடுத்து நூற்றுக் கணக்கான வேலைக்காரர்களும், ஊழியர்களும் நீண்ட ஊர்வலமாக வந்தார்கள். படை வீரர்களின் ஆடை வகைகளையும் அவர்களின் இதரத் தேவை களையும் அவர்கள் தூக்கிக் கொண்டு நடந்துவந்தார்கள்.

எல்லாவற்றுக்கும் கடைசியாக எருதுகள் மீது தானிய மூட்டைகளும் மளிகை மூட்டைகளையும் ஏற்றிக் கொண்டு நிறைய வணிகர்கள் நடந்து வந்தார்கள். படைகள் தண்டு இறங்கும் இடங்களில் எல்லாம் இவர்கள் தங்கள் மூட்டைகளைக் கடைகளாக விரித்து, வீரர்களுக்கு வேண்டிய சமையல் பொருட்களை விற்பதற்காக வந்திருந்தார்கள்.

இந்த நீளமானப் படைகளின் வரிசைகள் ஒரு நாழிகை நேரமாக நகரை நோக்கிச் சென்று கொண்டே இருந்தன.

அதே நேரத்தில் கோவில் மூன்றாவது திருச்சுற்றுக்குள் பெரும் பரபரப்பாக வேலைகள் நடந்து கொண்டிருந்தன.

*பின்னால் முகமது-பின்-துக்ளக் என்ற பிரசித்தி பெற்ற பெயரில் டில்லி சுல்தானாகப் பதவி ஏற்று, வரலாற்று ஆசிரியர் களின் புகழ்ச்சிக்கும், இகழ்ச்சிக்கும் பாத்திரமானவர் இவர்தான்.



அந்தச் சுற்றின் மேல் பல பகுதிகளிலிருந்து புகை எழுந்து மேலே மேகக் கூட்டங்கள் போல நெருக்கி அடித்து வியாபித்து இருந்தன.

பெரும் காளவாய் அடுப்புகளில் நெய்யும், எண்ணெய் வகைகளும் தளதளவென்று கொதித்துக் கொண்டிருந்தன.

ஒரு இடத்தில் இரும்புத் துண்டுகளை அடித்துக் கூர்மையாக்குவதில் தொழிலாளிகள் முனைந்து இருந்தார்கள்.

மற்றொரு இடத்தில் நீட்டு நீட்டான மரக்குச்சி களும் கொம்புகளும் தயாரிக்கப்பட்டுவந்தன.

சுற்றுக்குள் ஏதாவது ஒரு பணியாக வீரர்களும், இதரர்களும் ஓடிக் கொண்டே இருந்தார்கள். வடக்கு வாயிலின் கோபுரத்தின் முதல் நிலையில் நின்று கொண்டு திட்டி வாயில் வழியே வடதிசையை ஒரே தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்தார் பஞ்சு கொண்டான்.

மார்பில் கவசம் தரித்து, கைகளில் உறை தரித்து, தலை மீது சுற்றுக்களாலான பாகையைத் தரித்திருந்தார் அவர்.

அவரது ஒரு கை உடைவாளைப் பற்றியிருந்த வகையையும், வடக்கு நோக்கி அவர் வீரப் பார்வை பார்த்திருந்த நேர்த்தியையும் கண்டு பிரமித்தவாறு அவர் அருகில் குலசேகரன் நின்று கொண்டிருந்தான்.

கரை ஏறிய டில்லிப் படைகள் இதற்குள் வந்திருக்க வேண்டுமே என்று பஞ்சுகொண்டான் யோசித்து நின்ற போது திடீரென்று வெளி மதில்கள் உள்ள கோபுரப் பகுதிகளிலிருந்து கூட்டம் கூட்டமாகப் புறாக்கள் மேலே பறப்பதை அவர் பார்க்க நேர்ந்தது.

"குலசேகரா! படை வருகிறது!" என்றார் அவர்.

அப்படிச் சொல்லும்போதே நகராவின், 'துதும் துதும்' சத்தங்கள் மெதுவாக அவர்கள் காதுகளில் விழ ஆரம்பித்தன.

உடனே அருகில் உள்ள வீரனை அவர் ஏவிவிட, அவனும் தன் முரசை அளவோடு தட்டத் தொடங்கினான். அதே சத்தங்கள் அந்த மூன்றாம் சுற்றின் பல பகுதிகளிலுள்ள முரசுகளிலிருந்து உடனே பிரதிபலிக்கப்பட்டன.

சுற்றுக்குள் இருந்த எல்லோரும் அப்போது ஒரு திக்பிரமையுடன் எழுந்து மதிலின் மேற்புறங்களைப் பார்க்க ஆரம்பித்தார்கள்.

அந்தச் சமயத்தில், "சுவாமி, சுவாமி" என்று எங்கிருந்தோ ஒரு அவசரமான குரல் வருவதைக் கேட்ட குலசேகரன் திடுக்கிட்டுச் சுற்றிவரப் பார்த்தான்.

எதுவும் அவன் கண்ணில் படவில்லை. ஆனால் மீண்டும் அதே குரல் 'சுவாமி, சுவாமி' என்று கதறவே, கோபுரநிலையை விட்டு மதில் மேல் வந்தான் குலசேகரன். மதிலுக்கு அப்புறம் தெரியும் ஆலிநாடன் வீதியைப் பார்த்தபோது தூரத்தில் யாரோ இரு பெண்கள் ஓடி வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

"இதென்ன சோதனை?" என்று நினைத்த குலசேகரன் மதில் வழியாக அவர்கள் வரும் திசையை நோக்கி விரைவாக ஓடினான்.

அருகில் போகப் போக அவர்கள் எம்பெருமான் அடியார்களான வாசந்திகாவும் அவளது தாயாரும் என்பது தெரிந்துவிட்டது. நான்காவது சுற்றில் அவர்கள் ஓடி விரைவாக வந்து கொண்டிருந்தார்கள்.

'இவர்கள் இன்னும் நகரைவிட்டுப் போகவில்லையா அல்லது போனவர்கள் தான் திரும்பி வருகிறார்களா?' என்று நினைத்தவாறு, மதில் மேலேயே விரைந்து சென்று அவர்களுக்கு எதிரே வந்து நின்றான் குலசேகரன்.



அவனைக் கண்டதும் கீழே நிலைகுலைந்து நின்ற வாசந்திகாவின் முகம் குங்குமமாகச் சிவந்தது. அவளது கண்கள் இளமானின் கண்களைப் போல் மிரண்டு அலங்க மலங்க விழித்தன. நெஞ்சம் விம்மலிட, பயம் தோன்றியதால் பவள வாய் திறந்திருக்க, மேலே குலசேகரனைப் பார்த்து நாணம் அடைந்த அவள் வாய்ச்சொல் இல்லாதவளாய், பதுமை போல் ஒரு அபிநயத்தில் சமைந்து நின்றாள்.

பக்கலில் வந்து நின்ற தாய், மதில் மேலே நோக்கி, குலசேகரனைப் பார்த்து, "தம்பி! மோசம் போனோம் தம்பி! பொருள்களை ஒழித்து வைப்பதற்குள் இரவு ஓடிவிட்டதே! ஊரார் எல்லோரும் போய் விட்டார்களே! இனி என்ன செய்வோம்?" என்று கூற, குலசேகரன் ஆத்திரம் அடைந்து அவளை நோக்கி, "அம்மணி! நேற்று மாலையே வந்து நான் செய்த எச்சரிக்கை என்னாயிற்று! இப்போது கடைசி நேரத்தில் வந்திருக்கிறீர்களே!" என்று கூறிச் சீறினான்.

அந்தக் கணத்தில் 'துதும் துதும்' என்ற சத்தங்கள் பேரோசையோடு அவர்கள் காதில் விழவே, யாவரும் விக்கித்துப் போய் அப்படியே நின்றார்கள். நிலைமையின் ஆபத்தை உணர்ந்த குலசேகரன் ஒரு கணம் யோசித்து மூன்றாவது சுற்றுக்குள் நோக்கி, "யாரங்கே? ஒரு தாம்புக் கயிறு அவசரமாகத் தேவை!" என்று கத்தினான்.

கயிற்றைத் தேடி ஆட்கள் ஓடினார்கள்.

அதே நேரத்தில் தீன், தீன், தீன்' என்ற சத்தத்தை வாரி இறைத்துக் கொண்டு, நான்காம் சுற்று வடவாயிலுக்குள் டில்லிப் படைகள் விரைவாக நுழைந்து கொண்டிருந்தன. நெருக்கமாக அவை நுழைவதைக் குலசேகரன் தூரத்திலிருந்தே பார்க்க முடிந்தது.

பரபரப்படைந்து அவன் மூன்றாவது 'சுற்றுக்குள் விரைந்து பார்க்க, அங்கிருந்து ஒருவர் மேலே நோக்கி கயிற்றை விட்டெறிந்து கொண்டிருந்தார். அதை ஒரு எவ்வலில் எட்டிப் பிடித்த அவன், அதன் நுனியில் ஒரு வளையமும் சற்று தள்ளி ஆறாவது முழத்தில் ஒரு வளையமும் முடி போட்டுக் கொண்டு அதை அப்படியே நான்காவது சுற்றுக்குள் தூக்கி எறிந்தான்.

"அம்மணி! கயிற்றில் ஏறி நின்று கொள்ளுங்கள்! உங்களை மேலே இழுக்கிறோம்" என்று கீழே நோக்கிக் கத்தினான் குலசேகரன்.

வாசந்திகாவின் தாயார் கயிற்றின் ஒரு வளையத்தில் கால்களை வைத்துக் கொண்டு மற்றொரு வளையத்தைக் கைகளால் பிடித்துக் கொண்டு நின்றாள்.

மதில் சுவரில் அவளது உடல் உராயாமல் லாகவமாகப் பிடித்து மேலே இழுத்தான் குலசேகரன். மதில் மேல் அவள் வந்ததும், கயிற்றை எடுத்து மறுபுறம் போட்டு அவளை மூன்றாவது சுற்றுக்குள் இறக்கினான் குலசேகரன்.

பிறகு அதைப் போலவே வாசந்திகாவை மேலே தூக்க நினைத்து, கயிற்றின் நுனியை மீண்டும் நான்காம் சுற்றில் வீசி எறிந்து, "சீக்கிரம், சீக்கிரம்!" என்று குரல் கொடுத்தான்.

வாசந்திகா கயிற்று வளையத்தில் சட்டென்று ஏறியதும் குலசேகரன் அவளை உடனே தூக்க முனைந்தான். கால்வாசி உயரம் கூடத் தூக்கியிருக்க மாட்டான். ஏதோ நெரிபடும் சத்தம் கேட்டுக் கயிற்றைப் பார்த்தபோது அது இற்றுப் போய் அறுந்து கொண்டு இருப்பது தெரிந்தது.

அவளை உடனே கீழே இறக்க வேண்டும் என்று தீர்மானிப்பதற்குள், 'டொக்'கென்று கயிறு பாதியில் அறுந்துவிட்டது.



"அம்மா!" என்ற அலறலுடன் கீழே விழுந்தாள் வாசந்திகா.

திடுக்கிட்ட குலசேகரன் மூன்றாவது சுற்றுக்குள் நோக்கி, "கயிறு! கயிறு! கெட்டியான கயிறு கொண்டு வாருங்கள்!" என்று கத்தினான்.

மற்றொரு கயிறு விரைவில் கொண்டு வரப்பட்டது.

அதை வாங்கி அடுத்த சுற்றுள் இறக்கிய குலசேகரன், "வாசந்திகா, வாசந்திகா! இதில் ஏறிக் கொள்!" என்று கத்தினான்.

கீழே விழுந்த நிலையில் கிடந்த வாசந்திகா அசையாமல் அப்படியே இருப்பது கண்டதும் அவன் திடுக்கிட்டான். ஒரு கணத்தில் நடந்ததை அவனால் ஊகிக்க முடிந்தது. வாசந்திகா மூர்ச்சித்துக் கிடக்கிறாள் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

'ஆ! எவ்வளவு பெரிய ஆபத்து!' என்று நினைத்த அவன் மூன்றாவது சுற்றில் கயிற்றைப் பிடித்திருக்கும் ஆளுக்குக் கண்ணைக் காண்பித்துவிட்டு, விறுவிறு என்று கயிற்றில் உருவிக் கொண்டே நான்காவது சுற்றில் கீழே இறங்கினான்.

அவன் நினைத்தது தவறல்ல. வாசந்திகா மூர்ச்சை அடைந்திருந்தாள். அவளை அப்படியே தூக்கித் தோளில் சாய்த்துக் கொண்டு மேலே ஏறலாமா என்று யோசித்தபோது, அவன் தடுமாறுவதைத் தூரத்திலிருந்து பார்த்த டில்லி வீரர்களில் இருவர், "ஹாய்!" என்று கூறிக் கொண்டு வாட்களை உருவியவாறு அவனை நோக்கி ஓடி வரலானார்கள்.

'இனி நின்றால் ஆபத்து!' என்று உணர்ந்த குலசேகரன் தோளில் தொங்கும் வாசந்திகாவுடன் நான்காவது சுற்றில் தெற்கு நோக்கி ஓட ஆரம்பித்தான்.

# 9

பூவடம் போன்று மிருதுவான கனமுடைய வாசந்திகாவைத் தோளில் சரித்துக் கொண்டு தெற்கு நோக்கி ஓடியபோது, குலசேகரன் மனதில் பல எண்ணங்கள் வீறிட்டு எழுந்தன.

ஒரு பெண்ணுக்காக இப்படிக் கோட்டையைவிட்டு இறங்கிவிட்டோமே. அதுவும் வில் எடுக்காமல் இறங்கி விட்டோமே, பின்னால் எதிரிகள் துரத்துகிறார்களே, இனி என்ன செய்யக் கடவோம் என்று யோசனையிட்டுக் கொண்டு, கால்களை மட்டும் நீட்டி விரைந்தவாறு காற்றாகப் பறந்தான் அவன்.

அவன் பின்னால், "ஹாய்!" என்ற சத்தத்தை இரைத்துக் கொண்டு, இரண்டு காலாள் வீரர்களும் உருவிய வாள்களுடன் ஓடிவந்து கொண்டிருந்தார்கள்.

குலசேகரன் சிவ்வென்று பறந்து நான்காவது சுற்றின் கிழக்கு வீதியைக் கடுகிக் கடந்து, மேற்கு நோக்கி அவசரமாகத் திரும்பினான்.

அடுத்த கணம், "ஐயோ" என்று கூவியவாறு ஓட்டத்தைச் சடக்கென்று நிறுத்தித் திக்பிரமையுடன் அங்கேயே நின்றுவிட்டான். அந்தத் திருப்பத்திற்கு அப்பால் உள்ள பகுதி முழுவதிலும் முள் உருண்டைகளும்* காட்டுச் சப்பாத்தி, கற்றாழை வகைகளும் ஒரே நெரிச்சலாகத் தூவப்பட்டிருந்தன.

* மரம் அல்லது உலோகத்தால் செய்யப்பட்ட உருண்டையில் கூர்முள்கள் வெளியே நீட்டியிருக்கும்படி நிறைய நீட்டமான ஆணிகளைப் பொருத்தி இருப்பார்கள். இது ஒரு முள்பந்து போல் இருக்கும். குதிரைகள் கடந்து செல்லும் போது இவை அவற்றின் கால்களைக் கிழித்துவிடும். இதனால் குதிரைகளை இவற்றிடையே செலுத்த மாட்டார்கள்.



பட்சிராஜன் தோப்பிலுள்ள கருடன் சந்நிதிவரை அவை இடைவெளிவிடாது பரவியிருந்தன.*

எதிரிகளின் குதிரைப் படைகள் தெற்கு வாயிலை அணுகிவிடா வண்ணம் செய்த ஏற்பாடுதான் அது என்பதை ஊகித்த குலசேகரன் 'இப்படி அகப் பட்டோமே?' என்று வருத்தப்பட்டுச் சில கணங்கள் நின்று, பிறகு மனந்தளராமல் அந்த முள் உருண்டை களுக்கு நடுவே அங்கொரு காலும் இங்கொரு காலும் வைத்து விரைவாகச் செல்லத் தலைப்பட்டான். ஆனால் அவனது வேகம் வெகுவாகத் தடைப் பட்டுவிட்டது.

சில எட்டுகள் தாண்டிச் செல்வதற்குள் இரு வீரர்களும் அவனை அணுகிவிட்டார்கள். இனி செய்வது ஒன்றுமில்லை என்று நினைத்த அவன், இடுப்பில் இருந்த வாளை மட்டும் உருவி எடுத்துப் பின்புறமாகச் சடக் கென்று திரும்பினான்.

எதிரி வீரர்கள் அந்த முள் உருண்டைத் தடை களுக்கு இடையே கால்களை வைத்து அவனை நோக்கி நெருங்கிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களில் ஒருவனை நோக்கி வாளை வீசி எறிந்தான் குலசேகரன்.

இடதுபுறம் வரும் எதிரி வீரனின் கழுத்தில் சிக்கெனப் பாய்ந்து நின்றது அந்த வாள்.

அவன் சுருண்டு கீழே விழவும், மற்றவன் மனந் தளராமல் குலசேகரனை நோக்கி ஓங்கிய வாளுடன் நெருங்கிவந்தான்.

இனி இரண்டு எட்டுகள்தான். பிறகு அவன் கதி அதோகதியாகிவிடும்! அப்போது, விருட்டென்று

* அந்நாளில் கருடன் சந்நிதியைச் சுற்றி இந்தத் தோப்புத்தான் இருந்தது. மண்டபங்கள் பின்னால் கட்டப்பட்டவை.

காற்றைக் கீறிக் கொண்டு ஒரு அம்பு எங்கிருந்தோ பறந்து வந்து எதிரி வீரனின் நெற்றியில் தைத்துக் கொண்டு நின்றது.

கைகளை உயரத் தூக்கிக் கூச்சலிட்ட இரண்டாவது வீரனும் கீழே சாய்ந்தான்.

அதி ஆச்சரியத்துடன் குலசேகரன் மதில் மேலே பார்வையைத் திருப்பியபோது, அங்கே கோபுரத்தின் அருகேயுள்ள விளிம்பில் வீர இளைஞன் ஒருவன் கையில் வில்லுடன் நின்று கொண்டிருந்தான். குலசேகரனை நோக்கி அவன், "வாருங்கள்! சீக்கிரம் வாருங்கள்!" என்று அவசரம் பொங்கக் கூறினான்.

குலசேகரன் வேகமாக நடந்து மதில் சுவர் அருகே போய் நின்றான்.

அப்போது மேலே இருந்து ஒரு நூலேணி அவனருகே வீசப்பட்டது.

அதைப் பிடித்துக் கொண்டு தோளில் சரித்திருந்த வாசந்திகாவுடன், மூச்சு வாங்க மேலே ஏறினான் குலசேகரன்.

மதிலின் மேலே வந்ததும் வீரமும் அழகும் நிரம்பிய அந்த இளைஞன் அவன் அருகே வந்து அவனைக் கை கொடுத்துத் தூக்கி, "என் பெயர் அழகிய நம்பி! பஞ்சுகொண்டான் சுவாமி தங்களைப் பற்றி ஏற்கெனவே கூறியுள்ளார். தெற்கு வாயிலைக் காப்பதற்கு நானும் இந்த இருபது பேர்களுந்தான் இங்கே இருக்கிறோம். நாம் பின்னர் அதிகமாகப் பேசலாம். நீங்கள் இவளைக் கீழே இறக்குவித்துவிட்டு, வடக்கு வாயிலுக்கு விரைவாக ஓடுங்கள்" என்றான்.

குலசேகரனும் தனது பெருகிய நன்றியை அவனிடம் தெரிவித்துவிட்டு, சாரம் வழியாக உட்புறத்தில் அவசரமாக இறங்கிக் கீழே கால் வைக்கப்



போகும் அளவில், அவன் தோளில் சாய்ந்திருந்த பூஞ்சுமை லேசாக சிலிர்த்து விட்டது.

வாசந்திகா மூர்ச்சை தெளிந்து எழுந்து கொண்டிருக்கிறாள் என்பதை உணர்ந்த குலசேகரன் அவளைப் பிடித்தெடுத்து தரைமீது மெதுவாக நிறுத்தினான்.

குவளை மலர் போன்ற கண்களை அலர்த்தி, அவனையும், சுற்றுப்புறத்தையும் கண்ணுற்ற வாசந்திகா வியப்படைந்து, எதுவும் புரியாமல், "நான் எங்கு இருக்கிறேன்? என் அம்மா எங்கே?" என்று புலம்பலோடு கேட்டாள்.

"நல்லவேளை, உங்களுக்கு நினைவு திரும்பியது! உங்கள் தாயார் திருமடைப்பள்ளியில் இருக்கிறாள். உங்களுக்காக கவலைப்பட்டுக் கொண்டிருப்பாள். உடனே அங்கே போங்கள்" என்று அவசரத்துடன் கூறினான் குலசேகரன்.

இதற்குள் வாசந்திகாவுக்கு நடந்தவை எல்லாம் நினைவுக்கு வரவே, அந்த பயங்கரங்களை எண்ணிப் பதற்றம் அடைந்து, அவனை நோக்கி, "ஐயா! நான் கீழே விழுந்தேனே! ஆதரவற்ற நிலையில் கிடந்தேனே! அப்போது என்னை யார் காப்பாற்றி னார்கள்? எதிரிப்படை வீரர்கள் அப்போது உள்ளே வந்தார்களே! அந்தச் சூழலில் என்னை யார் காப்பாற்றி னார்கள்? சொல்லுங்கள்! ஐயா! சொல்லுங்கள்!" என்று வற்புறுத்தினாள்.

"அது தெரிந்து உங்களுக்கு என்ன ஆகப் போகிறது? பஞ்சுகொண்டானின் படை ஆள் ஒருவன் உங்களைக் காப்பாற்றினான். அவன்தான் உங்களைத் தூக்கி மதில் மேல் கொணர்ந்தான். இப்போது அதிகம் பேச நேரமில்லை. நீங்கள் உடனே மடைப்பள்ளி நோக்கி விரையுங்கள்! அங்கே உங்கள் தாயார் காத்திருக்கிறாள்!" என்றான் குலசேகரன்.

அவனது அவசரத்தை உணர்ந்த வாசந்திகா, மேலே பேசாமல் இரண்டு அடி முன்னால் வைத்து, பிறகு ஏதோ நினைத்துத் திரும்பி அவனைக் கடைக்கணித்து "எனக்கு உதவி செய்ததற்கு மிக்க நன்றி" என்று ஒரு மோகன முறுவலோடு அவனிடம் கூறிவிட்டு, அந்த நிலையிலேயே சிறிது நேரம் காலூன்றி நின்றுவிட்டு, பிறகு ஒய்யாரச் சிரிப்புடன், கொடி உடலைப் பெயர்த்துக் கொண்டு முன்னே நடந்தாள்.

சிறிது தூரம்வரை விந்தி விந்தி நடந்த அவள் தனது நீண்டு நெரித்த கூந்தலின் குஞ்சலத்தைத் தன் நீள விரல்களால் திருகிக் கொண்டு, தன் மனத்தையே ஒரு பிரிய தோழியாக நினைத்து, அதை அழைத்து, 'அவர் சரியாகத்தானே பேசினார்! அவருக்கு இருக்கும் அவசரத்தில் பேச முடியுமா? அதற்குள் உனக்கு வருத்தம் வந்துவிட்டதாக்கும்!' என்று செல்லமாகக் கடிந்து கொண்டு திருமடைப்பள்ளியை நோக்கிச் செல்லலானாள்.

**தி**ருமடைப்பள்ளி முழுவதும் ஒரே சந்தடியாகவும் பரபரப்பாகவும் இருந்தது. எம்பெருமான் அடியார்கள் கும்பலாகக் கூடி அன்று அரங்கனுக்குச் செய்ய வேண்டிய நித்தியக் கடன்களை எல்லாம் விட்டுவிட்டு பெரிய பெரிய அடுப்புகளில் அமுது சமைத்துக் கொண்டிருந்தார்கள்.

அடுப்பைக் கவனிப்பாரும், அதில் பெரும் கட்டைகளை இடுவாரும், அரிசியைக் களைவாரும், கஞ்சி வடிப்பாருமாக எல்லோரும் ஏதோ ஒருவிதப் பணியில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

அவர்களில் இளவயதினர், மடைப்பள்ளி முகப்புக் கூடத்தில் வட்டமாக அமர்ந்து இலை திருத்தியும், காய்கறி நறுக்கியும் தளிகைக்கான துணை வேலைகளில் சுறுசுறுப்புடன் ஈடுபட்டிருந்தார்கள்.



அதற்கு அடுத்த அறைகளில் நோயாளிகளான பெண்களையும், ஆண்களையும் படுக்க வைத்து அவர்களுக்கும் பணிவிடைகள் செய்வதில் பல அடியார்கள் ஈடுபட்டிருந்தார்கள்.

ஒரு ஆபத்து தங்களைச் சூழ்ந்திருக்கிறது என்ற நினைவே இல்லாமல், யாவரும் மலர்ந்த முகத்துடனும், சிரித்த கண்களுடனும், அந்தந்தக் காரியங்களை நடத்திக் கொண்டிருந்தார்கள்.

மடைப்பள்ளிக்குள் வாசந்திகா நுழைந்ததும் அவளைக் கண்ட ஒருத்தி ஆச்சரியப்பட்டு எழுந்து போய் உள்ளே நோக்கி, "அம்மா! கரம்பனூர் அம்மங்கிவல்லி! உன் பெண் வாசந்திகா வந்து விட்டாளம்மா!" என்று இரைந்து கத்தினாள்.

சீறிப் புடைத்து ஓடிவந்த அம்மங்கிவல்லி வாசந்திகாவைக் கண்டு புளகித்து, அவளை ஆரத் தழுவி, "வாசந்திகா! வந்தாயா! வந்தாயா?" என்று நாக்குழறக் கேட்டு ஆனந்த கண்ணீர் மல்க, அவளை அணைத்தபடியே நின்றாள்.

பிறகு வாசந்திகாவின் த்லையைத் தொட்டுக் கண்ணேறு கழித்துவிட்டு, அவளிடம் விடைபெற்றுத் தளிகையைக் கவனிக்க உள்ளே போக வாசந்திகாவும் தாழ்வார அறைக்குள் சென்று தன்னோடொத்த மற்ற பெண்களுடன் கலந்துகொண்டாள். அவர்கள் எல்லாரும் அவளைச் சூழ்ந்து கலகலப்பையும், சிரிப்புகளையும் பரிமாறிய போதிலும் அதில் ஒட்டாமல் தன்னுள் மூழ்கிய சிந்தை உடையவளாக அடிக்கடி புறம்பே சென்று தனித்து நின்றாள் வாசந்திகா.

அப்படி நிற்கும்போதெல்லாம் அவளது மானசீகத் தோழி, "ஹேய் வாசந்திகா! அவர்தானே உன்னைத் தூக்கி எடுத்து வந்தார்?" என்று வினவ, அந்த நினைப்பின் மதுரமான திவலைகள் தெறித்ததால்



அவளது நெஞ்சங்கள் விம்மலிட, அவளும் அவற்றை நோக்கி, "விம்மியது போதும், விம்மி அவருக்கு. பாரத்தை அதிகமாக்கினீர்களோ?" என்று செல்லமாகக் கடிந்துவிட்டுப் பிறகு தான் கூறியதை நினைத்துத் தானே வெட்கப்படுவது போல முகம் சிவக்கலானாள்.

ஆரியப்பட்டாள் வடக்கு வாயில் ஒரே அல்லோலகல்லோலப்பட்டது. டில்லிப் படைகள் நெருக்கி அடித்துக் கொண்டு அதன் முன்னால் குவிந்து கொண்டிருந்தன.

வாயில் முன்னால் உள்ள திறந்த வெளியில் பரவியதும் அல்லாமல், நான்காவது திருச்சுவரின் இருபுறங்களிலும் மெதுவாகப் பரவ ஆரம்பித்தன.

பரவிய படைகள் சிறிது நேரத்தில் மேலே செல்லாமல் அப்படியே நின்றுவிட்டன.

வாயில் கோபுரத்தின் முதல் தளத்தில் மறைந்திருந்த பஞ்சுகொண்டான் அதன் துவாரத்தின் வழியாக எல்லாவற்றையும் கூர்ந்து கவனித்தார்.

குதிரைப் படைதான் முன்னால் வந்து நின்றது. அந்தப் படைக்குப் பின்னால் காலாட்படை வீரர்கள் நின்றுகொண்டிருந்தார்கள்.

வீரர்கள் யாவரும் கவசம் தரித்திருந்தார்கள். தலையில் உலோகக் கிரீடமும் அணிந்திருந்தார்கள். குதிரைகளுக்கு எல்லாம் கூடக் கவசங்கள் அணிவிக்கப்பட்டிருந்தன.

பஞ்சுக்கொண்டான் அவைகளைப் பார்த்து நின்ற போது திடீரென்று ஒரு உத்தரவிடும் குரல் கீழேயிருந்து கேட்டது.

அதைத் தொடர்ந்து படைகள் நகரத் தொடங்கியது.

பஞ்சுகொண்டானுக்கு ஒரே ஆச்சரியம் ஏற்பட்டது. ஏனெனில் நான்காவது சுற்றுக்குள் வந்திருந்த டில்லிப் படைகள் இப்போது பின் திரும்பி வெளியே போக ஆரம்பித்திருந்தன.

பஞ்சுகொண்டானுக்கு ஒரே ஊகந்தான் தோன்றியது. திருவரங்க நகரம் முழுதும் அரண்களால் வளையப்பட்டு இருப்பதால், அந்த அரண்களுக்கு இடையே உள்ள குறுகலான இடங்களில் எல்லாப் படைகளையும் நிறுத்துவது ஆபத்து என்று டில்லித் தலைவர்கள் உணர்ந்திருக்க வேண்டும். அதனால்தான் அவை பின்னுக்குப் போகின்றன என்று நினைத்தார்.

படைகள் யாவும் மறைந்துவிட்டன. இனி என்ன நடக்கப் போகிறது என்று அவர் யோசித்தபோது பத்து வீரர்கள் குதிரை மீதேறி வடக்கு வாயில் அருகே வந்தார்கள்.

வாயில் முன்னால் நின்று கொண்டு மேலே யாராவது தெரிகிறார்களா என்று மூன்றாவது திருச்சுற்றின் அரணை நெடுநேரம் அவர்கள் பார்த்தார்கள்.

யாரும் தென்படாமல் போகவே அதில் நடுவனான ஒருவன் கைகளைக் குவித்து, "ஹோ, ஹோ!" என்று இரைந்து கத்தினான்.



பஞ்சுகொண்டான் அசையவில்லை.

"ஹோ, ஹோ! அரண்மீது யாராயிருந்தாலும் வெளியே வருக! வருக! வருக!" என்று மீண்டும் கத்தினான் அவன்.

துவாரத்தின் இருள் பகுதியிலிருந்து அதைக் கவனித்த பஞ்சுகொண்டான் மற்ற வீரர்களுக்குக் கண் காட்டிவிட்டு கோபுரநிலையைவிட்டுச் சாரத்தில் இறங்கி, பிறகு மதில்மேல் அதிகம்பீரத்துடனே வந்து நின்றார்.





அவரைக் கண்டதும் கீழே இருந்த தலைவன் அருகிலுள்ள நடுவனிடம் ஏதோ கூற, அதைத் தமிழில் அவனும் மாற்றி இரைந்து கத்தினான்.

"காகதீய அரசர் பிரதாப ருத்திரரை வென்று வாகை சூடி இப்போது மாபாருக்கு* வந்திருக்கின்றன அரசருக்கு அரசரான டில்லி சுல்தானின் வீரப்படைகள்! அவைகளுக்குப் பணிந்து அரணுக்குள் இருக்கும் சகலமான பொருள்களையும் தந்துவிட வேண்டியது. இது எம் வீர தளபதி-உலுக்கான் அவர்களின் கட்டளை" என்று கத்தினான்.

உடனே பஞ்சுகொண்டான் சிலிர்த்துக் கொண்டு அவர்களை நோக்கினார்.

"அரசர்க்கரசர்களுக்கும் அரசர், சக்கரவர்த்திகளுக்கும் சக்கரவர்த்தி! எண் திசையும் ஏழ் உலகுக்குமே மாமன்னர்! அண்ட சராசரங்களுக்குமே அதிபதி! அந்த ராஜாதி ராஜரான திருவரங்க ராஜனின் திருவருள் மிக்க சமஸ்தானம் இது! அவரிடம் கப்பம் வாங்குவதற்கு யாருக்கும் என்றைக்குமே உரிமை கிடையாது. இதை உம் தளபதியிடம் கூறலாம்" என்று வெகு அழுத்தமாகக் கூறினார்.

அதை அந்த மொழி மாற்றம் செய்வான் குதிரைத் தலைவனிடம் கூறவே, அவன், "இது இறுதியான முடிவா?" என்று திரும்பக் கேட்டான்.

"இறுதியான முடிவு!" என்றார் பஞ்சுகொண்டான் வெகு அலட்சியத்துடன்.

அந்த கணத்தில் அந்தக் கும்பலிலிருந்து திடீரென்று கிளம்பிய ஒரு அம்பு பஞ்சுகொண்டானை நோக்கி விருட்டென்று பறந்தது.

* தென்பகுதி நாடுகளுக்கு அவர்கள் அந்நாளில் இட்டிருந்த பெயர்

எச்சரிக்கையாயிருந்த அவர் ஒரு துள்ளுத் துள்ளி நகரவும் அம்பு அவர் மீது படாமல் சூன்யத்தில் பாய்ந்து மறைந்துவிட்டது.

அதே கணத்தில் கோப்புர முதல் நிலையின் துவாரத்திலிருந்து விர்ரென்று எழுந்த அம்பு ஒன்று கீழ் நோக்கிப் பாய்ந்தது. முந்திய அம்பு எய்த வீரனின் கழுத்தில் அது பதிந்து அவனைக் கீழே வீழ்த்தியது. அவன் கீழே சாயவே, அவனது குதிரை பயந்து போய் அத்துமீறி வெளிநோக்கி ஓடியது.

ஒரு நொடியில் தன்னை நிலையாக நிறுத்திக் கொண்ட பஞ்சுகொண்டான், கீழே உள்ளவர்களை நோக்கி, "வீரர்களே! தைரியம் இருந்தால் தரும யுத்தம் செய்யுங்கள். அதர்ம யுத்தம் செய்யாதீர்கள்!" என்று கூறிவிட்டு அங்கு நின்ற ஒன்பது பேர்களுக்கும் கையைத் தூக்கிக் காண்பித்துவிட்டுக் கோபுர நிலைக்குள் சரேலென புகுந்தார்.

விழுந்தவனது உடலை எடுத்துக் கொண்டு ஒன்பது பேர்களும் திரும்பினார்கள்.

கோபுர நிலைக்குள் வந்த பஞ்சுகொண்டான், அம்பு எய்தது குலசேகரன் என்று தெரிந்ததும் அவனைத் தழுவி, "பிள்ளாய்! இது நமது ஆரம்ப வெற்றி!" என்று மகிழ்ச்சியோடு கூறினார்.

சிறிது நேரம் சென்றது. திடீரென்று மீண்டும் ஓசைகள் எழ ஆரம்பித்தன. பஞ்சுகொண்டானும் மற்றவர்களும் வட திசையை ஆவலோடு கவனிக்கலானார்கள்.

டில்லியின் குதிரைப் படைகள் முதலில் உள்ளே வந்தன. அவர்களுக்குப் பின்னால் காலாள் படைகள் வந்தன.



மூன்றாவது வாயிலுக்கு அப்பால் சற்றுத் தொலைவில் அவை அப்படியே நின்றுவிட்டன.

வெகுநாழிகையாகப் படைகள் அதே நிலையில் நின்றன.

பிறகு ஒரு குதிரை வீரன் மட்டும் முன்னால் நகர்ந்து வந்து தனது வில்லை வளைத்து ஒன்றன்பின் ஒன்றாக மூன்று அம்புகளை ஆகாயம் நோக்கிப் பறக்க விட்டான். பிறகு அவன் ஆவலுடன் கோபுர வாயிலை நோக்கித் திரும்பினான்.

அடுத்த சில கணங்களுக்குப் பிறகு, கோபுர உச்சிக்கு மேலே ஒன்றன்பின் ஒன்றாக மூன்று அம்புகள் ஆகாயம் நோக்கிப் பறந்து சென்றன.

போர் ஆரம்பிக்கலாம் என்பதற்கான அறிகுறி இது.

அடுத்த கணம் பேரோசை எழுப்பியவாறு டில்லிப் படைகளின் நகராக்கள் முழங்க ஆரம்பித்தன. எக்காளங்கள் அலறின.

அந்த ஓசைகள் அந்தப் பிரதேசம் முழுவதையுமே நடுங்க வைத்தன.

# 10

இந்தக் கதை நிகழ்ந்த காலத்தில் திருவரங்கக் கோவில், இப்போது காணப்படும் நிலையில் இருந்து பல விதங்களில் மாறுபட்டு இருந்தது. தற்போதுள்ள பல மண்டபங்கள் அந்நாளில் இருந்ததில்லை. அவை யாவும் பின் நூற்றாண்டுகளில் ஏற்பட்டவை.

காலப் போக்கிலோ, ஆக்கிரமிப்பினாலோ சில கோபுரங்கள் அழிந்து போய் மீண்டும் கட்டப்பட்டு

இருக்கின்றன. அந்நாளில் இல்லாத பல புதிய கோபுரங்களும் பிற்காலத்தில் கட்டப்பட்டிருக்கின்றன.

நான்காவது திருச்சுற்றான ஆலிநாடன் திருவீதியில் அநேக இடங்கள் தோப்பாகவோ அல்லது வெட்ட வெளியாகவோ இருந்தன.

மூன்றாவது திருச்சுற்றான குலசேகரன் திருவீதியில் உள்ள அணியரங்கன் முற்றம் வெறும் பரந்த வெளியாகவே இருந்தது. இப்போது அதை மூடி மறைத்திருக்கும் மண்டபங்கள் அந்நாளில் இருந்தது இல்லை. கொடிக் கம்பமும் பலிபீடமும் இந்தத் திறந்த வெளியில்தான் இருந்தன.

ஆரியபட்டாள் தெற்கு, வடக்கு ஆகிய இருவாயில் களிலும் அந்நாளில் இருந்த கோபுரங்கள் வேறானவை. வடக்கு வாயில் இருந்த இடத்தில் இப்போது பரமபத வாசல் இருக்கிறது.

ஏழு திருச்சுற்றுக்கள் கொண்டு, ஒரு நகரத்தையே தன்னுள் அடக்கிய இந்த மாபெரும் திருக்கோவிலின் மதில் சுவர்கள் கிட்டத்தட்ட ஆறு மைல்கள் நீளம் உள்ளவை! இந்த மதில்களை எல்லாம் சேர்த்துப் பார்க்குமிடத்து, உலகிலேயே பெரிய பரப்புடைய கோவில் இது என்று கூறுகிறார்கள். இந்த ஏழு திருச்சுற்றுகளும் கதை நிகழ்ந்த காலத்தில் இருந்து வந்தன.

வரலாற்றில் இந்த மதில்கள் பலமுறை வெவ்வேறு படைகளுக்கு அரண்களாகப் பயன்பட்டிருக்கின்றன. பிற்காலத்தில்வந்த ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக் காரர்கள், கர்நாடக நவாபுகள் ஆகியவர்கள் இந்த மதில்களைக் கோட்டைகளாக்கிக் கொண்டு போர் நிகழ்த்தியிருக்கிறார்கள்.

ஆகவே, இந்த மதில்களில் ஒன்றை தமது பாதுகாப்புக்காகப் பஞ்சுகொண்டான் அந்நாளில் தேர்ந்தெடுத்தது ஆச்சரியமே இல்லை.



திருவரங்கம் கோவிலின் வரை படம்

## வரை படத்திற்கான குறிப்புகள்

1. திருவரங்கன் மூலவர்
2. சந்தனு மண்டபம்
3. தெற்குக் கல்லறை
4. யாகசாலை
5. துலுக்க நாச்சியார் சந்நிதி
6. கிளி மண்டபம்
7. கிருஷ்ணன் சந்நிதி
8. நாழிகை கேட்டான் வாயில்
9. துவஜ ஸ்தம்பமும், பலி பீடமும்
10. இராஜ மகேந்திரன் திருச்சுற்று
11. குலசேகரன் திருச்சுற்று
12. திருமடைப் பள்ளி
13. நெய்க் கிணறு
14. ஆலி நாடன் திருச்சுற்று
15. கருட மண்டபம்
16. நம்மாழ்வார் சந்நிதி
17. திருக் கொட்டாரம்
18. நெற்களஞ்சியங்கள்
19. தன்வந்திரி சந்நிதி
20. சந்திர புஷ்கரணி
21. கோதண்டராமர் சந்நிதி
22. ஸ்ரீபண்டாரம்
23. சூரிய புஷ்கரணி
24. கார்த்திகை கோபுரம்
25. அகளங்கன் திருச்சுற்று
26. சக்கரத்தாழ்வார் சந்நிதி
27. வசந்த மண்டபம்
28. திருவரங்க நாச்சியார் சந்நிதி
29. வில்வ மரம் நிற்கும் இடம்
30. கம்பர் மண்டபம்
31. மேட்டு அழகிய சிங்கர் சந்நிதி
32. ஐந்து குழி மூன்று வாயில்
33. வேதாந்த தேசிகர் சந்நிதி
34. ஆயிரங்கால் மண்டபம்
35. வெள்ளைக் கோபுரம்
36. சேஷராயர் மண்டபம்
37. பிள்ளை உலகாசிரியர் சந்நிதி
38. ராமானுஜர் சந்நிதி
39. ரங்க விலாச மண்டபம்
40. திருவந்திக் காப்பு மண்டபம்

கோவிலின் எல்லாப் பகுதிகளுமே படத்தில் குறிப்பிடப்படவில்லை.

குறிக்கப்பட்டுள்ள பெரும்பாலான பகுதிகளும் கதை நிகழ்ந்த காலத்தில் இருந்ததில்லை. அவை பின்னரே கட்டப்பட்டன.



செவிகளைப் பிளக்கும்படியாகப் பேரோசைகளை எழுப்பிக் கொண்டு டில்லிக் குதிரைப்படைகள் ஆரியபட்டாள் தெற்கு வாயிலுக்கு முன்னால் வந்தன. பிறகு அவை இரண்டு கூறுகளாகப் பிரிந்து நான்காவது திருச்சுற்றின் மேற்குச் சரகிலும் கிழக்குச் சரகிலும் நகரலாயின.

ஒரு திரள் குதிரை வீரர்கள் மட்டும் நேராகத் தெற்கு வாயிலை நோக்கி மெதுவாக அடிமேல் அடி எடுத்து வைத்து முன்னேறினார்கள்.

ஒவ்வொரு அடிக்கும், மேலே அரண் விளிம்புகளை நோக்கி ஒரு சாரி அம்புகளைப் பாய்ச்சிக் கொண்டே அவர்கள் முன் நகர்ந்தார்கள். முன்னேறுகிற அந்தத் திரளுக்குப் பாதுகாப்புக்காக மற்றொரு திரள் வளைத்த வில்களுடன் எச்சரிக்கையாக நின்று கொண்டு மதில் உச்சியையே பார்த்துக் கொண்டு இருந்தது.

அதற்கு அடுத்தாற்போல் நிறைய வீரர்கள் தங்கள் கைகளில் உயரமான ஏணிகளை வைத்துக் கொண்டு ஆயத்தமாகக் காத்துக் கிடந்தார்கள். கோட்டையின் எதிர்ப்புக் குறைந்தவுடன் அதன்மீது ஏறுவதற்கு அந்த அணியினர் சித்தமாக இருந்தார்கள்.

கோபுரத்தின் மேலே இருந்து கொண்டு படைகள் நகர்வதை எல்லாம் உன்னிப்புடன் கவனித்து வந்த பஞ்சுகொண்டான், எந்தவித மறு நடவடிக்கையும் எடுக்காமல் பேசாமல் இருந்தார். ஆனால் அவர் ஏதோ தீவிரமாக யோசித்துக் கொண்டிருப்பது மட்டும் மற்றவர்களுக்குப் புலனாகியது.

படைகள் ஒரு குறிப்பிட்ட தூரம் வரை சென்று, இரு சரகிலும் அடைத்துக் கொண்ட பிறகு, அவர் திடீரென்று கையைத் தூக்கி சமிக்ஞை செய்தார்.

மறுகணம் கோபுரத் துவாரத்திலிருந்து ஒருவன் கருடக் கொடியை தூக்கி விரைவாக அசைக்கவே, மதில்

உட்புறத்திலிருந்து உடனே பேரிகை, சின்னம், சங்கு, தாரை ஆகியவைகளின் பேரொலிகள் "புபும் புபும்" என்று கிளம்பி எங்கும் அதிரத் தொடங்கின.

கோபுரத்திலிருந்தும், மதிலுக்குள் மறைந்திருந்த பரண்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான அம்புகள் கீழே எதிரிப்படை நோக்கிப் பாய்ந்து சென்றன.

அதே கணத்தில் மதிலுக்குள்ளிருந்த திருச்சுற்றில் இருந்து எரி உருண்டைகளுடன் கூடிய அம்புகள் விர்ரென்று வெளி நோக்கிப் பறந்து சென்றன.

எரி நட்சத்திரம் உதிர்வது போல் பிரகாசமான ஒளியை ஏற்படுத்திக் கொண்டு அந்தத் தீப்பிழம்புகள் சரம் சரமாக எதிரிப் படைகள் மீது உதிர்ந்தன.

சீறும் நெருப்பு எங்கும் விழுந்து திகுதிகுக்கவே, டில்லிப் படையின் குதிரைகள் நிதானம் இழந்து ஒரு நிலைக்கு அடங்காமல் திமிறலாயின.

அதனால் நிலையிழந்த வீரர்கள், அவற்றை அடக்குவதற்காகக் கவனம் செலுத்தும் போது, மேலிருந்து வரும் அம்புகள் அவர்களை அடித்துக் கீழே வீழ்த்தலாயின.

"ஓ. ஓ" என்ற தீனமான குரல்களும் ஓலங்களும் எங்கும் எழுந்தன. குதிரைகள் நிலை தெரியாமல் கனைத்துக் கொண்டே, அங்குமிங்கும் துள்ளிக் கூட்டத்தின் இடையே மேலும் குழப்பத்தை விளைவித்தன.

"திரும்பாதீர்கள்! வில்லை வளையுங்கள்! போரிடுங்கள்! கொல்லுங்கள்!" என்று டில்லிக் குதிரைப் படைத் தலைவர்கள் வாய் ஓங்கக் கத்திக் கொண்டே இருந்தார்கள்.

இதற்குள் வடக்கு வாயிலை நெருங்கிய எதிரி வீரர்களின் மீது பஞ்சுகொண்டானின் வீரர்கள் சரமாரியாக அம்புகளையும் ஈட்டிகளையும் எரி உருண்டைகளையும் எறிந்து கொண்டிருந்தார்கள்.



எதிர் தாக்குதலின் இந்த வேகம் தாங்காமல் குதிரை வீரர்களில் பலர் கீழே விழுந்து இறக்கலானார்கள்.

இந்தச் சமயத்தில், இரு சரகுகளிலும் பரவி இருந்த படைகள் பின்வாங்கவே, வடக்கு வாயிலின் முன்புறத்தில் பெரிய நெரிசல் ஒன்று ஏற்படத் தொடங்கியது.

அதைப் பயன்படுத்திக் கொண்டு, பஞ்சு கொண்டானின் வீரர்கள் மேலும் தீவிரமாக அம்புகளை இடையறாது தொடுத்துவிட்டார்கள்.

மதிலுக்குள் இருந்த வீரர்கள் இதற்குள் கொதிக்கும் எண்ணெயைக் கலயங்களில் ஊற்றி, அந்தக் கலயங்களை நீட்டமான மூங்கில் கொம்புகளால் தூக்கி, வடக்கு வாயில் நெரிசல் மீது விட்டெறிந்தார்கள்.

கலயங்கள் உடைந்து, பழுக்க காய்ச்சிய எண்ணெய் எங்கும் சிதறவே குதிரைகளும் வீரர்களும் அவை பட்ட மாத்திரத்திலேயே துடித்துக் கீழே விழுந்தார்கள். விழுந்தவர் மீது மிதித்துத் துவைத்துக் கொண்டு மற்ற வீரர்கள் ஓடினார்கள்.

நெரிசலால் தள்ளப்பட்ட அநேக குதிரைகளும், வீரர்களும் அருகிலுள்ள சந்திர புஷ்கரணி நீரில் விழுந்து தத்தளித்தார்கள்.

எங்கும் குழப்பமும் ஓலங்களுமே எஞ்சி நின்றன.

நூற்றுக்கணக்கானவர்கள் இறந்து கிடக்க, டில்லிப் படைகள் யாவும் நான்காவது சுற்றின் வடக்கு வாயில் வழியாகப் பின்வாங்கிச் செல்லத் தொடங்கின.

ஒரு முகூர்த்த நேரத்திற்குள் அந்தத் திருச்சுற்றுக் களில் தோன்றிய எல்லாக் களேபரங்களும் அடங்கி விட்டன.

பஞ்சுகொண்டானும் அவரது வீரப் பரிவாரங்களும் நிம்மதியாக மூச்சு விட்டு சிறிது நேரம் ஆயாசமாக அமர்ந்தார்கள். குலசேகரன் தனது உடல் மீது இருந்த கவசப் போர்வையைக்* கழற்ற முயலும் போது பஞ்சுகொண்டான் அவனைப் பார்த்து "குலசேகரா! களைத்து விட்டாயா?" என்று கேட்டார்.

"சுவாமி, களைப்பு ஏது சுவாமி? அது ஏற்படும்படி நாங்கள் என்ன செய்து விட்டோம்? எங்கள் வீரத்தை விடத் தங்கள் தந்திரங்கள்தான் வென்றிருக்கின்றன. இந்தத் தந்திரங்கள் மட்டும் நீடிக்குமானால் முற்றுகையை எவ்வளவு நாள் வேண்டுமானாலும் சமாளிக்கலாம்!" என்றான்.

"பொறு குலசேகரா!" என்றார் பஞ்சுகொண்டான். "இன்று, இந்த நேரத்தில் என் திட்டங்கள் வெற்றி பெற்று விட்டன. ஆனால் இனிமேலும் இது வெற்றி பெறுமா என்பதைப் பார்க்க வேண்டும். ஏனெனில் எதிரிகள் இனி வாளா இருக்கமாட்டார்கள். நம்மை முறியடிக்க யோசனை செய்து கொண்டிருப்பார்கள்" என்றார்.

போர் நடந்த போது உள்சுற்றுகளில் ஏற்பட்டு இருந்த பம்பர இயக்கம் சற்று ஆசுவாசப்பட்டுக் கொண்டிருந்தது. வீரர்களின் தேவைகளை நூற்றுக் கணக்கான பாமரமக்கள் அந்தச் சுற்றுகளில் இருந்தவாறு ஒரே தீவிரமாகக் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யாவரும் இப்போது களைத்துப் போய் இளைப்பாறத் தொடங்கினார்கள்.

உர்ரென்று பேரிரைச்சலுடன் எரிந்த காளவாய் அடுப்புகள் இபபோது கவனிப்பார் இல்லாமையால்

* இரண்டு கனமான துணிகளுக்கிடையே பட்டுத்துணிகளின் துண்டுகளை நிறைய அடைத்து ஒரு மெத்தைபோல் அந்தக் கவசப் போர்வையைத் தயாரித்திருப்பார்கள். கூர் ஆயுதங்கள் எளிதில் உள்ளே செல்லாது.



தங்கள் கோபத்தைத் தணித்துக் கொண்டு மெதுவாக எரியலாயின.

எதிர்பாராத அம்புகளுக்கு இலக்காகிக் காயம் அடைந்த பல பேர்கள் திருமடைப்பள்ளி அறைகளுக்கு எடுத்துச் செல்லப்பட்டார்கள்.

அவர்களில் ஒருவர் குற்றுயிராகக் கிடந்தார்.

கொதிக்கும் எண்ணெய் கலயம் ஒன்று பிரகாரத்துக்கு உள்ளேயே விழுந்து உடைந்ததால் மற்றொருவர் படுகாயம் அடைந்திருந்தார்.

பஞ்சுகொண்டான் கோபுரத்திலிருந்து இறங்கி வந்து, கீழே திருச்சுற்றில் இருந்த பரிவாரங்களுக்கு நன்றி சொல்லியும், உற்சாகப் பேச்சுப் பேசியும் ஊக்குவித்துவிட்டு மீண்டும் கோபுரத்தில் ஏறிக் கொண்டார்.

இனி ஆபத்து எந்தக் கணத்திலும், எந்த விதத்திலும் அணுகலாம் என்று எண்ணிய அவர் சிறிதுநேரம் கூட அயர்ந்திருக்க விரும்பவில்லை.

அரை நாழிகை சென்றது. வெள்ளைக் கொடி பிடித்து டில்லிப் படைகளின் வேலையாட்கள் சரசரவென்று வந்தார்கள். நான்காவது சுற்றிலுள்ள சடலங்களை எல்லாம் அகற்றிவிட்டு, அந்தத் திருச்சுற்றை நிர்மலமாக்கிவிட்டுச் சென்றார்கள்.

அதன் பின்பு அரை நாழிவரை எந்தச் சலனமும் இல்லை.

பிறகு திடீரென்று ஆறாவது ஏழாவது சுற்றுக்களில் இருந்து அரவங்களும் கூப்பாடுகளும் எழலாயின.

வெகு விரைவில் அந்தப் பகுதிகளிலிருந்து திகுதிகு என்று தீ எழுந்து ஆகாயத்தை நோக்கிப் பரவியது.

டில்லிப் படைகள் அந்தச் சுற்றுகளில் உள்ள தெருக்களை எல்லாம் சூறையாடுகிறார்கள் என்பது விரைவில் தெரிய வந்தது.

வீடுகள் பல தீக்கிரையாகிக் கொண்டிருந்தன.

ஆரியப்பட்டாள் தெற்கு வாயிலில் வீர இளைஞனான அழகிய நம்பி கையைக் கட்டிக் கொண்டு அமர்ந்திருந்தான்.

அவன் கண்கள் அடிக்கடி ஒவ்வொரு திசையையும் கவனித்துக் கொண்டே இருந்தன.

வடக்கு வாயிலில் பூசல் நடந்தபோது அவன் கைகளும் மனமும் துறுதுறுத்துக் கொண்டே இருந்தன.

குறுக்கே அரங்கனின் சந்நிதியும், மற்ற அமைப்புகளும் இருந்ததால் அவனால் வடக்கு வாயிலைத் தன் இருப்பிடத்திலிருந்தே பார்க்க முடியவில்லை. ஆனால் அவன் மனம் மட்டும் அங்கு நோக்கிப் பறந்து கொண்டே இருந்தது.

இடையிடையே அங்கு நடப்பதைப் பார்த்து வந்து சொல்வதற்கு ஒரு ஆளை அவன் நியமித்திருந்தான். குலசேகரனது குதிரையைப் பயன்படுத்திக் கொண்டு அந்த ஆள் அடிக்கடி வடக்கு வாயிலுக்குப் போய் வந்து, விவரங்களைத் தெரிவித்துக் கொண்டு இருந்தான்.

வடக்கு வாயிலில் போர் முடிந்த பிறகு, அழகிய நம்பி மேலும் கவனமாக இருக்க வேண்டும் என்று எச்சரிக்கப்பட்டிருந்தான். ஆகவே மத்தியான நேரம் முழுவதும் அவன் எதிரே உள்ள பட்சிராசன் தோப்பை உற்றுக் கவனித்தவாறே பொழுதைப் போக்கினான்.

அங்குள்ள பெரிய கருடன்தான் அவன் கண்களுக்குக் காட்சி அளித்துக் கொண்டிருந்தாரே ஒழிய, எதிரிப் படைகள் எதுவும் தென்படவே இல்லை.



மாலை மறைந்து சிறிது சிறிதாக இரவு ஆகிவரவே, நகரத்தில் பல திக்குகளில் எரிந்து கொண்டிருந்த தீக்கள் அவன் கண்களுக்குப் பளிச்சென்று தெரியலாயின.

"ஐயோ! ஊரெல்லாம் எரிகிறதே!" என்று வருந்தினான் அவன்.

இருட்டி அரை நாழிகையும் சென்றுவிட்டது. பெரிய கருடன் சந்நிதி இருளுக்குள் நன்றாக மூழ்கிவிட்டது. உள்ளேயிருந்த பஞ்சலோகக் கருடனின்* உருவம் மட்டும் இலேசான மினுமினுப்போடு தெரியலாயிற்று.

கருடனைப் பார்த்துக் கொண்டே இருந்தபோது சந்நிதிக்கு அடுத்தாற்போல் உள்ள தோப்பின் இருட்டில் திடீரென்று ஒரு சலனம் ஏற்படுவது தெரிந்தது.

"ஏய்! அதோ பார்" என்று அருகிலுள்ள வீரனை உலுப்பிவிட்டுக் காண்பித்தபோது, அங்கே அந்தச் சலனம் மெள்ள மெள்ள ஒரு உருவமாக மாறிக் கொண்டு வருவதும் தெரிந்தது.

கருடன் சந்நிதி வரை முள் உருண்டைகளும் காட்டுச் சப்பாத்திகளும், தூவப்பட்டு இருந்ததால் அங்கொரு காலும் இங்கொரு காலும் வைத்து நடந்து வந்த அந்த உருவத்தின் சலனம் நன்றாகவே தெரிந்தது.

உடனே அருகிலுள்ள வீரன் தன் வில்லை வளைத்தபோது, அழகிய நம்பி அவனைத் தடுத்து நிறுத்தினான்.

"நிறுத்து! அவன் நம்முடைய ஆளாகக்கூட இருக்கலாம்!" என்று எச்சரித்தான் அவன்.

அந்தத் தனி ஆள் மெள்ள நடந்து, மதில் சுவர் வரையில் வந்தான். தெற்கு வாயில் கதவில் அவன் ஏதாவது விஷமம் பண்ணுவானோ என்று நினைத்த

*இப்போது கோவிலில் இருப்பது இந்த விக்கிரகமல்ல

அழகிய நம்பி அவனைத் தாக்குவதற்குச் சித்தமாக இருந்தான்.

அந்த நேரத்தில் அந்த ஆள் மேலே நோக்கி, "யாரங்கே? ஒரு நூலேணியைப் போடுங்கள்" என்று ஒரு பழக்கப்படாத உச்சரிப்பில் தமிழ் பேசினான்.

எதிரி ஆளாக இருக்கலாம். ஆனால் தனியாக வந்திருக்கிறான். மேலே வரவேண்டும் என்கிறான். ஏதாவது சேதி கொணர்ந்திருப்பானோ, அல்லது நம்மைத் தீர்த்துக் கட்டுவதற்கு வருகிறானோ என்று பலவாறாக நினைத்துக் குழம்பினான் அழகிய நம்பி.

"யாரங்கே! நான் உங்கள் நண்பன்! என் மீது நம்பிக்கை வையுங்கள்! நூலேணியைப் போடுங்கள்" என்று அந்தப் புதியவன் மீண்டும் கீழிருந்து கத்தினான்.

அழகிய நம்பி சைகை செய்யவே, நூலேணி ஒன்று கீழே தூக்கி எறியப்பட்டது.

அதைப் பிடித்து அந்த ஆள் மேலே ஏற ஏற, இரு வீரர்கள் உருவிய வாளுடன் மதில் விளிம்பில் நின்று அவனைக் கவனித்துக் கொண்டு இருந்தார்கள்.

அந்த ஆள் மேலேறி வர இன்னும் நான்கு கண்ணிகளே மீதியிருந்தன. அதற்குள் அவனைப் பார்த்து, "நில்!" என்று ஆவேசத்துடன் கத்தினான் அழகியநம்பி.

# 11

மதில்மேல் ஏறும் அந்த முன்பின் தெரியாத மனிதனை "நில்" என்று சொல்லி அழகிய நம்பி நிறுத்தியதற்குக் காரணம் இருந்தது.



அந்த மனிதன் எதிரிப் படையின் உளவாளியாக இருக்க வேண்டும் அல்லது தூதுவனாக இருக்க வேண்டும். தூதுவனாக இருந்தால் கொல்லக் கூடாது. அது முறை ஆகாது. ஆனால் தூது பேச வந்தவன், பேசுவது போல் பேசி விட்டு இங்குள்ள படை பலத்தையும், மற்ற ஏற்பாடுகளையும் கவனித்து விட்டுத் திரும்பிப் போய்விட்டால் அது பெரும் ஆபத்தாக முடியும். ஏனெனில் இவ்வளவு குறைந்த படையை வைத்துக் கொண்டு பஞ்சுகொண்டான் சண்டை இடுகிறார் என்பது எதிரிகளுக்குத் தெரியக் கூடாது. தெரிந்தால் எத்தனையோ விபரீதங்கள் ஏற்படும்.

இந்த எண்ணங்கள் தோன்றியதால்தான் அந்த மனிதனுக்கு "நில்" என்று உத்தரவிட்டிருந்தான்.

நூலேணியில் ஏறிக் கொண்டிருந்த மனிதன் கடைசி நான்காவது கண்ணியில் அப்படியே நின்று விட்டான். பிறகு மேலே நோக்கி முகத்தைத் திருப்பி, "கோட்டைத் தலைவரே! என்னை மேலே வர விடுங்கள்! நான் உங்கள் நண்பன்" என்றான் விநயத்துடன்.

"எம் நண்பரா? என்ன அத்தாட்சி?" என்றான் அழகிய நம்பி.

"தனியாக வந்திருக்கிறேனே!" என்றான் அந்த மனிதன்.

"அதனால்தான் சந்தேகம் தோன்றுகிறது! எங்கே உனது போர்வையை நீக்கு!" என்றான் நம்பி.

அந்த மனிதன் தன் ஒரு கையால் போர்வையை நீக்கினான். அருகில் உள்ள வீரன் தீவர்த்தியைத் தூக்கிக் காட்டவே அழகிய நம்பி அவனைப் பார்த்தான்.

"வீரனின் உடையை அல்லவா தரித்திருக்கிறாய்? நீ எந்த நாட்டு வீரன்? நீ பேசுவது கூடக் கொச்சையாக இருக்கிறதே! சொல், நீ எதிரி உளவாளிதானே! நீ

எதற்காக மேலே வர விரும்புகிறாய்?" என்று சரமாரியாகக் கேட்டான் நம்பி.

"கோட்டைத் தளபதியே! நான் வீரன்தான்! ஒய்சள வீரன். என்னை நம்புங்கள்! உங்களுடன் நல்வார்த்தையாட வந்திருக்கிறேன். இதில் வேறு எந்த ரகசியமும் கிடையாது" என்றான்.

அழகிய நம்பி சிரித்தான்.

"ஒய்சள வீரனா? ஆண் உடை தரித்திருக்கிறாயே! புடவை கட்டிக் கொள்ளக் கூடாதோ? உங்களுக்கு உரிய ஆடை அதுதானே!" என்றான் ஏளனமாக.

"தளபதி! நீங்கள் சொல்வது ஒரு விதத்தில் உண்மை. ஆனால் இந்த நாட்டை ஆளும் பாண்டிய அரசர் எப்போது புடவை கட்டுகிறாரோ, அப்போது நாங்களும் கட்டுவோம். வெறும் புடவையை அல்ல! அறுதலியின் புடவையையே கட்டுவோம்! தளபதி! தங்கள் நகைப்புக்கு பாத்திரமாக டில்லிப் படையின் வழிகாட்டிகளாக நாங்கள் வந்திருப்பது உண்மை! ஆனால் வேதனையுடன் வந்திருக்கிறோம். அதைத் தங்களிடம் தெரிவித்துவிட்டுப் போகவே வந்திருக்கிறேன். நான் அரங்க பக்தன்! என் குடும்பத்தோடு ஒரு முறை இந்தக் கோவிலுக்கு வந்து விட்டு, இராமேசுவரம் போயிருக்கிறேன். என் மீது எந்தச் சந்தேகமும் கொள்ள வேண்டாம். என்னை மேலே அனுமதியுங்கள்!" என்றான்.

அழகிய நம்பி மேலும் சிரித்தான்.

"ஐயா! ஒய்சளரே! உன்னை எப்படி நம்புவது? உளவாளிகள் கூட இவ்வளவு நம்பகமாகத்தான் பேசுவார்கள்!" என்றான்.

"உளவாளியா? நானா! இல்லவே இல்லை. அப்படி உங்களுக்குச் சந்தேகம் இருந்தால் என்னை நீங்கள்



திருப்பி அனுப்ப வேண்டாம். உள்ளேயே கட்டி வையுங்கள்! சம்மதம்!" என்றான் ஒய்சளன்.

நம்பிக்குச் சங்கடமாக இருந்தது. அவனை நம்பலாம் போலவும் தோன்றியது. நம்பக் கூடாது என்றும் தோன்றியது. ஒருவேளை அவன் நமக்குச் சில தந்திரங்கள் சொல்லிக் கொடுக்கவே வந்திருந்தால்? போர்க் காலத்தில் இதெல்லாம் சகஜமாயிற்றே!

இருந்தாலும் கடைசியாக ஒரு கேள்வி கேட்கத் தீர்மானித்தான் அவன்.

"ஒய்சளரே! நீ அரங்க பக்தன் என்கிறாய்! 'பல்லாண்டு' தெரியுமா?" என்றான்.

ஒரு கணம் நிசப்தம் சூழ்ந்தது.

பிறகு இருளை ஊடுருவிக் கொண்டு ஒரு மென்மையான குரல் கொச்சையான தமிழில் பாட ஆரம்பித்தது.

அடியோமோடும் நின்னோடும் பிரிவு இன்றி
ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வல மார்பினில் வாழ்கின்ற
மங்கையும் பல்லாண்டு!. . . .

பாதியில் நிறுத்திய ஒய்சளன், "போதுமா, சுவாமி! காலையில் இருந்து நான் நியமங்களை அனுசரிக்கவில்லை. அரங்கனது கீர்த்தியைப் பாடுவதற்கு எனக்குச் சுத்தம் போதாது!" என்றான்.

நம்பிக்கு அவன் மீது நம்பிக்கை சிறிது பிறந்தது. "சரி மேலே வாருங்கள்! ஆனால் இங்கே வந்ததுமே உங்கள் கண்ணைக் கட்டி விடுவோம்" என்று கூறினான்.

"சரி" என்றான் ஒய்சளன்.

சிறிது நாழிகையில் வடக்கு வாயில் அருகே, பஞ்சுகொண்டான் முன்னிலையில், அந்த ஒய்சளன் நிறுத்தப்பட்டிருந்தான். அவனது கண்கள் அப்போது திறக்கப்பட்டிருந்தன.

"உம்! நீ சொல்ல வேண்டியதைச் சொல்!" என்றார் பஞ்சுகொண்டான்.

"சுவாமி!" என்று அவரைக் கைகூப்பி வணங்கிய ஒய்சளன், "என் பெயர் கம்பய தண்டநாயகன். கர்நாடகத்திலுள்ள துவாரசமுத்திரத்திலிருந்து* வருகிறேன். டில்லிப் படைகளுக்கு வழிகாட்டிகளாக நாங்கள் நியமிக்கப்பட்டிருக்கிறோம். எங்கள் நாட்டின் வழியாக அந்தப் படைகளை வீரதவளப் பட்டினத்திற்கு* அழைத்துச் சென்றோம். அங்குள்ள பாண்டிய அரசர் நாங்கள் போகுமுன்பே நகரை விட்டுத் தமது திரவியங்களோடும் பரிவாரங்களோடும் ஓடிவிட்டார்: பொருள் எதுவும் கிடைக்காததால் டில்லிப் படைகள் அந்த ஊரையே சூறையாடின. அடுத்தாற்போல் நாங்கள் மதுரைக்குப் புறப்பட்டோம். ஆனால் திருவரங்கம் வழியாகப் போக வேண்டும் என்று உலுக்கான் வற்புறுத்தினார். சென்ற படையெடுப்பின் போது* இந்நகரத்தில் கிடைத்த அணி, மணி பொருள்களை எல்லாம் டில்லிக்காரர்கள் இன்னும் நினைவு வைத்திருக்கிறார்கள். ஆகவேதான் நாங்கள் பலமுறை தயக்கம் காண்பித்தும், உலுக்கான் இந்த நகர் வழியாகச் செல்ல வேண்டும் என்று விடாப்பிடியாகக் கூறிவிட்டார். அதனால்தான் இங்கே வந்தோம். உண்மையில் அரங்கனது நகரில் நுழைவதற்கே எங்கள் (ஒய்சளர்) கால்கள் கூசின. அரங்கனுக்கு இப்படி அபராதம்

* ஒய்சள நாட்டின் தலைநகர், கர்நாடகத்தில் இப்போதுள்ள ஹளேபீடு என்ற ஊர்தான் இது. இந்த நகரம் அழிந்து இப்போது வெறும் ஊராக இருக்கிறது.

* தற்போது மரக்காணம் என்று கூறுவார்கள்.

* கி.பி. 1311-ல் நடந்த மாலிக்காபூர் படையெடுப்பு.



செய்கிறோமே என்ற வருத்தத்தில் நலிந்து விட்டோம். எனவே, கிடைத்த சந்தர்ப்பத்தில் தங்களிடம் இதை எல்லாம் கூறி எங்களது மனத்தின் ஆற்றாமையை தணிக்கவே நான் இங்கே வந்திருக்கிறேன்" என்றான்.

பஞ்சுகொண்டான் அவனை ஆழ்ந்து பார்த்தார்.

"நன்று ஒய்சளரே! அரங்க பக்தன் என்று நீ கூறுவது கேட்டு மகிழ்ச்சி அடைந்தோம். இந்தச் சமயத்தில் நீ எம்மிடம் வந்த நோக்கந்தான் என்ன?" என்று கேட்டார்.

"சுவாமி! தங்களது படைகள் இன்று வெகு திறமையோடு சண்டையிட்டன. ஆனால் இனிமேலும் தாங்கள் சண்டையிடக் கூடாது என்று சொல்லத்தான் வந்திருக்கிறேன்" என்றான் அவன்.

"சண்டையிடக் கூடாதா? ஏன்?" என்றார் பஞ்சுகொண்டான்.

"டில்லிப் படைகளில் கால் பகுதி கூட இன்று சண்டையில் கலந்து கொள்ளவில்லை. புறம் கண்ட ஆத்திரத்தோடு இன்று அவர்கள் போயிருக்கிறார்கள். நாளை ஆத்திரத்தோடு திரும்பி வருவார்கள்."

"திரும்பட்டுமே!"

"தங்களால் எதிர்த்து நிற்பது முடியாது சுவாமி" என்றான் ஒய்சளன்.

பஞ்சுகொண்டான் கோபத்துடன் திரும்பினார்.

"அப்படிச் சொல்லி எங்களைப் பயமுறுத்தத்தான் வந்தாயா?" என்று கர்ஜித்தவாறு கேட்டார் அவர்.

"பொறுக்க வேண்டும் சுவாமி! பொறுக்க வேண்டும். நான் சொல்ல வந்தது வேறு! சொல்லிவிடுகிறேன்.

கோட்டை முற்றுகைகளைத் தகர்ப்பதில் டில்லிப் படைகள் வல்லவர்கள். அதற்கு வேண்டிய உபகரணங் களோடு அவர்கள் வந்திருக்கிறார்கள். வாரங்கல் கோட்டை எவ்வளவு முரட்டுக் கோட்டை! பிரதாப ருத்திரர் எவ்வளவு தீரம் பொருந்திய அரசர்! எனினும் அந்த மாபெரும் கோட்டையே விழவில்லையா?"

"வீரனே!" என்று ஆத்திரத்துடன் திரும்பினார் பஞ்சுகொண்டான். "நீங்கள் கோழைகளானதும் அன்றி எங்களையும் கோழைகளாக்கப் பார்க்கிறீர்களா? மானத்தைக் கருதாமல் உன் மன்னர் எது வேண்டு மானாலும் செய்வார்! நாங்களும் அப்படிச் செய்வோம் என்று எதிர்பார்க்கிறீர்களா?" என்று முழக்கம் செய்தார்.

"சுவாமி! தயை புரிய வேண்டும்! நான் சொல்வதைச் செவிச் சாய்க்க வேண்டும். பன்னிரு ஆண்டுகளுக்கு முன் டில்லிப் படைகளை மாலிக்காபூர் அழைத்து வந்தபோது எம் மன்னர் வீர வல்லாளர் அவரை எதிர்க்கத்தான் நினைத்தார். இதற்காகத் துவாரசமுத்திரக் கோட்டையை ஆயத்தப்படுத்தினார். ஆனால் அதே கணத்தில் எதிரியின் படை பலத்தை ரகசியமாக அறிந்து வர உளவாளிகளை அனுப்பினார். அவர்கள் உளவறிந்து திரும்பி வந்தார்கள். சமுத்திரம் புரண்டதுபோல் டில்லிப் படைகள் வந்திருக்கின்றன என்று தெரிவித்தார்கள். எம் மன்னர் யோசித்தார். அந்தச் சமுத்திரத்தின் முன் துவாரசமுத்திரம் தனித்து நிற்க முடியாது என்பதை உணர்ந்தார். பெருந்தொகையைக் கப்பமாகக் கொடுத்து டில்லிக்குப் பணிந்து போக நினைத்தார்."

"மாலிக்காபூர் வெறும் கப்பத்தோடு எங்களை விடவில்லை. தமிழ் பேசும் நாடுகளுக்கு எம் மன்னரையே வழிகாட்டியாக வர வேண்டும்" என்று கட்டளை இட்டார்.

"எம்மன்னருக்கு வேறு வழியில்லை. விதியே என்று வழிகாட்டினார். ஆனால் அந்த வேதனை





பொறுக்காமல் வெகுநாள் வருத்தப்பட்டார். புழுவாய்த் துடித்தார். டில்லி சுல்தானின் தலைமையை நிச்சயம் ஒழித்துக் கட்டுவேன் என்று உறுதி பூண்டார். ஆனால் என்ன செய்வது சுவாமி! அவர் செய்த சபதம் இன்னும் நிறைவேறவில்லை. இந்தப் படை எடுப்புக்குக் கூட நாங்கள் வழிகாட்ட வேண்டி வந்தது. அது எங்கள் துர்பாக்கியம். ஆனால் வெள்ளம் வரும்போது நாணல் போல் வளைந்து கொடுத்த எம்மன்னரைத் தயவு செய்து சாதாரண மன்னராக நினைக்காதீர்கள். என்றைக்காவது அவர் தம் பேராற்றலைக் காண்பிக்கத்தான் போகிறார்" என்றான் தீர்மானமாக.

அவன் பேசி முடிந்ததும் அங்கே ஒரு நிசப்தம் பரவியது.

ஒய்சள வீரன் தன் கட்சியை எவ்வளவு தெளிவாக விவரித்து விட்டான் என்று எல்லோரும் நினைத்தார்கள்.

இப்போது குலசேகரன் திடீரென்று நோக்கிக் குறுக்கிட்டான்.



"சரி, ஒய்சளரே! எம்மை இந்த நிலையில் என்ன தான் செய்யச் சொல்கிறீர்?" என்றான்.

"சுவாமி! டில்லிப் படைகள் ஒரு சமுத்திரம். அதன் முன் தெற்கத்தி மன்னரெல்லாம் நடுங்குகிறார்கள். பயந்து ஓடுகிறார்கள். அவர்கள் யாரும் எதிர்க்கத் துணியாத போது அரங்க நகரத்தார் மட்டும் எதிர்க்க வேண்டுமா? யோசியுங்கள். எனது வேண்டுகோள் இது! தயவு செய்து டில்லிப் படைகளை எதிர்க்காதீர்கள்! அது உங்களால் முடியாது. நிச்சயமாக முடியாது. ஆகவே கோவிலிலிருந்து பொருட்களை எல்லாம் எடுத்துக் கொண்டு எல்லாரும் இரவுக்கிரவே ஓடிவிடுங்கள்! இதுதான் உங்களுக்குத் தக்க தருணம்! இதைச் சொல்லத்தான் இங்கே வந்தேன். பிறகு உங்கள் இஷ்டம்" என்று முடித்தான் ஒய்சள வீரன்.

மீண்டும் ஒரு நிசப்தம் எழுந்தது. பஞ்சு கொண்டானும் மற்றவர்களும் யோசனையில் ஆழ்ந்தார்கள்.

அப்போது குலசேகரன் குறுக்கிட்டு, "வீரனே! நீங்கள் சொல்லியபடி நடக்கவில்லை எனில் என்ன ஆகும்?" என்று கேட்டான்.

ஒய்சளன் லேசாகச் சிரித்தான். "டில்லி வீரர்கள் எது வேண்டுமானாலும் செய்வார்கள். எல்லாரையும் நிர்மூலமாக்கி விடுவார்கள். இது அனுபவ ரீதியான உண்மை. அந்தக் கோரங்களைக் காண வேண்டாம் என்பதற்காகத்தான் எச்சரிக்கை செய்ய வந்தேன். கோட்டைக்குள் யார் தங்கினாலும் தங்குங்கள். பெண்களை மட்டும் தங்க வைக்காதீர்கள்!" என்றான்.

பிறகு அவன் விடைபெற்றுப் போகத் தலைப் படவே, அவனது கண்களை மீண்டும் கட்டி மதில்மேல் அழைத்துப் போய் கண்களை அவிழ்த்து விட்டார்கள். "ரங்கா! ரங்கா!" என்று சொல்லிக் கொண்டே நூலேணியில் இறங்கினான் அந்த ஒய்சளன்.

அவன் போன பிறகு வெகுநேரம் வரை பஞ்சுகொண்டானும் மற்றவர்களும் யோசனை நடத்தினார்கள்.

ஒய்சளன் சொல்வது உண்மையாக இருக்கலாம் என்று அவர்கள் நினைத்தார்கள்.

அல்லது சண்டை செய்யாமலே திருவரங்கத்தைப் பிடிப்பதற்கு எதிரி செய்யும் சூழ்ச்சியாக இருக்குமோ என்றும் நினைத்தார்கள்.

நல்லவேளை! கோவிலின் நகைகளும், பொருள்களும் ஏற்கெனவே அகற்றப்பட்டு விட்டன.



அது அந்த ஒய்சளனுக்குத் தெரியாது. அவனுக்குத் தெரியப்படுத்தாததும் நல்லதுதான்.

ஆனால் உள்ளே இருக்கும் எல்லாரும் மடிவார்கள் என்று ஒய்சளன் பயமுறுத்துகிறானே! அப்படி ஒரு நிலை வந்தால், அதற்குத் துணியக்கூடிய தியாக சீலர்கள்தான் பெரும்பாலும் உள்ளே இருக்கிறார்கள். ஆனால் அதே நேரத்தில் உயிருக்கு ஆபத்து என்று தெரிந்தால் அதற்கு மனப்பூர்வமாக இணங்காதவர்கள் பலரும் உள்ளே இருப்பார்கள். அவர்கள் யாவரும் வெளியே போவதற்கு இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் கொடுத்து விடலாம் அல்லவா?

தவிர, ஒய்சளன் கூறுவது போலப் பெண்கள் யாவரையும் குறிப்பாக இளம்பெண்களை, உள்ளே இருந்து அகற்றி விடுவது நல்லதல்லவா? இவ்விதம் பலவிதத்திலும் யோசனை செய்து கொண்டிருந்தார்கள் அவர்கள்.

சிறிது நாழிகைக்குப் பிறகு உள் சுற்றுக்கள் முழுதிலும் முரசு அறையப்பட்டது. "உயிருக்கு ஆபத்து! வெளியே போகிறவர்கள் இப்போதே போகலாம்!" என்று அறிவிக்கப்பட்டது.

ஆரியபட்டாள் தெற்கு வாயிலில் பஞ்சு கொண்டானும், குலசேகரனும் நின்று கொண்டு மக்களை வெளியே அனுப்பும் பணியைக் கண்காணிக்கத் தொடங்கினார்கள். ஆடவர்களில் மொத்தம் நூற்றைம்பது பேர்தான் வெளியே போக முன் வந்தார்கள்.

அவர்களைச் சாரத்தில் ஏற்றி ஒவ்வொருவராக நூலேணியில் இறக்கிக் கொண்டிருந்தார்கள்.

இறங்கின பிறகு அவர்கள் யாவரும் ஊரின் மேற்குத் திசை வழியாகத் தப்பிக்க வேண்டும் என்று கூறப்பட்டிருந்தார்கள்.

அவர்கள் இறங்குவதற்கு வெகு நாழிகை சென்றது.

இதற்குள், கோவிலுக்குள் இருக்கும் எம்பெருமான் அடியார்களில் இளம் வயது பெண்கள் யாவரையும் வளைத்து அந்தச் சாரத்தின் அருகே பல வீரர்கள் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

ஆடவர்கள் இறங்கிய பிறகு, அவர்கள் சாரத்தின் மேலே ஏறும்படி பணிக்கப்பட்டார்கள். அப்போது அந்த எம்பெருமான் அடியார்களில் ஒருத்தி முன்னே வந்து, "சுவாமி! அடியார்கள் கோவிலிலேயே தங்கியிருக்க விரும்புகிறோம்!" என்றாள் துணிச்சலோடு.

"அதற்கெல்லாம் வழியில்லை. நீங்கள் போய்த் தான் ஆக வேண்டும்!" என்றார் பஞ்சு கொண்டான்.

இதையடுத்து அவர்களிடையே ஒரு வாக்குவாதம் ஆரம்பித்தது. ஆனால் பஞ்சுகொண்டான் கடைசி வரை உறுதியாகவே இருந்து விடவே, கண்களில் கண்ணீர் மல்கத் தேம்பும் நெஞ்சங்களுடன் அந்தப் பெண்கள் ஒவ்வொருவராகச் சாரத்தில் ஏறத் தொடங்கினார்கள்.

மேலே மதில் விளிம்பின் அருகில் வரிசையாகச் சென்ற அவர்கள் அதற்கு மேலே போகாமல் நின்று விட்டார்கள்.

"போங்கள்!" என்று கர்ஜித்தார் பஞ்சுகொண்டான். பெண்கள் தயக்கத்தோடு அடி எடுத்து வைத்தார்கள்.

அப்போது திடீரென்று மேலே நின்றிருந்த அழகிய நம்பி, "ஹோ" என்று சத்தம் போட்டான்.

எல்லாரும் திடுக்கிட்டு மேலே பார்த்தார்கள்.

அந்தச் சமயத்தில் மதிலுக்கு மேலாகச் சரசர என்று அம்புகள் பறந்து உள்ளே வந்து விழுந்தன.



# 12

அரணின் மேலாக அம்புகள் பறந்து வந்தபோது அழகிய நம்பி சட்டென்று தலையைக் குனிந்தான்.

பிறகு சாரத்தில் ஏறியுள்ள பெண்களைப் பார்த்துப் "போங்கள்! போங்கள்! கீழே ஒளிந்து கொள்ளுங்கள்!" என்று கத்தினான்.

பஞ்சுகொண்டான் உட்பட எல்லாரும் மதில் சுவர் ஓரமாக ஓடி ஒதுங்கினார்கள். வந்த அம்புகள் வெவ்வேறு திசைகளுக்குச் சென்று தரையில் கொத்திக் கொண்டு நின்றன.

பல அம்புகள் துலா மண்டபத்துத் தூண்களில் இடித்து 'டணார்' என்று ஓசை எழுப்பிக் கீழே வீழ்ந்தன.

அவர்கள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சில அம்புகள் மதிலின் மேல் வழியாக வளைந்து வந்து கூர் முனைகளுடன் கீழ் நோக்கி விர்ரென்று பாய்ந்தன.

மதிலை ஒட்டி உட்புறத்தில் ஒரு முழ நெருக்கத்தில் அவை விழுந்தன. இதனால் யாவரும் மதிலின் சுவரோடு சுவராக ஒட்டி நிற்க வேண்டி வந்தது.

அம்புகள் மேலும் அதே நிலையில் வருவதைப் பார்த்ததும் பஞ்சுகொண்டான், "எல்லாத் தீவர்த்தி களையும் அணையுங்கள்! சீக்கிரம்!" என்று கத்தினார்.

பல இடங்களிலும் ஆட்கள் சென்று தீவர்த்திகளை அணைத்தார்கள்.

மதிலின் உட்புறத்தில் கும்மிருட்டுச் சூழ்ந்தது. அதன் பிறகு சிறிது நேரத்தில் அம்புகள் வருவது நின்று விட்டன.

சுவர் ஓரத்தைவிட்டு வெளியே வந்த பஞ்சு கொண்டான், குலசேகரனைப் பார்த்து, "எதிரிகள் திறமை யோடு வில் வளைக்கிறார்கள். சுவரின் ஒதுக்குப்புற மாகக் கூட அம்புகள் வந்து விழுகின்றனவே!" என்றார்.

பிறகு மேலே கோபுரத்தை நோக்கி, "நம்பீ!" என்று அழைத்தார்.

"சுவாமீ!" என்று கூறிப் பதுக்கலை விட்டு வெளியே வந்தான் நம்பி.

"இரவு வேளையில் கூட எதிரிகள் படை எடுக்கலாம்! எச்சரிக்கையாக இருக்க வேண்டும்" என்றார் பஞ்சுகொண்டான்.

"உத்தரவு, சுவாமி!" என்றான் நம்பி.

"மதிலுக்கு வெளியே இரண்டு எரி பந்தங்களை எய்து தீயை உண்டாக்கி விடு! அவை அணைய, அணைய இரண்டிரண்டு பந்தங்களாக இரவு முழுவதும் எய்து கொண்டே இரு. எதிரிகள் வருகிறார்கள் என்றால் அந்த வெளிச்சம் காட்டிக் கொடுத்து விடும்!" என்றார்.

பிறகு எம்பெருமானடியார்களை நோக்கி, "நீங்கள் விரும்பியது நடந்துவிட்டது. உங்கள் இருப்பிடத்திற்குத் திரும்பிப் போகலாம். வெற்றி கிடைத்து எல்லாம் இனிதே முடிய வேண்டும் என்று பிரார்த்தனைச் செய்யுங்கள்!" என்றார்.

அந்தப் பெண்மணிகள் இருட்டினூடே புறப்பட்டுப் போனார்கள். எல்லாரும் கலைந்த பிறகு பஞ்சு கொண்டான் யோசித்தவாறு நின்றார்.

பிறகு குலசேகரனை நோக்கி, "டில்லிப் படைகள் அம்பு விடுவதை நேரில் பார்த்தபிறகு எனக்கு ஒன்று தோன்றுகிறது" என்றார்.



"என்ன சுவாமி?"

"மீண்டும் சண்டை நடந்தால் திருச்சுற்றுக்குள் இருப்பவர் பாடு கஷ்டமானது!"

"ஆமாம் சுவாமி!"

"அவர்கள் பயமில்லாமல் இருந்தால்தான் நமக்கு உதவி செய்வார்கள்."

"ஆம், சுவாமி."

"அதனால் சுற்றுக்குள் அங்கங்கே சின்னச் சின்னப் பந்தல்கள் போட வேண்டும். மேலே கட்டைகளை வேய வேண்டும். அம்புகள் வந்தால் கூரை மேல் தைத்துக் கொள்ளும்படிச் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் தான் அவர்கள் எந்தவிதப் பயமும் இல்லாமல் உதவி செய்வார்கள்" என்று கூறினார்.

பிறகு பலதரத்தார்களையும் அழைத்துப் பந்தல்கள் இடுவதற்காக உத்தரவுகள் வழங்க ஆரம்பித்தார் அவர்.

தெற்கு வாயிலில் இருந்து புறப்பட்ட அந்த இளவயதுள்ள எம்பெருமானடியார்கள், அந்த இருட்டில் மெள்ள நடந்து, நாழிகை வட்டில் வாயிலைக் கடந்து, இரண்டாவது திருச்சுற்றான இராஜ மகேந்திரன் திருவீதியில் நுழைந்தார்கள்.

உள்ளே நுழைந்ததுதான் தாமதம்! அவர்களால் தங்கள் குமிழ்ச் சிரிப்பையும் பேச்சையும் கட்டுப்படுத்தி வைத்திருக்க முடியவில்லை. பொல்லென்று பூ சொரிந்தாற்போல் சிரித்து, ஒருவரை ஒருவர் ஓடிப் பிடித்து இழுத்து, எள்ளி நகையாடி, இனிமையான ஆரவாரங்களை எழுப்பியவாறு உள்ளே நுழைந்தார்கள். உள்ளே அந்தப் பிரகாரங்களில் அணி விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

பால்போல் நிறமுள்ள அந்த இளங்கன்னிகைகள் கன்னலினும் இனிய மொழியில் கண்டன பேசிக் கிளுகிளுத்து, இன்பத்தில் மாய்ந்து வழிந்து, உள்ளே கருவறைக்கு முன்னால் உள்ள அழகிய மணவாளன் மண்டபத்தின் மீது பச்சிளம் கிளிகளைப் போல் பறந்து ஏறினார்கள்.

அவர்களது பணியே உல்லாசம்! பார்வையாலும், மொழியாலும், பாடலாலும், ஆடலாலும் கடவுளை உகப்பிக்கிறோம் எனும் காரணத்தை முன் வைத்து, அதன் மூலம் காண்போரையும் கேட்போரையும் உல்லாசத்தில் ஆழ்த்துவது அவர்களது ஒரே பணி! மற்றவர்களை உல்லாசப்படுத்த வேண்டியதாலேயே தங்களை எப்போதும் உல்லாசமாக வைத்திருக்கக் கடமைப்பட்டவர்கள். தங்கள் தங்கள் சொந்த வாழ்க்கை களில் உள்ள துக்கங்கள் அவர்களை அணுகினாலும், நினைத்த மாத்திரத்தில் அவற்றை மறந்து, மறைத்து அல்லது புதைத்து, மறுகணமே சிருங்கார மயமாய் பூத்து மலரும் ஒரு அபூர்வ மென்மைக் கலையை உணர்ந்து வைத்திருந்தார்கள் அவர்கள்.

ஆகவே, அந்தக் கன்னிகைகள் மண்டபத்தில் ஏறியதும் தங்களைச் சுற்றியிருக்கும் ஆபத்தையும், சோதனையையும் சிறிதும் நினைத்துப் பாராதவராய், உல்லாசமான ஒரு சூழலைத் தம்மிடையே ஏற்படுத்திக் கொண்டு, மெய்மறந்து மிகுந்த பரவசராய் பல ஆட்டங்கள் ஆட ஆரம்பித்தார்கள். ஆடலின் போது பாடிய பாடல்களில் அரங்கனிடம் அவர்கள் அருளும் தயையும் வேண்டி முறையிட்டுக் கொண்டார்கள்.

ஆடியபோது, கருவறையை மூடி எழுப்பியிருந்த கற்சுவர் அவர்கள் கண்களில் கனமாகப் பதிந்தது. புதிதாக எழுந்திருந்த அந்தச் சுவரின் மீது பெரிய பெருமாளை ஒரு பெரிய சித்திரமாக எழுதி இருந்தார்கள். அந்தச் சுவரின் முன்பாக ஒரு சாதாரண கல் விக்கிரகத்தைப் பீடம் ஒன்றின் மேல் ஏற்றி வைத்திருந்தார்கள்.



இவைகளைக் கண்ணுற்ற அடியார்கள் பலருக்கும் கண்ணில் நீர் வந்தது. "அரங்கனே, எமை மறைந்திருந்து பார்க்கிறீரோ?" என்று பொருள்பட உருக்கமாய் அவர்கள் பாடி அபிநயித்தார்கள்.

பாடலும் ஆடலும் நீள்நேரமாக நடந்து கொண்டு இருக்கும் போது, வாசந்திகாவும் அம்சகலா என்னும் பெயர் உள்ள பெண்ணும் வெளியே வந்தார்கள்.

அவர்கள் இருவர் கண்களிலும் கண்ணீர் அதிகமாக மல்கி இருந்தது. நாழிகை வட்டில் வாயிலைக் கடந்து வெளியே வந்ததும் இருவரும் இருளை ஊடுருவிப் பார்த்தார்கள்.

வடக்கு நோக்கித் திரும்பிப் பெருமூச்சு விட்ட வாசந்திகா, "அம்சா! அங்கே மதில் வாயிலிடையில் பலரும் கண் உறங்காது விழித்துக் காவல் காத்து வருகின்றனரே. அவர்களை நினைக்கும்போது எனக்கு கண்ணீர் வருகிறது" என்று நெஞ்சடைக்கக் கூறினாள்.

"ஏன் வடக்கு வாயிலை மட்டும் கூறுகிறாய்! எல்லா வாயில்களையும் சேர்த்துச் சொல்!" என்றாள் அம்சகலா.

"ஆமாம்!" என்று முகத்தை நொடித்த அவள், "எல்லோரையும் என்றுதான் வைத்துக் கொள்ளேன். அவர்களுக்கு எதுவும் நேரக் கூடாதே என்று அரங்கனைப் பிரார்த்திக்கிறேன். அவர்கள் எல்லோரும் வீரசுவர்க்கம் புகுந்தால் என்னால் தாங்க முடியாது! நானும் வீரசுவர்க்கம் புகுவேன், கட்டாயம்!" என்றாள்.

அம்சகலா அவளைத் திரும்பிப் பார்த்தாள்.

"ஏய்! நீ சொல்வது புதுமையாக இருக்கிறதே!" என்று கூறிவிட்டு, "எனக்கு எல்லா வாயில்களிலும் உள்ள எல்லோர் மீதும் இரக்கம் பிறந்திருக்கிறது. இவர்களுக்கு ஏதாவது நேரிட்டு, அதன்மூலம் கோவிலுக்கு ஏதாவது



நேரிட்டால் நான் வீரசுவர்க்கம் புகத் தயங்கமாட்டேன்" என்று அழுத்தத்துடன் கூறினாள்.

நடுயாமம் சென்றது. திருச்சுற்றுகளில் நடக்கும் பந்தல் வேயும் வேலைகளைப் பஞ்சுகொண்டான் கவனித்துக் கொண்டிருந்தார்.

அப்போது அவர் முன்னிலையில் ஒரு வீரன் வந்து அடிபணிந்து நின்றான். கையில் ஓலைச் சுருள் சுருட்டிய அம்பு ஒன்றை வைத்திருந்தான்.

"சுவாமி! இந்த அம்பு வடக்கு வாயிலுக்கு அருகே வந்து விழுந்தது. எய்தவருக்கு குரல் கொடுத்தும் அவரைக் காணவில்லை" என்றான்.

பஞ்சுகொண்டான் ஓலைச் சுருளை வாங்கிக் கொண்டார். பிறகு ஒரு கணம் யோசித்துவிட்டு, அதைப் பிடித்துப் படிக்கலானார்.

"அரையர் சுவாமி சந்நிதிக்கு அடியேன் குறளன் தெண்டன் சமர்ப்பித்து எழுதிய விஞ்ஞாபனம்! இங்கே டில்லிப் படைக்காரர்கள் ஏராளம் வந்திருக்கிறார்கள். நகரத்துக்குக் கிழக்கே, இரவு சமையல் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆற்றின் கரையோரம் உள்ள குடிகளிடமிருந்து பிராணிகளை எல்லாம் பிடுங்கி வந்தார்கள். அவர்கள் தளபதி உலுக்கான் மிகவும் கண்டிப்புக்காரர். அதனால் படைசனங்கள் எல்லோரும் மதுபானம் செய்யாமல் இருக்கிறார்கள்.

தளபதி பெரியதாகக் கூடாரம் கட்டி அதிலே தங்கியிருக்கிறார். அவர் கூடாரத்துக்குள் போவதற்கே சின்னத் தளபதிகள் பயப்படுகிறார்கள். தளபதி ரொம்ப ஒழுக்கத்தோடு இருக்கிறவராம். ஒருநாளில் பலமுறை தொழுகைச் செய்வாராம். இவர்கள் நாளைக்கே மதுரைச் சீமைக்குப் போக வேண்டும் என்று ஆயத்தப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். மதுரைச் சீமையைப் பிடித்து

அவர்களது மனிதர்களையே ராஜாவாக நியமிக்கப் போகிறார்களாம்.

இவர்கள் படைகள் எல்லாம் டில்லியை விட்டுப் புறப்பட்டு ஒரு வருஷம் ஆகிவிட்டதினாலே, மதுரைச் சீமையைப் பிடித்துவிட்டு உடனே திரும்ப வேண்டும் என்று நினைக்கிறார்களாம்.

இன்று நமது நகரத்து வீடுகளை எல்லாம் உடைத்துப் போட்டு இவர்கள் சோதனை செய்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் பல இடங்களைத் தோண்டிப் பார்த்ததிலே, நிறையப் பொருள்களைக் கைப்பற்றி இருக்கிறார்கள்.

நகை, நட்டு, நாணயம் எதுவும் கிடைக்காத தினாலே, ஆத்திரத்தில் வீடுகளுக்கு நெருப்பு வைத்து விட்டார்கள்.

காலையில் நடந்த சண்டையிலேயே சேதம் அவர்கள் பக்கத்திலே அதிகம். இந்த விதமாகத்தானே நடக்கும் என்று எதிர்பார்க்காததாலேயே ஆத்திரமாகத் தானே இருக்கிறார்கள். நாளைக்கு அதிக கோபத்துடனே தாக்குவதற்குத் தீர்மானம் போட்டிருக்கிறார்கள். மூன்று சின்னத் தளபதிகள் இதில் கெடுபிடியாகத்தானே இருக்கிறார்கள்.

கோட்டையைப் பிடிக்க இவர்களிடம் புதுசான யந்திரம் ஒன்று இருக்கிறது. அதன் பெயர் மஞ்சனிக்* என்று சொல்லுகிறார்கள். தூரத்திலிருந்து இது ஒரு கனமான அம்பைப் பத்து ஆள் பலத்துடன் விட்டெறியுமாம். கற்சுவர்களையும் பொத்தல் செய்து விடுமாம. நாளை உபயோகித்தாலும் உபயோகிப்பார்கள். நாளை ஒரு நாள் சமாளித்தாலே எல்லாம் வெற்றியாக முடியும். குடி படையில் உள்ள ஒரு ஆள் போல் நான் அவர்கள் வீரர்களிடம் பழகிக் கொண்டிருக்கிறேன். எல்லாம் நல்லபடி நடக்க வேணும், அரங்கன் சகாயம்."

* உண்டிவில்லின் தத்துவத்தில் இயங்குவது.



படித்து முடித்ததும் பஞ்சுகொண்டான் அதைக் குலசேகரனிடம் கொடுத்தார். அவனும் படித்தான். பிறகு படைகளில் முக்கியமான பேர்களை எல்லாம் பஞ்சுகொண்டான் அழைத்து அவர்களுடன் ஆலோசனை செய்ய ஆரம்பித்தார்.

"ஒரு காரியத்தை எடுத்து விட்டோம். இனி அதை நடுவில் விடக் கூடாது" என்று உறுதியாகத் தெரிவித்தார் பஞ்சுகொண்டான்.

"நாளை ஒரு நாள்தானே! இன்று நமக்குக் கிடைத்த வெற்றி நாளைக்கும் நமக்குக் கிட்டட்டும். அதற்காக எந்த விதத்திலும் ஒத்துழைப்போம்!" என்றார்கள் கூடியிருந்தவர்கள்.

இரவில் நடுப்பொழுது தாண்டியும் அழகிய மணவாளன் மண்டபத்தில் நடந்து கொண்டிருந்த ஆடல்கள் நிற்கவே இல்லை.

ஆடல்கள் ஓயும் போலிருந்தால் பாடல்களில் ஈடுபட்டுக் கீழே அமர்ந்தவாறு எல்லோரும் அபிநயம் பிடித்தார்கள். நடுநிசிக்குப் பிறகு அவர்களது கானம் வெகு அற்புதமான இனிமையோடு கோவில் திருச்சுற்றுகளில் ரீங்கரித்தது.

அந்தக் கானம் கேட்டு, மடைப்பள்ளியிலிருந்து எழுந்த வயதான எம்பெருமானடியார்களும், மண்டபத்திற்கு வந்து மற்றவர்களுடன் சேர்ந்துப் பாடுவதில் கலந்து கொண்டார்கள்.

கூட்டம் பெருகிக் கொண்டே போகவே எல்லோருக்கும் உற்சாகம் புரண்டு எழுந்து கொண்டிருந்தது.

ஒரு கட்டத்தில் எல்லோரும் அதிகப் பரவசராக எழுந்து கையில் தீபங்களை எடுத்துக் கொண்டு, "பொலிக! பொலிக!" என்ற நம்மாழ்வாரின் பாசுரத்தைப்

பாடிக் கொண்டே மூன்றாவது திருச்சுற்றுக்குள் மெள்ள நடக்கலானார்கள்.

பொலிக! பொலிக! பொலிக!
போயிற்று வல் உயிர்ச் சாபம்;
*நலியும் நரகமும் நைந்த;
நமனுக்கு இங்கு யாது ஒன்றும் இல்லை;
கலியும் கெடும்; கண்டு கொண்மின்;
கடல்வண்ணன் பூதங்கள்* மண்மேல்
மலியப் புகுந்து, இசைபாடி,
ஆடி, *உழிதரக் கண்டோம்!

கன்னிகைகள் கைகளில் தீபம் ஏந்தி, பரவசக் குரலில் பாடி அந்த நிசி வேளையில் அந்தப் பிரகாரத்தைச் சுற்றி வருவது ஒரு கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

தீப வரிசைகள் ஒரு நதி போல் மெதுவாக ஊர்ந்து வருவதைக் கண்டதும், திருச்சுற்றுள் வேலை செய்து கொண்டிருந்தவர்கள் யாவரும் மெய்மறந்து அந்த ஊர்வலத்தைப் பார்த்தார்கள்.

அந்தப் பெண்களின் இனிமையான பாடல் அங்குள்ள யாவருக்கும் புது உற்சாகம் கொடுப்பது போலிருந்தது.

மூன்றாவது திருச்சுற்றை இந்த ஊர்வலம் மெள்ள மெள்ள இரண்டு முறை சுற்றி வந்தது.

மூன்றாவது முறை மேற்குப் பிரகாரத்தில் அவர்கள் வந்து கொண்டிருந்தபோது, திடீரென்று பல வீரர்கள் அவர்கள் முன்னே வந்து, "நில்லுங்கள்!" என்று பரபரப்புடன் கூறினார்கள்.

* நலி - நோய்

* பூதங்கள் - அடியார்கள்

*உழிதருதல் - திரிதல், சஞ்சரித்தல்



பாடல் உடனே நின்றது.

"என்ன விஷயம்?" என்று கேட்டுப் பல பெண்கள் முன்னால் வந்தார்கள்.

"எதிரிகள் ரகசியமாக வந்து கொண்டிருக்கிறார்கள். நீங்கள் உடனே அவரவர் இருப்பிடம் போய்விட வேண்டும்! பஞ்சுகொண்டான் உத்தரவு" என்றான் ஒரு வீரன்.

உடனே எல்லாரும் பரபரத்தனர். தீபங்கள் யாவும் அணைக்கப்பட்டன. தங்கள் தங்கள் இருப்பிடங் களுக்கு எல்லோரும் பறக்க ஆரம்பித்தார்கள்.

வடக்கு வாயிலின் மேலுள்ள கோபுரத்தில் இருந்து பஞ்சுகொண்டானும் மற்றவர்களும் வெளித் திசைகளைக் கூர்ந்து பார்த்தவாறு இருட்டைத் துழாவிக் கொண்டிருந்தார்கள்.

அவர்களால் எதையும் கண்டுபிடிக்க முடிய வில்லை. ஆனால் வெளிச் சுற்றுகளில் திடீர் என்று வெளிச்சங்கள் அங்கங்கே ஒளி வீசுவதையும், நகர்ந்து செல்வதையும் அவர்களால் உணர முடிந்தது.

எப்போதாவது ஒவ்வொரு குதிரையின் கனைப்பும் சன்னமாக எழுந்து அவர்கள் காதுகளில் விழுந்து கொண்டிருந்தது.

வெளிச் சுற்றுகளில் பெருவாரியாக எதிரி வீரர்கள் இயங்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை பஞ்சுகொண்டான் அறிந்து கொண்டார்.

பொழுது விடியும் முன்பே அவர்கள் அப்படி இயங்குவது அவருக்கு ஆச்சரியத்தை அளித்தது.

தம் மனிதர்கள் எல்லோரையும் சித்தமாயிருக்கும் படி அவர் உத்தரவு வழங்கிவிட்டார்.

உள் திருச்சுற்றுக்களில் ஒரே இயக்கங்கள் ஏற்படலாயின. எல்லோரும் சத்தம் போடாது இயங்கிக் கொண்டிருந்தார்கள். விரைவில் காளவாய்கள் திகுதிகு என்று எரிய ஆரம்பித்தன.

யாவரும் பரபரப்புடன் இருக்கும் அந்த வேளையில் குலசேகரன், "அதோ!" என்று கூவிப் பஞ்சுகொண்டானிடம் காட்டவே அவரும் திரும்பிப் பார்த்தார். அவரது ரத்தம் அப்படியே உறைந்துவிட்டது.

# 13

பஞ்சுகொண்டானைக் கூடக் கலக்கும்படியாக கிழக்குப் பாரிசத்தில் ஒரு காட்சி எழுந்தது.

ஐந்தாவது சுற்றான அகளங்கன் வீதியிலிருந்து நான்கு பெரிய தீக்கோளங்கள் விர்ரென்று வான வீதியில் புறப்பட்டன. பெரிதாக பொறிகளைச் சிதற விட்டுக் கொண்டு, வேகத்துடன் பாய்ந்து நான்காவது சுற்றுக்குள் வந்து விழுந்தன.

அவை வந்த வேகத்தைப் பார்த்தால் மூன்றாவது சுற்றுக்குள்ளேயே வந்துவிடும் போலிருந்தது. ஆனால் போதிய சக்தியில்லாமல் போகவே, நான்காவது சுற்றுக்குள்ளே விழுந்து திகுதிகு என்று எரிய ஆரம்பித்தன.

அதைப் பார்த்த பஞ்சுகொண்டான் மனத்தில் பல எண்ணங்கள் எழுந்தன.

வந்த தீக்கணைகள் வழக்கமான சிறிய எரி பந்தங்களைத் தூக்கி வரவில்லை; பெரிய தீக்கோளங்களையே தூக்கி வந்தன. அந்தக் கோளங்களைக் கேவலம் மனிதர்களால் எய்திருக்க முடியாது. ஏனெனில் தீ ஜுவாலையின் அனலை ஒரு மனிதனால் தாங்கி



இருக்க முடியாது. தவிர அவ்வளவு வேகமாகவும் எய்திருக்க முடியாது.

'ஆகவே, குறளன் குறிப்பிட்டிருப்பதைப் போல் மஞ்சனீக் என்ற அந்த யந்திரத்தானாலேயே அவை எய்யப்பட்டிருக்க வேண்டும்' என்று எண்ணினார் பஞ்சுகொண்டான்.

இந்த யந்திரங்கள் இவ்வளவு சக்தி வாய்ந்தவையாக இருந்தால் இவற்றைச் சமாளிக்கப் போவது எப்படி?

ஆகா! இந்த நிலைமையில் நமக்குப் படை பலம் போதாமல் இருக்கிறதே! இந்த நாட்டை ஆளும் பஞ்ச பாண்டியர்களே! எமக்கு ஒரு ஐயாயிரம் பேர் கொண்டப் படையைத் தந்து உதவியிருக்கக் கூடாதா? என் வேண்டுகோளுக்குச் செவிசாய்க்காமல் இருக்கிறீர்களே! நூறு பேரையும், ஊர் ஜனங்களையும் படையாகப் பண்ணிக் கொண்டுத் தனியாக நிற்கிறோமே. அந்த ஒரு திறமையை மதித்தாவது எமக்கு உதவி செய்திருக்கக் கூடாதா?

இவ்வாறு பலவும் நினைத்துப் பஞ்சுகொண்டான் குழம்பியிருக்கும்போது குலசேகரன், "சுவாமி!" என்று அழைத்தான்.

கலைந்து எழுந்த அவர், "குலசேகரா! தீக் கோளங்கள் பெருவாரியாக வருகின்றனவே! அவை நம் பிரகாரத்துள் விழுந்தால் நமது ஆட்களின் போக்கு வரத்துத் தடைபட்டு விடுமே! இதனால் நமது போருக்கும் கூடத் தடங்கல் ஏற்படுமே!" என்று வருத்தத்தோடுக் கூறினார்.

உடன் அவரும் குலசேகரனும் நீண்ட நேரம் ஆலோசனையில் ஆழ்ந்தார்கள்.

அவர்கள் யோசித்துக் கொண்டிருக்கும்போதே திடீரென்று தீக்கோளங்கள் வருவது நின்று விட்டது.

அதை உணர்ந்த பஞ்சுகொண்டான் குலசேகரனை நோக்கி, "குலசேகரா! எதிரிகள் தமது தீக்கணைகளைப் பரீட்சித்துப் பார்க்கிறார்கள் போலும்" என்றார்.

"பரீட்சை எதற்கு சுவாமி? வாரங்கல் கோட்டையை முற்றுகை இட்டவர்களுக்கு இந்தப் பரீட்சை அவசியம் இல்லையே!" என்றான் குலசேகரன்.

பஞ்சுகொண்டான் திரும்பினார்.

"குலசேகரா! வாரங்கல் கோட்டை எப்படிப்பட்டது? எழுபத்தேழு *பரிகங்களை உடைய பெரிய கல் அரண் அது! அதைச் சுற்றி மண்ணால் உருவாக்கிய மற்றொரு அரண் உண்டு. இந்த இரண்டையும் சுற்றி ஆழமான அகழியும் உண்டு. இது போன்ற கோட்டையை முற்றுகை இடும் முறையோ சண்டையிடும் முறையோ எல்லாப் படைகளுக்குமே தெரிந்தவைதான்! ஆனால் நமது அரண்கள் முற்றிலும் மாறுபட்டவை! நம்மைச் சுற்றி வெளியே ஐந்து அரண்கள் இருக்கின்றன. அவற்றைப் பாதுகாக்க நாம் முற்படவில்லை. எனினும், அந்த ஐந்து அரண்களின் வாயில் வழியாக எதிரிகள் உள்ளே வரும் போது பயப்படுவார்கள். எங்கே தங்களை எதிரிப் படைகள் இரண்டு அரண்களுக்கு இடையே சிக்க வைத்து நசுக்கி விடுவார்களோ என்று நடுங்குவார்கள். அந்த வேதனையை டில்லிப் படைகள் நேற்றுக் காலையி லேயே அனுபவித்துவிட்டன. ஆகவே அவ்விதம் நெருக்கடி உள்ள இடத்தில் இனி சண்டைச் செய்ய விரும்பமாட்டார்கள். இதற்காகத் தங்கள் போர் முறைகளை அவர்கள் மாற்ற நினைத்திருப்பார்கள். இப்போது தீக்கோளங்களைப் பறக்க விட்டுப் பார்ப்பதே ஒரு பரீட்சையை முன்னிட்டுத்தான். ஐந்தாவது பிரகாரத் திலிருந்து நேராக மூன்றாவதுக்குள் தீக்கணைகளை எறிய முடியுமா என்று பார்த்திருக்கிறார்கள். அது முடிய வில்லை என்று இப்போது தெரிந்து விட்டது" என்றார்.

*முன்புறம் முனைத்துக் கொண்டு எடுப்பாகத் தெரியும் கோட்டைப் பகுதிகள். பாதுகாப்புச் சண்டைக்கு மிகவும் உதவுபவை.



தீக்கோளங்கள் வருவது நின்று விட்டாலும் ஐந்தாவது பிரகாரத்தில் வெளிச்சங்கள் தொடர்ந்து ஒளிர்ந்து கொண்டே இருந்தன. அங்கே நடமாட்டம் நிகழ்கிறது என்பதை உணர்ந்த பஞ்சுகொண்டான் யோசனை செய்தவாறு மிகக் கவனத்துடன் இருக்கத் தொடங்கினார்.



ஆரியபட்டாள் தெற்கு வாயிலில் அழகிய நம்பியும் அவன் படையாட்களும் கவனமாக இருந்து கொண்டு, இடையிடையே இரண்டிரண்டு எரிபந்தங் களைப் பட்சிராஜன் தோப்பின் பக்கமாக எய்து கொண்டு, கோட்டையைப் பாதுகாத்து வந்தார்கள். பந்தங்கள் அளித்த வெளிச்சத்தில், தோப்பின் சில பகுதிகளே தெரிந்தாலும், அந்தக் கண்காணிப்பே போதும் என்று அழகிய நம்பியும் அவனது வீரர்களும் நினைத்திருந்தார்கள். ஆனால், திடீரென்று வீரர்களில் ஒருவன், "ஐயா! தோப்புக்குள் நடமாட்டம் தெரிகிறதே!" என்று கூறியதும் எல்லோரும் பல திசைகளிலும் உற்றுப் பார்த்தார்கள்.

ஒரு குறிப்பிட்ட திசையில் உற்றுக் கவனித்தபோது இருட்டில் வரிசையாக ஏதோ நகர்ந்து கொண்டிருப்பது அவர்கள் கண்களுக்குத் தட்டுப்பட்டது. அது ஏதாக இருக்கும் என்று பலபேரும் பலவிதமாக யோசித்துத் தங்களிடையே பேசத் தொடங்கினார்கள்.

அழகிய நம்பி மட்டும் பலமாகச் சிந்தித்தவாறு அந்தத் திசையிலேயே உற்றுப் பார்த்துக் கொண்டு இருந்தான். அவனது யோசனைக்கு ஒன்று புலனாகியது. அங்கே அந்தத் தோப்பில் வரிசையாக நின்று கொண்டு, பலர் எதையோ கைகளில் மாற்றி மாற்றி அனுப்புவது தெரிந்தது. அப்புடி அனுப்பப்படுவது கூடைகள்தான் என்று ஊகித்த அழகியநம்பி இதில் ஏதோ மோசமிருக்கிறது என்று எண்ணினான்.

நடமாட்டம் தெரிகிற இடமானது தூரத்தில் இருந்ததால் எரிபந்தத்தை அவ்வளவு தூரம் எறிந்து அங்கே நடப்பதைக் கண்டுகொள்ள முடியவில்லை. தவிர இடையே மரங்களும் செடிகளும் வேறு குறுக்கிட்டிருந்தன. இதனால் பலவிதமாக யோசனை செய்த நம்பி, பஞ்சுகொண்டானுக்குச் செய்தி அனுப்பி விட்டு மேலும் கவனமாக அங்கே நடப்பவைகளைக் கவனிக்க ஆரம்பித்தான்.



கண் பூத்துப் போகும் வண்ணம் பார்த்துக் கொண்டு இருந்த போது, திடீரென்று அவனது பார்வையில் ஒரு ராட்சத ஆமை மெள்ள மெள்ள நகர்ந்து கொண்டிருப்பது தெரிந்தது.

அப்படிப்பட்ட காட்சி ஒன்றை அதுவரை பார்த்திராததால், உணர்ச்சி வசமாகிய அவன், மற்றவர்களுக்கு அதைக் காட்டிவிட்டு உடனே அந்தத் திசை நோக்கி எரி பந்தங்களை எய்யலானான்.

பல பந்தங்கள் தவறுதலாகச் சென்ற பிறகு, ஒரே ஒரு பந்தம் மட்டும் வருகிற அந்த ஆமையின் பக்கம் போய் விழுந்ததும், வருவது ஆமையல்ல, வேறு ஏதோ ஒரு பொருள் என்பதை அவன் உணர்ந்து கொண்டான்.

விரைவில் அது ஒரு மரத்தால் ஆகிய பீடம் என்று அவனுக்குத் தோன்றவே, இது எப்படி நகர்கிறது? இதற்குள் இருக்கும் மாயம் என்ன? ஏன் இது இவ்வளவு மெதுவாக நகர்கிறது? இதை இயக்குபவர்கள் யார் என்றெல்லாம் மூளையைக் குடைந்து யோசனை செய்ய ஆரம்பித்தான்.

போகப்போக அந்தப் பீடம் நேராகக் கோட்டையை நோக்கி வராமல் பாம்பு போல் வளைந்து வளைந்து ஒரு பாதையை ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

அதன் திசையை நோக்கி அடுத்தடுத்து எரி பந்தங்களை அனுப்பியபோது, ஒரு பந்தம் அந்தப் பீடத்தின் பின்புறமாக விழுந்து, குபுக்கென்று ஒரு பள்ளத்தில் மறைந்து போவது தெரிந்தது.

"ஆகா! சுரங்கம், சுரங்கம்!" என்று கத்தினான் அழகிய நம்பி.

மற்ற வீரர்கள் அவனை அணுகி, "ஐயா என்ன சொல்கிறீர்கள்?" என்று வினவியபோது, இன்னும் தனது அதிர்ச்சியில் இருந்தும் உணர்ச்சிப் பெருக்கிலிருந்தும் மீளாத அழகிய நம்பி, "அது ஒரு சுரங்கம்! எதிரிகள் தோண்டிக் கொண்டு இருக்கிறார்கள். நேராகக் கோட்டையை நோக்கித் தோண்டினால் நம் கண்ணில் பட்டுவிடுமோ என்று நினைத்து, வளைவு வளைவாகத் தோண்டுகிறார்கள்" என்று கத்தினான்.

"அப்படியானால், அந்த மரப்பீடம் எதற்கு, ஐயா?" என்று ஒரு வீரன் கேட்க, "அதுதான் அவர்கள் தோண்டிக் கொண்டிருக்கிற இடம்! நாம் அம்பு போட்டால் அங்கே தோண்டுபவர்களின்மீது படாமல் இருப்பதற்காக, இப்படி ஒரு பீடம் போன்ற மறைப்பை நகர்த்திக் கொண்டே அதன் கீழ் ஆட்கள் வேலை செய்கிறார்கள்!" என்றான் நம்பி.

அழகிய நம்பி அப்போது பார்த்தது அந்நாளில் முற்றுகையிடப்படும் கோட்டைகளின் முகப்பை அணுகுவதற்காக டில்லிப் படைகள் கையாண்ட ஒரு புது உத்தி முறை!* ஆளை மறைக்கும்படியான ஆழத்தில் ஒரு பள்ளத்தை வளைந்து வளைந்து செல்லும்படித் தோண்டி வருவார்கள். எதிரிகள் அம்பு போட்டால் மறைந்து கொள்வதற்காகத்தான் இந்த வளைவுகளை ஏற்படுத்தி இருப்பார்கள். வெட்டப்படும் மண்ணைச் சில தருணங்களில் கூடைகளில் கை மாற்றி வெளியே கொண்டு போய் வெகு தூரத்தில் எறிவார்கள். இந்தக் கைமாற்றல் வேலை, அந்த நேரத்தில் அந்தப் பள்ளத்துள்ளும் நடந்து கொண்டிருந்தது. ஆனால்

* இந்த முறைக்கு 'ஸாபாத்' என்று அந்நாளில் பேர் வழங்கப்பட்டு இருந்தது.



உள்ளே இருக்கும் ஆட்கள் வெளியே தென்படவே இல்லை.

இவைகளை எல்லாம் மெள்ள மெள்ள உணர்ந்த அழகிய நம்பி உடனே மீண்டும் பஞ்சுகொண்டானுக்குச் செய்தி அனுப்பிவிட்டு மேலே நடப்பதைக் கவனிக்க லானான்.

சிறிது நேரம் சென்றது. பஞ்சுகொண்டான் மேலும் இருபது வீரர்களையும், மற்ற பரிசனங்களையும் அவனுக்கு உதவியாக அனுப்பி வைத்தார்.

வந்த பரிசனங்கள் உடனே காளவாய் அடுப்பை உண்டு பண்ணி அகலமான அண்டாக்களை வைத்து அவைகளில் எண்ணெயைக் கொதிக்க வைக்கலானார்கள்.

பரிசனங்கள் செய்ய வேண்டிய காரியங்களைச் சிறிது நேரம் அழகிய நம்பி மேற்பார்வை பார்த்திருந் தான். பிறகு மேலே சென்று பார்த்தபோது அவனுக்கு ஒரு ஆச்சரியம் காத்திருந்தது.

அந்தப் பள்ளப் பாதை கோட்டையை நோக்கி மேலும் நெருங்கி வந்திருந்தது. அதன் உட்புறத்தை அம்புகளிடம் இருந்து மறைப்பதற்காக இன்னும் பல மரப்பீடங்கள் இப்போது அதன் மேலே வைக்கப்பட்டு இருந்தன.

இந்தப் பீடங்கள் நெருக்கத்தில் வரும் வரை காத்திருந்து விட்டுப் பிறகு அவை மீது நம்பியும் வீரர்களும் கொத்துக் கொத்தாக அம்புகளைப் பறக்கவிட்டார்கள்.

ஆனால் ஆச்சரியம்! அம்புகள் யாவும் பீடங்களின் மேற்புறத்தில் தைத்துக் கொண்டு நின்றனவே ஒழிய அவற்றிற்கு எந்தவிதச் சேதத்தையும் விளைவிக்கவில்லை. அதைக் கண்ட அவர்கள் அதன் கூரை தோலால் வேயப்பட்டிருக்க வேண்டும் என்று தீர்மானித்தார்கள்.

அம்புகளை எய்து இனி பிரயோசனம் இல்லை என்று உணர்ந்த நம்பி உடனே வேறு வழியில் இறங்கலானான்.

தெற்கு வாயில் முகப்பைச் சுற்றி வைக்கோல், சுள்ளி, விறகு ஆகிய எரிபொருள்களை எல்லாம் மேலே அரணிலிருந்து கட்டுக் கட்டாகத் தள்ளி பெரிய குவியலாக்கி வைத்துக் கொண்டான். எதிரியின் பீடங்கள் நெருங்கி வரும்போது அவற்றில் தீ வைத்து விடுவது என்று தீர்மானித்திருந்தான்.

ஆரியபட்டாள் வடக்கு வாயிலில் அதன் நேர் எதிர்புறத்தில் அதே நேரத்தில் வேறொரு ஆயத்தம் நடந்து கொண்டிருந்தது.

அம்பு வீச்சுத் தூரத்துக்கு அப்பால் இரு இடங்களில் நின்று கொண்டு டில்லி வீரர்கள் இருட்டில் ஏதோ வேலை செய்ய ஆரம்பித்தார்கள்.

உயரமான கொம்புகளையும், மூங்கில்களையும் கொண்டு வந்து நிறுத்தி, மண்ணையும் தோண்டிக் குவித்து வெகு விரைவில் அவர்கள் இரு உயரமான மேடைகளை ஏற்படுத்தலானார்கள்.

அந்த மேடைகளை மேலும் வளர்த்துக் கொண்டே போய் மதில் சுவரைவிட ஒரு முழம் உயரமாக இருக்கும்படி தளத்தை அமைத்துக் கொண்டார்கள்.

பஞ்சுகொண்டானும் அவரது படையாட்களும் தங்கள் கோபுர நிலையிலிருந்து நடப்பதை எல்லாம் கூர்ந்து கவனித்து வந்தார்கள்.

டில்லி வீரர்கள் இருட்டில் வேலை செய்தாலும், அவர்கள் செய்யும் வேலை என்ன என்று ஓரளவு அவர்களால் ஊகிக்க முடிந்தது.

எதிரிகள் தூரத்தில் இருந்ததால், அவர்கள் மீது அம்பு விட்டுப் பிரயோசனமில்லை என்று உணர்ந்து,



அந்த மேடைப் பக்கம் அம்பு செலுத்தாமலும் இருந்தார்கள்.

ஆனால், மேடையை எதற்குக் கட்டினார்கள், அதன் பிரயோசனம் என்ன என்பதை அவர்களால் ஊகிக்க முடியவில்லை. எனினும், மேடைகளை வெகு உன்னிப்போடு அவர்கள் கவனித்து வந்தார்கள்.

விடிய ஒரு முகூர்த்தம் இருக்கும். மேடைகள் மீது டில்லிப் படைகள் தங்கள் மஞ்சனீக் யந்திரங்களை ஏற்றி வைத்தார்கள். அவைகளில் முரட்டு அம்புகளைப் பொருத்தி வைத்தார்கள். சில கணங்கள் காத்திருந்த போது திடீரென்று உத்தரவுகள் வழங்கப்பட்டன. உடன் அவர்கள் முதல் கொத்து அம்புகளை கோபுரத்தின் மீது சீற விட்டார்கள்.

பலம் பொருந்திய அந்த அம்புகள் கோபுரத்தின் வெவ்வேறு பகுதிகளை வேகமாகத் தாக்கியதும் அதன் சக்தி தாளாமல் கோபுரத்தின் சுதைப் பகுதிகள் பெரும் ஓசையுடன் கலகலத்து விழலாயின.

“ஒதுங்குங்கள்! ஒதுங்குங்கள்!” என்று இரைந்து கத்தினார் பஞ்சுகொண்டான். எல்லோரும் பரபரப்புடன் ஒதுங்கினார்கள். அவர்கள் முகமெல்லாம் குப்பென்று வியர்த்தன.

இரு அம்புகள் கோபுரத் துவாரங்களின் வழியே உள்ளே புகுந்து கோபுர உள் அமைப்புகளைப் பலமாகத் தாக்கின. காறைப் பகுதிகள் பெயர்ந்து உடனே கீழே விழலாயின.

துவாரத்துக்கு உள்ளிருந்த பஞ்சுகொண்டானும், குலசேகரனும் குனிந்து ஒதுங்கி இடிபாடுகளில் இருந்து தப்ப வேண்டி வந்தது. இந்நிலையில் என்ன செய்யலாம் என்று துடித்த போது, தீக்கோளம் ஒன்றைத் தாங்கி வந்த அம்பு ஒன்று, முதல் துவாரத்தின் வழியாக உள்ளே சீறிப் புகுந்தது.

"குலசேகரா! சீக்கிரம்! கோபுரத்தை விட்டுக் கீழே இறங்கு!" என்று கத்தினார் பஞ்சுகொண்டான்.

தீக்கோளம் உள்ளே விழுந்து ஒரே அனலை வீசி எரிந்தது. அதே நேரத்தில் இரண்டு தீக்கணைகள் கோபுரவாயிலின் மரக்கதவில் தைத்துக் கொள்ளவே கதவு அப்படியே திகுதிகுவென்று பற்றி எரிய ஆரம்பித்தது.

# 14

வடக்கு வாயிலில் கோபுரத்தில் முதல் தளத்தில் எதிரியின் தீக்கோளம் விழுந்து பகபகவென்று எரிந்து கொண்டிருந்தது. அங்கே இருந்த வீரர்கள் எல்லோரும் சாரத்தின் மீது தொப் தொப்பென்று குதித்தார்கள்.

இரண்டாம் தளத்தில் இருந்தவர்களும் வேகமாய்ப் படிகளில் இறங்கி வெளியே சாரத்தை நோக்கி விருட்டென்று பாய்ந்தார்கள். எஞ்சி நின்றவர்கள் பஞ்சுகொண்டானும் குலசேகரனும்தான்.

"குலசேகரா! குதி! சீக்கிரம்! சீக்கிரம்!" என்றார் பஞ்சுகொண்டான்.

வீசும் அனலின் எரிப்பைச் சகித்துக் கொண்டு குலசேகரன் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தான்.

அனலை மறைப்பதற்காகத் தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டு, "சுவாமி!" என்று பணிவு பொங்க அழைத்தான்.

"கோபுர தளத்தை விடுவது சரியல்ல! அப்படி விட்டால் அதுவே நமது தோல்வியாக முடியும்!" என்றான்.



மறு மூலையில் இருந்த பஞ்சுகொண்டான் அந்த நிலையிலும் இலேசாக முறுவலித்தார்.

"நன்று சொன்னாய் குலசேகரா! நான் அப்படிச் சொல்வேனா? இந்தத் தளத்தில் எல்லோரும் சேர்ந்து நிற்க வேண்டாமே! ஏதாவது நடந்தால் ஒரு சேர மரணம் அடைய வேண்டாமே! எனக்கு ஏதாவது நேர்ந்தால் அடுத்தபடியாக முன்னின்று சண்டை போட வேண்டுவது நீதானே! நம் இருவருக்கும் சேர்ந்து ஏதாவது நிகழக் கூடாதல்லவா? அதனால்தான் அப்படிச் சொன்னேன்!" என்றார் ஆதரவு பொங்க.

"சுவாமி!" என்று உணர்ச்சியோடு கூறினான் குலசேகரன். "வீரமும், தரும சிந்தனையும் உள்ள தங்களுக்கு எதுவும் நேராது! எந்நேரத்திலும் தங்களுக்கு நிழல்போல இருப்பேன்!" என்றான் அவன் மிக உறுதியோடு.

பிறகு நீளமான ஈட்டி ஒன்றை எடுத்துத் தீக்கோளத்தை அவன் நெருங்கப் பார்த்தான். அனல் கடுமையாக வீசவே, யோசித்து நின்று, சுற்றிவரப் பார்க்கும்போது, அங்கே மூலையில் நீர்க்குடம் ஒன்று கண்ணில் தென்பட்டது. உடனே அதைத் தூக்கிச் சரித்து, உடம்பை நன்றாக நனைத்து, இரு கண்களையும் மூடிக் கொண்டு, தீக்கோளத்தை மெள்ள அணுகி ஒரே உந்தலில் அதைச் செந்தூக்காகத் தூக்கி வெளியே விட்டெறிந்தான்.

பிறகு கீழே நோக்கி, "கற்களைக் கொண்டு வாருங்கள்" என்று உத்தரவிட்டான்.

உடனே பரிசனங்கள் வரிசையாக நின்று கருங் கற்களை மேலே அனுப்பவே, குலசேகரன் பறந்து வேலை செய்து, கோபுரத்தின் முதல் துவார வாயிலில் அந்தக் கற்களைக் குவித்து, விரைவில் அதை மூடலானான். பார்ப்பதற்கு மட்டும் வசதியாக சிறிது அளவு இடைவெளி விட்டு வைத்திருந்தான்.

இதற்கிடையே மஞ்சனீக் எறிந்த அம்புகள் பலவும் சீறி வந்து கோபுரத்தைப் புண்படுத்திக் கொண்டே இருந்தன. ஆனால், இற்றுப் போன பகுதிகள் எல்லாம் தாக்குதலில் பொடிந்து விழுந்த பிறகு, மேலும் வரும் அம்புகளுக்கு அசைந்து கொடுக்காமல் கோபுரம் திடமாக நிற்க ஆரம்பித்தது.

இந்த நேரத்தில் பஞ்சுகொண்டான் தீவிரமாக யோசித்திருந்தார். மஞ்சனீக்கில் இருந்து வரும் அம்புகள் குறிப்பிட்ட ஒரே இலக்கைத்தான் தாக்கு கின்றன என்றும், அந்த இலக்கை மாற்றுவதற்குச் சிறிது நேரம் பிடிக்கிறது என்றும் அவர் உணர்ந்திருந்தார். அந்த யந்திரம் ஒரே இடத்தில் ஸ்திரமாக அழுந்தி இருப்பதால்தான் இப்படி நிகழ்கிறது என்பதை யோசித்த அவர் குலசேகரனுக்கு எச்சரிக்கை செய்து விட்டு, ஒரு நூலேணியை வெளிப் பக்கம் போடச் சொல்லி அதில் தைரியமாக இறங்கிக் கீழே அவசரமாகச் சென்றார். நல்ல இருட்டாக இருந்ததால் அவரைக் கண்டுபிடிக்க முடியாது என்று அவர் நினைத்திருந்தார்.

கதம் கதம் என்று அடித்துக் கொள்ளும் இதயத் துடன், குலசேகரன் அவர் செய்கைகளைக் கவனித்து கொண்டிருந்தான். அடிக்கடி தூரத்தில் இருந்த மேடை களையும் அவன் கண்காணித்துக் கொண்டு இருந்தான். பஞ்சுகொண்டான் எளிதில் தாக்கப்பட மாட்டார் என்பதை உணர்ந்திருந்தாலும், அவனுக்கு உள்கிடக்கை யாக ஒரு பயம் இருந்து கொண்டே இருந்தது.

கீழே இறங்கிய பஞ்சுகொண்டான் நீண்ட ஈட்டி ஒன்றை கேட்டு வாங்கிக் கொண்டார். பிறகு சிலம்பம் ஆடுவது போல விருட் விருட்டென்று வாயிற் கதவுக்கு அந்தப் பக்கமும், இந்தப் பக்கமுமாக ஓடி, ஓடிச் சென்று, அதில் தைத்துக் கொண்டிருந்த எரி அம்புகளை ஓங்கிப் பலமுறை தட்டிவிட்டார். விரைவிலேயே இரு அம்புகளும் கீழே உதிர்ந்து விட்டன.

இந்தச் சமயத்தில் மேலே இருந்து பல மண்பாண்டங்கள் கயிறு மூலம் கீழே தாழ்த்தப்பட்டன.



பாண்டத்திலுள்ள நீரை வாரி வாரிக் கதவில் விட்டு எறிந்து அதில் பிடித்திருந்த தீயையும் அணைக்க முயன்றார் பஞ்சுகொண்டான்.

சிறிது நேரத்திற்குள் தீ அணைக்கப்பட்டு விட்டது. ஆனால் அதே நேரத்தில் கோபுர வாயிலில் நடப்பது என்ன என்பதை எதிரிகள் ஊகித்து விட்டார்கள்.

சீக்கிரமே அவர்களது மஞ்சனீக்கின் திசை மாற்றப் பட்டு கோபுர வாயிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களும் அவர்களுக்கு இலக்குகளாக மாறியிருந்தன.

"சுவாமி! போதும் போதும்! மேலே வாருங்கள்!" என்று கத்தினான் குலசேகரன்.

பஞ்சுகொண்டான் நூலேணிப் பக்கம் ஓடினார். அங்கே அவர் தலை நிமிரும் அதே வேளையில் சீறி வந்த ஒரு அம்பு அங்குல இடைவெளியில் அவர் தலையைத் தாண்டி நூலேணி மீது பாய்ந்தது.

"குலசேகரா! ஏணியை வேறு இடம் மாற்றிப் போடு!" என்று கத்தினார் பஞ்சுகொண்டான்.

அதே நேரத்தில் குலசேகரன் இருட்டை நோக்கி அம்புகளைச் சரசர என்று எறிவதில் ஈடுபட்டிருந்தான்.

ஏனெனில் இருட்டைப் பயன்படுத்திக் கொண்டு, தரையில் ஊர்ந்த வண்ணம் பல எதிரி வீரர்கள் உள்ளே வந்திருக்கிறார்களோ என்று அவனுக்கு ஐயம் தோன்றி இருந்தது.

"குலசேகரா! எங்கிருக்கிறாய்? நூலேணியை வேறு இடத்தில் போடு!" என்று மீண்டும் கத்தினார் பஞ்சுகொண்டான்.

கத்தும்போதே, தம்மைச் சுற்றிலும் அம்புகள் பீறிட்டு வந்து மதில் சுவர்கள் மீது மோதிக் கொள்வதை அவர் உணர நேர்ந்தது.

"சுவாமீ!" என்று அவரைப் பாராமலேயே கத்தினான் குலசேகரன். அவன் கைகள் அம்புகளை எய்வதிலேயே ஈடுபட்டிருந்தன. "உங்கள் உத்தரியத்தை மடித்துக் கட்டுங்கள்! அதன் வெள்ளை, இருட்டில் எதிரிகளுக்குத் தெரிகிறது. தரையில் ஊர்ந்து அப்பால் செல்லுங்கள்!" என்று கத்தினான்.

பஞ்சுகொண்டான் உடனே தரை மீது படுத்தார். அந்த நிலையிலேயே உத்தரியத்தைத் தூக்கித் தார்ப்பாய்ச்சி விட்டு, பிறகு உருண்டு கொண்டே அப்பால் சென்று விட்டார்.

குலசேகரன் அதற்குள் உள்பிரகாரத்தை நோக்கி இரைந்து சில வீரர்களை உதவிக்கு அழைக்கவே, அவர்களும் விரைந்து வந்து பஞ்சுகொண்டான் உருண்டு இருக்கும் பக்கமாக நூலேணியை நகர்த்தினார்கள். அந்தப் பகுதியில் அம்புகள் வரவில்லை என்பதை உணர்ந்த பஞ்சுகொண்டான் மெதுவாக எழுந்தார். விறு விறு என்று ஏணியில் ஏறினார். மதிலுக்கு மேலே பத்திரமாக வந்து சேர்ந்தார்.

ஆரியபட்டாள் தெற்கு வாயிலில் அழகிய நம்பிக்கும் அவனது நாற்பது வீரர்களுக்கும் மற்றொரு சோதனை வந்திருந்தது.

டில்லி வீரர்கள் தோண்டிய வாய்க்கால் பாதை மெள்ள மெள்ள கருடன் சன்னிதியை நெருங்கியிருந்தது.

அம்பு விடும் தூரத்திற்கு அந்தப் பள்ளம் வந்துவிட்டதால், அதன் வளைவுப் பகுதிகளைத் தடுப்புச் சுவர்களாகப் பயன்படுத்திக் கொண்டு எதிரி வீரர்கள் அம்புகளைத் தொடுக்கத் தொடங்கி இருந்தார்கள்.

கோபுர துவாரங்களில் உள்ள வெளிச்சங்களைக் குறியாக வைத்துக் கொண்டு அம்புகளை அவர்கள் வீசிவிட்டுக் கொண்டிருந்தார்கள்.



தளத்திற்குள் நிற்பதே அழகிய நம்பிக்குக் கஷ்டமாக இருந்தது. எனினும் அவன் மனம் தளரவில்லை. தீவர்த்திகள் எல்லாவற்றையும் அணைத்து விட்டுப் பேசாமல் இருக்கத் தீர்மானித்தான்.

ஆனால், அவை அணைந்த பிறகும் அம்புகள் குறியோடு வந்து கொண்டிருக்கவே, கோபுரத்தின் மற்றொரு துவாரந்தான் முன்பக்க துவாரத்தைக் காட்டிக் கொடுக்கிறது என்பதைக் கண்டுபிடித்தான். பிறகு யோசித்து முன் துவாரத்தை அடைப்பதுதான் ஒரே வழி என்று தீர்மானித்து அதை அடைப்பதற்கான வேலைகளில் உடனே ஈடுபடலானான்.

உள்ளே மூன்றாவது பிரகாரத்தில் வேலை செய்து கொண்டிருந்த பரிசனங்களிடையேயும், திருமடைப் பள்ளியில் உள்ள எம்பெருமானடியார்களிடையேயும் பெரிய பரபரப்புத் தோன்றியிருந்தது.

பெரிய தீக்கோளங்கள் அடிக்கடி பிரகாரத்துள் வந்து விழுந்ததே இதன் காரணமாகும். திகுதிகு என்று அவை எரியும் வேகத்தைப் பார்ப்பதே அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. என்ன திரவத்தை* ஊற்றி இந்தப் பந்தங்களைப் பற்ற வைக்கிறார்கள் என்று அவர்கள் பலரும் அதிசயத்தோடு யோசித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

பிரகாரத்தில் மாறி மாறி விழுந்த கோளங்களை நீண்ட கழிகளால் மெதுவாக நகர்த்தி அங்கங்கே அதற்காகத் தோண்டப்பட்டிருந்த பெரும் குழிகளில் பரிசனங்கள் தள்ளிக் கொண்டிருந்தார்கள்.

இந்தச் செய்கைகள் அவர்களது நேரத்தையும் உழைப்பையும் இடையறாது கவர்ந்து கொண்டே இருந்தன.

* இரச கற்பூர உருண்டைகளை டில்லிப் படைகள் அந்நாளில் உபயோகப்படுத்தின.

கோளங்களைத் தவிர, அம்புகளும் அதிவேகத்துடனே உள்ளே விழுந்து கொண்டிருந்ததால் பிரகாரங்களில் நடமாடுவது கூடக் கஷ்டமாக இருந்தது.

எனினும், தைரியத்தைத் தளரவிடாமல், அவர்கள் யாவரும் உள்ளே வேலை செய்து கொண்டிருந்தார்கள். ஆனால் போகப் போக, அம்புகள் அதிக அளவு வருவதை அவர்கள் விரைவில் உணர நேர்ந்தபோது, அதனால் அவர்களுக்குப் பெரிய வியப்பு ஏற்பட்டது.

அவை இடையறாமல் பல திசைகளிலிருந்தும் வருவதைக் கண்டதும், அதற்கு ஈடு கொடுக்க முடியாமல் போகவே பரிசனங்களில் ஒருவன் கோபுர நிலையை நோக்கி, "சுவாமீ சுவாமீ!" என்று அழைத்தான்.

பஞ்சுகொண்டான் சாரத்தின் வெளியே வந்ததும், "சுவாமீ! அம்புகள் ஏராளமாக வருகின்றனவே! என்ன காரணம் தெரியவில்லையே!" என்று அவன் கத்தினான்.

அந்தச் சமயத்தில் எதிர்பாராத கணத்தில் ஒரு அம்பு அவன் விலாவில் பாய்ந்துவிடவே, "அம்மா!" என்ற வார்த்தையை முழுவதுமாக உச்சரிக்கும் முன்னரே அவன் கீழே சுருண்டு விழுந்தான்.

அடுத்த கணத்தில் இரு வீரர்கள் மரக் கேடயங்களால் தங்களை மறைத்துக் கொண்டு ஓடி வந்து, அவனைத் தூக்கி எடுத்துக் கொண்டு மடைப் பள்ளியை நோக்கி ஓடினார்கள்.

இதை எல்லாம் பார்த்த பஞ்சுகொண்டான் வேதனையோடு கண்களைச் சிறிது மூடினார். "சுவாமீ!" என்று கலக்கம் மிகுந்த குரலில் குலசேகரன் அழைத்தபோது மெதுவாகக் கண்ணைத் திறந்தார். "என்ன குலசேகரா?" என்று தழுதழுத்த குரலில் கேட்டார் அவர்.

"சுவாமி! அம்புகள் நிறைய வருகின்றனவே!" என்றான் குலசேகரன்.



"நானும் உணர்கிறேன். யந்திரங்கள் சிலவற்றால் மட்டும் இவ்வளவு அம்புகளை எய்ய முடியாது. ஆட்களும் உள்ளே வந்திருக்க வேண்டும் குலசேகரா!" என்றார் பஞ்சுகொண்டான்.

"ஆமாம் சுவாமி! இருட்டில் வில் வீரர்கள் அங்கங்கே புகுந்து மறைந்திருக்கிறார்கள். அம்பு வரும் திசைகளில் நான் எதிர் அம்பு செலுத்திப் பார்த்தேன். ஆனால் வரவர அவை வரும் திசைகள் அதிகமாகிக் கொண்டிருக்கின்றனவே ஒழியக் குறையவே இல்லை. எனவே நம் வீரர்கள் எல்லோரையுமே சண்டையில் ஈடுபடுத்த வேண்டியதுதான்!" என்றான் குலசேகரன்.

அவன் சொல்லி முடித்திருக்கவில்லை. அப்போது திடீரென்று வெளியே பயங்கரமான பிளிறல்கள் கிளம்பி எழுந்து கோவில் மதில்கள் எங்கும் மோதிக் கொண்டு எதிரொலித்தன. ஒரு கணம் திடுக்கிட்டு நின்ற குலசேகரனைப் பஞ்சுகொண்டான் ஏறிட்டுப் பார்த்தார்.

"தளராதே குலசேகரா! டில்லிக்காரர்கள் யானைகளை உள்ளே கொண்டு வந்திருக்கிறார்கள். எல்லாவற்றையும் நாம் சமாளிக்கலாம்" என்று கூறிய அவர், சாரத்தின் அடிப்புறத்தை நோக்கி, "யார் அங்கே?" என்று கூவினார்.

"சுவாமி!" என்றான் ஒரு வீரன்.

"பேரிகைகளை முழக்கு! எல்லோரையும் முழு யுத்தத்திற்கு ஆயத்தப்படுத்து!" என்று உத்தரவிட்டார்.

பேரிகைகள் முழங்கின. சங்குகள், சின்னங்கள், முரசங்கள் யாவும் பேரோசையோடு அதிர்ந்தன.

பரண்களில் உள்ள வீரர்கள் எல்லோரும் வில்லை வளைத்து நின்றார்கள். அவர்களுக்கு உதவும் பரிவாரங்களும் இயங்குவதற்கு ஆயத்தமாக நின்றார்கள்.

பஞ்சுகொண்டான் கோபுரத்தின் முதல் தளத்தின் மீது ஏறினார். துவாரத்தின் இடைவெளி வழியாக வெளியே கூர்ந்து பார்த்தார்.

குலசேகரன் கூறியது தவறல்ல என்று அவருக்குத் தெரிந்தது. இருட்டில் டில்லி வீரர்கள் எங்கும் பரந்து நிற்பது தெரிந்தது. அவர்களில் பலரும் அம்புகள் தொடுத்துக் கொண்டே இருப்பது தெரிந்தது. தூரத்து மேடைகளின் அருகில் கருங்குன்றுகளைப் போல் சில யானைகள் நிற்பதும் தெரிந்தது.

'நம்மை வேண்டுமென்றே இருட்டில் சண்டைக்கு இழுக்கவே இத்தனை அம்புகளை விட்டுக் கொண்டிருக் கிறார்கள்' என்று நினைத்த பஞ்சுகொண்டான் சில கணங்கள் யோசித்து நின்றார்.

ஆனால் கணத்துக்குக் கணம் டில்லிக்காரர்களின் அம்புகள் கூடிக் கொண்டு வரவே, இனியும் தாமதிக்க லாகாது என்று உணர்ந்து, சைகை மூலம் தம் கட்டளை களை உடனே வீரர்களுக்கு வழங்கினார்.

உடன், பரண்களிலிருந்த வீரர்கள் எல்லோரும் 'ஆ' என்ற பேரிரைச்சல்களை எழுப்பிக் கொண்டு எதிரிகளை நோக்கி அம்புகளைத் தொடுக்கத் தொடங்கினார்கள்.

இடையிடையே பல திசைகளில் எரிபந்தங் களையும் பறக்கவிடத் தொடங்கினார்கள்.

அவை பல்வேறு இடங்களில் போய் விழுந்தபோது அங்கங்கே டில்லிப் படைகள் குவிந்து கிடப்பதும், மேலும் பெருகிக் கொண்டிருப்பதும் அவர்களுக்குத் தெரியலாயிற்று.

**வை**கறையின் முதல் மினுமினுப்பு வானில் எழுந்த போது, அரங்கன் திருக்கோயிலின் வீரர்கள் யாவரும் வியர்வை மழையில் மூழ்கியிருந்தார்கள்.



எடுத்தது, தொடுத்தது, விடுத்தது என்று அடுத் தடுத்து இயங்கி இடைவெளியிலாது அம்புகளை விட்டுக் கொண்டிருந்த காரணத்தால் எல்லோரும் வெள்ளமான ஒரு வியர்வைப் பெருக்கில் மூழ்கியிருந்தார்கள்.

வானத்தின் மினுமினுப்பு கூடிக் கொண்டே வந்தது. அப்போது திடீரென்று "தீன், தீன், தீன்" என்று பெரும் கூச்சல்கள் வெளிப் பிரகாரத்தில் பீறிட்டு எழலாயின. பெருத்த ஆரவாரங்களைச் செய்து கொண்டே டில்லிப் படைகள் வடக்கு வாயிலை நோக்கி அட்டகாசமாய் முன்னேறிக் கொண்டிருந்தன.

அவர்கள் வில்களிலிருந்து எண்ணற்ற அம்புகள் விடுபட்டு வானவீதியை ஒரு கூடுபோல் மூடிக் கொண்டிருந்தன. கோபுரத்தின் மீதும் உட்பிரகாரத்திலும் அவை சர மழைபோல் பெய்து பெரும் அளவிலும் பெரும் வேகத்திலும் அவைகளைத் தாக்க ஆரம்பித்தன.

குலசேகரன் ஒரே சுழற்சியாகச் சுழன்று போர் செய்து கொண்டிருந்தான். அவன் கைக்கு அம்பு எடுத்துக் கொடுக்க முடியாமல் பரிவாரங்கள் திணறிக் கொண்டிருந்தார்கள்.

பஞ்சுகொண்டான் புயல்போல் அங்குமிங்கும் சுழன்று அம்புகளை எய்து கொண்டிருந்தார். அவர் முன்னால் மரக்கேடயத்தைப் பிடித்து நின்ற ஆட்கள் அவர் எந்தத் திசையில் எப்போது நகர்கிறார் என்பதை உணர முடியாமல் திணறிக் கொண்டிருந்தார்கள்.

மற்ற வீரர்கள் யாவரும் ஒரே தீவிரமாக எல்லாத் திசைகளிலும் அம்புகளை எய்து கொண்டிருந்தார்கள்.

ஆனால் அவர்கள் விடும் அம்புகள் எதிரி விடும் அம்புகளின் எண்ணிக்கைக்கு பத்துக்கு ஒன்று விகிதத் தில் கூடத் தேறாததால், டில்லி வீரர்கள் அதிகமான சேதமின்றி வடக்கு வாயிலை நோக்கித் தைரியமாக முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

விஷயங்கள் தங்கள் பிரயாசைக்கு அதிகமாகப் போகின்றன என்பதை உணர்ந்த பஞ்சுகொண்டான், "எங்கே எண்ணெய்க் கலயங்கள்? சீக்கிரம் எடுங்கள்" என்று கூறி உள் பிரகாரத்தை நோக்கித் திரும்பிய போது அங்கு தென்பட்ட காட்சியைப் பார்த்ததும் அப்படியே உறைந்தாற்போல் திடுக்கிட்டு நின்று விட்டார்.

# 15

மூன்றாவது பிரகாரத்துள் பஞ்சுகொண்டான் பார்த்தபோது ஒரு கோரமான காட்சித் தென்பட்டது.

பரிசனங்களில் நிறைய பேர் அம்பு பட்டு அலங்கோலமாகச் செத்துக் கிடந்தார்கள். கட்டைப் பந்தல்கள் பலவும் அங்கங்கே சரிந்து கூளங்களாகக் கிடந்தன.

எஞ்சிய சிலவற்றின் கீழ் சிலர் நின்று கொண்டு, உருளிகளில் எண்ணெய் கொதிப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

இந்த ஒரு சோகமான நிலையிலும், பரிசனங்கள் மனம் தளராமல் அங்கங்கே ஓடி, பரண் மீது நின்று போரிட்டுக் கொண்டிருக்கும் வீரர்களுக்கு உதவி அளித்துக் கொண்டிருந்தார்கள்.

இறந்தவர்கள் உடல்களைக் கூட அப்புறப்படுத்த நேரமில்லாமல் பரிசனங்கள் ஒரே வேலையாய் இயங்குவதைக் கண்டதும், பஞ்சுகொண்டான் திக்பிரமையுடன் சிறிதுநேரம் நின்றார்.

அவர் நின்ற நிலையைப் பார்த்த பரிவார ஆள் ஒருவன் மரக் கேடயத்தால் தன்னை மறைத்துக் கொண்டு மேலே நோக்கி, "சுவாமி! கட்டளை இடுங்கள்! எதற்கும் சித்தம்!" என்று கத்தினான்.



அவனைத் தொடர்ந்து மற்ற பரிவாரங்கள் யாவரும் கோபுரத்தை நோக்கி, "சுவாமி! கட்டளை இடுங்கள்! எதற்கும் சித்தம்" என்று கத்தினார்கள்.

பஞ்சுகொண்டான் உடனே, "என் அருமைப் பரிவாரங்களே! உங்களது பலம்தான் என் பலம்! உங்களுடைய தைரியம் தான் என் தைரியம்! நம்மிடம் சக்தி உள்ளவரை போராடுவோம்!" என்று கூவினார்.

பிறகு, கோவிலுக்குள் இருக்கும் ஜனங்களில் விருப்பமுள்ளோரைப் போரிட அழைத்து வரும்படி கூறிவிட்டு, "ஜய ரங்கா! திருவரங்கா!" என்று கோஷித்துக் கொண்டு தளத்துக்குள் ஆவேசத்துடன் பிரவேசித்தார்.

உடன், "ஜய ரங்கா, திருவரங்கா!" என்ற வாழ்த்தொலி பிரகாரங்களில் எங்கும் எதிரொலிக்க ஆரம்பித்தது.

போர் உக்கிரமாயிற்று.

ஆரியபட்டாள் எனப்படும் வாசல்கள் மிகவும் புராதனமானவை.

மூன்றாவது பிரகாரத்தைச் சுற்றியுள்ள நீண்ட மதிலில் தெற்கிலும் வடக்கிலும் இந்த வாசல்கள் இருக்கின்றன. மதிலின் மேற்கிலும் கிழக்கிலும் வாசல்கள் கிடையாது.

ஆதிகாலத்தில் வங்கப் பகுதியான கௌட தேசத்தைச் சார்ந்த அரசர் ஒருவர், திருவரங்கத்தின் அருமை பெருமைகளைக் கேள்விப்பட்டு, ஏராளமான திரவியங்களை எடுத்துக் கொண்டு, அரங்கனுக்குக் காணிக்கையாக அவைகளைக் கொடுக்க நினைத்து பயபக்தியுடன் வலசையாக* புறப்பட்டு வந்தார்.

* வலசை போதல் – அந்நிய தேசத்திற்குப் போதல்

திருவரங்கத்தை அடைந்து, திரவியங்களைக் கொடுக்க முயன்றபோது கோவிலார் அவற்றை உடனே அங்கீகரிக்கவில்லை.

மற்ற தேச மக்களைக் கொள்ளை அடித்து அந்தப் பொருள்களைக் காணிக்கையாகக் கொண்டு வந்து இருக்கிறார்களோ என்று கோவிலார் ஐயப்பாடு கொண்டிருந்தார்கள்.

இவ்விதம் அங்கீகாரம் பெறாத பொருள்களை எல்லாம் கௌட அரசர், கோவில் வாசலில் போட்டு வைத்து, அவற்றிற்குக் காவலாகத் தம் தேசத்தைச் சேர்ந்த ஆரிய அந்தணர்களை வைத்து விட்டு ஊர் போய்ச் சேர்ந்தார்.

இப்படி ஆரியபடர்களான* அந்தணர்கள் பலகாலம் அந்த வாசலிலுள்ள பொருள்களைக் காத்து வந்ததால் அதற்கு ஆரியபட்டாள் வாசல்* என்று பெயர் வந்தது.

இந்த ஆரியபட்டாள் வாசல்கள்தான் டில்லிப் படைகளின் தாக்குதலுக்கு இலக்காயிருந்தன.

தெற்கு வாசலில் அழகிய நம்பிக்கு அப்போது பரபரப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது.

டில்லிக்காரர்களின் வாய்க்கால் பாதை மேலும் முன்னேறிக் கொண்டிருந்தது. அவர்கள் வீசும் அம்புகளும் அதிகமாகிக் கொண்டிருந்தன.

இதை அறிந்த அழகிய நம்பி யோசனை செய்து எரி பந்தங்களை ஏவி, வெளிப்புறத்தில் குவித்துக் கிடந்த

* படர் – வீரர். படர்கள் என்பது படாள் என்றும் பட்டாள் என்றும் மருவிற்று.

* பின்னர் ஆரிய அந்தணர்கள் அந்தக் கோவில் வாசலைப் பாதுகாத்து வந்த நேர்த்தியைப் பார்த்து கோவிலார் மனம் மாறி அந்தப் பொருள்களை ஏற்றுக் கொண்டார்கள். அந்தணர்கள் பிறகு பாதுகாப்பு வேலையில் நிரந்தரமாகத் தங்கிவிட்டார்கள்.



விறகு, வைக்கோல் சூழ்ந்தி இவைகளின் மீது நெருப்பைப் பற்ற வைத்தான்.

பகபக என்று தீ எரிந்து, படலங்களாகப் புகையைப் பரப்பத் தொடங்கியதால் வெகு விரைவில் மதிலும் அதன் வாசலும் மறைந்துவிட்டன.

அதைப் பயன்படுத்திக் கொண்டு நம்பியும் அவனது பரிவாரங்களும் மளமளவென அம்புகளை வாய்க்கால் பாதையை நோக்கி வீச ஆரம்பித்தார்கள்.

சிறிது நேரம் சென்றிருக்கும். திடீரென்று கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் அம்புகள் குதித்து வருவது தெரியவே அழகிய நம்பி திடுக்கிட்டு நிற்கலானான்

புகையை அனுசரணையாக வைத்துக் கொண்டே டில்லி வீரர்கள் கிழக்கிலும் மேற்கிலும் ஓடி இருக்கிறார்கள் என்றும், அங்கிருந்து வில் வளைக்கிறார்கள் என்றும் நம்பி புரிந்து கொண்டான்.

இரு பாரிசங்களிலும் உள்ள பரண்களில் ஐந்தைந்து வீரர்களே இருந்ததால், அவர்கள் போதாது என்று நினைத்த நம்பி, மேலும் பல பேர்களை அங்கே அனுப்பி பரண்களின் பலத்தை அதிகரிக்க வைத்தான்.

ஆனால், வெகு விரைவில் அந்தப் பலமும் காணாமல் போகவே என்ன செய்வதென்று தெரியாமல் யோசிக்க ஆரம்பித்தான்.



வடக்கு வாயிலில் போர் உக்கிரமாக நடந்து கொண்டிருந்தது. இரு பக்கங்களிலும் வீரகோஷங்கள் கேட்டுக் கொண்டே இருந்தன.

பஞ்சுகொண்டானோ குலசேகரனோ களைப்பதாகத் தெரியவில்லை. இருவர் இருக்கும் இடங்களைக் கூட எளிதில் கண்டு கொள்ள முடியவில்லை. அவ்வளவு

வேகத்தோடும், பரபரப்போடும் அவர்கள் நகர்ந்து கொண்டே இருந்தார்கள்.

பிரகாரத்தில் பரிவார ஜனங்கள் ஒவ்வொருவராக அம்புபட்டு இறந்து கொண்டே இருந்தார்கள்.

அதை அறிந்த எம்பெருமானடியார்கள் பலரும் தாமாகவே வெளி வந்து, உயிரைப் புல்லாக மதித்துப் பந்தல்களுக்குக் கீழே புகுந்து, அங்குள்ள காளவாய் அடுப்புகளைக் கருத்தோடு கவனிக்க ஆரம்பித்தார்கள்.

மற்ற ஜனங்களும் வந்து சேர்ந்து கொள்ளவே வெகு விரைவில் கலயம் கலயமாக கொதிக்கும் எண்ணெய் வெளியே வீசி அடிக்கப்பட்டது.

ஆரியபட்டாள் வாசலில் தாரை தாரையாகக் கொதி எண்ணெயும் நீரும் ஆறுகளாக ஓட ஆரம்பித்தன.

பொழுது நன்றாக விடிந்து கொண்டிருந்தபோது போரின் உக்கிரமும், உச்ச நிலையை அடைந்து விட்டது.

மஞ்சனீக்கின் பலம் வாய்ந்த கணைகள் கோபுர நிலையைத் தாக்கிய வண்ணம் இருந்தன. பிரகாரத்துள் தீக்கணைகளும் விழுந்த வண்ணம் இருந்தன.

அந்தப் பிரதேசத்தின் காற்று மட்டும் கண்ணுக்குத் தெரியுமானால் அது தாறுமாறாக கிழிந்து நூல் நூலாக அறுந்து தொங்குவது தெரிந்துவிடும்.

அவ்வளவு தூரத்திற்கு அம்புகள் நானா திக்குகளிலும் ஆகாயத்தைக் கிழித்துக் கொண்டிருந்தன.

போர் உக்கிரமாக நிகழ்ந்ததால் இரு தரப்பிலும் அடிபட்டு விழுந்தவர்களின் ஓலம் போர் இரைச்சல் களுடன் கலந்து கொண்டன.

சில இடங்களில் இரத்தம் சிறு ஓடைகளாக ஓட ஆரம்பித்திருந்தது.



Released by Maran's Dog. Toronto, Canada



சூரியன் உதித்து ஒரு நாழிகை வரை இரு தரப்பார் களுக்குமிடையே அதிக மாறுதல்கள் இல்லாமல் போர் நடந்து கொண்டிருந்தது.

அதன் பிறகு பஞ்சுகொண்டானின் படையாட் களுக்குத் தளர்ச்சி ஏற்பட ஆரம்பித்தது.

மூன்று இரவுகளாக அவர்கள் உறங்கவே இல்லை. மடைப்பள்ளியிலிருந்து அனுப்பப்படும் உணவுகளை உண்டு கொண்டு பரண்களிலேயே அவர்கள் பொழுதைக் கழித்திருந்தார்கள்.

அம்புகளை இடையறாமல் சலிப்பின்றிப் பொழிந்து கொண்டிருந்ததால் உடம்பு இற்றுப் போய்க் களைத்து விட்டார்கள்.

தவிர டில்லி வீரர்கள் எவ்வளவு அடிபட்டு விழுந்தாலும் புற்றீசல்கள் போல் முளைத்துக் கொண்டே இருந் தார்கள்.

Released by Maran's Dog. Toronto, Canada

முதன் முதலாக பரணில் இரு வீரர்கள் களைப்பு மிகுதியால் மயக்கம் அடைந்து விழுந்தார்கள்.

அதை அடுத்துக் கீழே பரிவாரங்களில் பலரும் அவ்விதம் மயங்கி விழுந்தார்கள்.

கோபுர நிலையில் பலருக்கும் கைகள் ஓய்ந்து விட்ட படியால் வில்லைத் தாங்குவதற்குக் கூட வலிமை இல்லாமல் சோர்ந்து விழுந்தார்கள்.

ஒவ்வொருவராக இந்த நிலைக்கு ஆளாவதைப் பார்த்த பஞ்சுகொண்டான் வேதனையுடன், "குலசேகரா!" என்றார்.

ஒரு கணமே திரும்பிய குலசேகரன் நொடியில் அவர் கூற நினைத்ததை உணர்ந்துவிட்டு,

"சுவாமி! கடைசி வரை போரிடுவோம். இருவருமே மிஞ்சினாலும் சரி!" என்று இரைந்து கத்திவிட்டுத்

திரும்பிப் பாராமல் அம்புகளை எய்வதில் ஈடுபட்டிருந்தான்.

போர் இவ்விதம் ஒரு சிக்கலான நிலைக்குப் போய்க் கொண்டிருந்த போது, கலவரமடைந்த முகத்துடன், வாசந்திகா, தனது துகில் நுனிகளை ஒரு கையால் தூக்கிக் கொண்டு இடிபாடுகளை மெள்ளத் தாண்டி, மதில் சுவர் ஓரமாக மறைந்து நடந்து கோபுர வாயிலை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள்.

அவள் நடந்து செல்லும் பாதையில் எரிகணை களும் விழுந்த பந்தல்களும் கூளங்களாகக் கிடந்தன.

அவற்றையெல்லாம் லாகவமாகக் கடந்து சென்ற அவள், சில உயிரற்ற உடல்களையும் கண்டு திடுக்கிட்டு, அவற்றின் இடைவெளிகளுக்கு இடையே நுனிக் காலால் நடந்து மிக வேதனையோடு முன்னேறினாள்.

பரிவாரங்களில் பலர் அவளைப் பார்த்துத் திடுக்கிட்டு, "போகாதீர்கள் அங்கே போகாதீர்கள்" என்று எச்சரிக்க எதையும் பொருட்படுத்தாமல் அவள் பையப் பைய நடந்தவாறு முன் சென்று கொண்டு இருந்தாள்.

முடிவில் கோபுர நிலையை எய்தியதும் மேலே நோக்கி, "சுவாமீ! சுவாமீ!" என்று அவசரமாகக் குரல் கொடுத்தாள்.

அவள் அழைப்புக்கு யாரும் வராமல் போகவே, துணிவு பெற்று மெதுவாக சாரத்தின் மீது ஏறலானாள்.

மேலே ஏறஏற எதிரி அம்புகள் விர் விர் என்று தலைக்கு மேலே பாய்ந்து வருவதைக் கண்டு, மிகவும் கலக்கமடைந்து தயங்கி நிற்கும்போது, அருகிலுள்ள பரணிலிருந்த வீரன் ஒருவன், "யாரங்கே?" என்று பலமாக இரைந்துவிட்டு மறுவிநாடி அவள் பக்கம் ஒரு மரக் கேடயத்தைத் தூக்கி விட்டெறிந்தான்.



கேடயத்தால் தலையை மறைத்த வாசந்திகா, தைரியம் சிதறாமல் முன்னேறி கோபுரத்தின் தளத்தருகே சென்று "சுவாமி, சுவாமி" என்று அவசரமாக அழைத்தாள்.

அவள் அழைத்த அதே வேளையில் போர் நிலையில் வேறு ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டிருந்தது.

பரண்கள் இல்லாத மேற்குப் பாரிச மதில் மேல் திடீரென்று டில்லி வீரர்கள் நான்கு பேர் தென்பட்டு இருந்தார்கள்.

அவர்களைப் பார்த்த பரிவாரங்களும், வீரர்களும் ஆகா' காரம் செய்து கூச்சலிட்டார்கள்.

குலசேகரனும் திரும்பிப் பார்த்து விட்டு ஆச்சரியத்தில் ஆழ்ந்துவிட்டான்.

டில்லிக்காரர்கள் இப்படி ஒரு சாகசம் செய்வதற்குப் பின்பற்றிய முறை இதுதான். அவர்களது வீரர்களுக்கு ஆளுக்கு ஒரு துணிப்பை இரவுக்கிரவே கொடுக்கப்பட்டிருந்தது.

ஒவ்வொருவரும் அந்தப் பையில் மண்ணை அடைத்து அதன் வாயை மூடிக் கொடுக்க வேண்டும் என்று உத்தரவாகியிருந்தது.

இதனால் ஆயிரக்கணக்கான மண் பொதிகள் இரவிலேயே சித்தமாகிவிட்டன.

பொழுது விடிவதற்கு முன், மேற்குப் பாரிச மதிலின் வெளிப்புற ஓரமாக இந்தப் பொதிகளை அடுக்கி வைத்து ஒரு சாரம் அமைத்துவிட்டார்கள் டில்லிப் படைகள்!

அந்தச் சாரத்தின் மீதுதான் நான்கு வீரர்கள் ஏறிச் சென்று மதில் மீது வந்திருந்தார்கள்.

அந்தத் திடீர் ஆபத்தை உணர்ந்த குலசேகரன் உடனே போரிடுவதை நிறுத்தி உட்பக்கம் திரும்பினான்.



கோபுரத்திற்கு வெளியே வந்து, பிரகாரத்தை நோக்கி, "வீரர்களே!" என்று கத்தினான்.

அதுதான் சமயம் என்று அங்கே நின்றிருந்த வாசந்திகா அவனைப் பார்த்து பயமும் மகிழ்ச்சியும் ஒருங்கே அடைந்து, "சுவாமி! சுவாமி!" என்று கூவினாள்.

திரும்பிப் பார்த்த குலசேகரன் அவள் அந்த போர் வேளையில் சாரத்தின் மீது நிற்பதைக் கண்டு கடும் கோபம் கொண்டு, "போங்கள்! சீக்கிரம் போங்கள்! இங்கே நிற்காதீர்கள்!" என்று கத்தினான்.

"இல்லை சுவாமி! அவசர விஷயம்!" என்று அவள் கூறும் அதே நேரத்தில், இன்னும் நான்கு டில்லி வீரர்கள் மதில் மீது ஏறிவிட்டதைப் பார்த்த குலசேகரன், அவளைப் புறக்கணித்து விட்டு வெறி பிடித்ததுபோல் சாரத்தில் குதித்து, "வீரர்களே வாருங்கள்! எதிரிகளைக் கொல்லுங்கள்!" என்று கத்திவிட்டு சரசர என்று கீழே இறங்கி மேற்குப் பாரிசத்தை நோக்கி ஓட ஆரம்பித்தான்.

அதே சமயத்தில் ஆரியபட்டாள் வெளி வாயிலிலும் இன்னொரு ஆபத்தான நிலை உருவாகிக் கொண்டிருந்தது.

கோவிலின் வாசல் கதவுகளை இரு யானைகள் கோபத்துடன் தாக்க ஆரம்பித்திருந்தன.

நெற்றி முகட்டில் நீண்ட பருமனான இரும்பு மழுக்களைத் தாங்கி வந்த யானைகள் ஒன்று மாற்றி ஒன்றாக மடார் மடார் என்று கதவுகளை மோதிக் கொண்டிருந்தன.

அதன் அதிர்ச்சி, கோபுர தளத்தில் உள்ள பஞ்சு கொண்டானையும், அவரது இரண்டு வீரர்களையும் தாக்கி அந்தத் தளத்தையே ஆட வைத்துக் கொண்டு இருந்தது.

பாதுகாப்பு எல்லாம் அழிந்து வருகிறது என்ற உணர்வு பஞ்சுகொண்டானுக்கு விரைவில் புலனாக ஆரம்பித்தது.

தமது உத்தரவைக் கேட்பதற்குக்கூட ஆட்கள் இல்லையே என்று உணர்ந்த அவர், என்ன செய்யலாம் என்று யோசிக்கும் வேளையில்,

யானைகளின் ஆவேசத்திற்கு இலக்கான வாயிற்கதவு, மேலும் தாங்குவதற்கு சக்தி இல்லாமல், ஒரு உண்மை வீரனைப் போன்று மார்பில் ஏராளமான விழுப்புண்களை ஏற்றுக் கொண்டு மடேர் என்று பல பிளவுகளைப் பிளந்து உள்நோக்கிச் சாய்ந்தது.

"ஆ" என்ற சத்தம் எங்கும் எழும்ப டில்லி வீரர்கள் குதித்து எழுந்து ஆவேசமான வெற்றி கோஷங்களை வானளாவ முழக்கலானார்கள்.

# 16

ஆரியபட்டாள் வடக்கு வாயில் கதவுகள் பிளந்து சாய்ந்து விட்டன.

டில்லிக்காரர்களின் வெற்றி முழக்கங்கள் வானைப் பிளந்தன.

கோபுர நிலையில் இருந்த பஞ்சுகொண்டான் சில கணங்கள் நிலையாய் நின்றார்.

பிறகு அவரும், அவரது இரு வீரர்களும் சிலிர்த்து எழுந்து அவசர அவசரமாகப் பரண் மேலுள்ள வைக்கோலிலும் சூழ்ந்தியிலும் தீயைப் பற்ற வைத்து அவைகளைக் கட்டோடு கோபுர வாயிலில் சாய்த்தார்கள்.



இனி சண்டை இடுவதற்குத் துணை இல்லை என்பதை உணர்ந்த பஞ்சுகொண்டான் இரு வீரர்களையும் நோக்கி, "வாருங்கள்! பரணுக்குச் செல்வோம்" என்று கூறி இருவரையும் உடனே அழைத்துச் சென்றார்.

மூவரும் பரணின் மீது விரைந்து ஏறினார்கள்.

வடக்கு வாயிலின் கதவு பிளந்து விழுந்தாலும், அதன் பின்புறத்தில் அரங்க நகரத்தார் இரவுக்கிரவே எழுப்பி இருந்த கற்சுவர் இன்னும் நின்று கொண்டு இருந்தது.

இந்தச் சுவரையும் அதன் சுற்றுப்புறத்தையும் கவனிக்கும் வகையில் அமைந்திருந்தது அந்தப் பரண்.

இதில் நின்று கொண்டு உறுதியோடு போராட வேண்டும் என்று தீர்மானித்திருந்தார் பஞ்சுகொண்டான்.

அவர் பரணில் ஏறும்போதே, கோபுர வாயிலில், தீ, வானுயர ஓங்கி எரிய ஆரம்பித்தது.

அதன் புகையும் நெருப்பும் வீசி அடித்துக் கோபுரத்தையே கரியாக்கலாயின. அழகான வர்ணங்கள் இடப்பட்ட சிற்பங்கள் நிறைந்த கோபுரம் விரைவில் ஒரு கரும்பூதம் போல் மாறிவிட்டது.

சீக்கிரத்தில் கோபுர வாசலும் அதன் சுற்றுப்புறமும் வெம்மையை வீசத் தொடங்கின.

டில்லி வீரர்களின் முன்னேற்றம் இதனால் சிறிது நேரம் தடைபட்டு நின்றது.

பொழுது விடிந்து மூன்று நாழிகை இதற்குள் சென்று விட்டபடியால், தமது காலைக் கடமைகளை முடித்து விட்டு டில்லித் தளபதி உலுக்கான் களம் நோக்கி வந்தார்.

அவரது தங்க ஆதனத்தை வாரைக் கட்டிப் பதினாலு பேர் தூக்கி வந்தார்கள்.

ஆதனத்துக்கு மேலே நகரும் துணிப்பந்தல் ஒன்றை நான்கு பேர் தூக்கி வந்தார்கள்.

போர் நடக்கும் இடத்திற்கு அப்பால் அகளங்கன் வீதியில் வெகு பாதுகாப்பான இடத்தில் அவரது ஆதனம் மிக லாகவமாகக் கீழே வைக்கப்பட்டது.

அவரைச் சுற்றிலும் அவர் குழுவைச் சேர்ந்த மாலிக்குகளும் அமீர்களும் சூழ்ந்து நின்றார்கள்.

உலுக்கான் வந்திருப்பது கேள்விப்பட்ட உப-தளபதிகள் பயந்தவாறு ஓடோடி வந்தார்கள்.

தாழக் குனிந்து தளபதி உலுக்கானுக்கு வந்தனம் செலுத்தி விட்டு நடுங்கியவாறு நின்றார்கள்.

தளபதி கோபத்துடன் அவர்களைப் பார்த்தார்.

"ஓகோ! பிரசித்தி பெற்ற டில்லி சுல்தான் படைகளின் உபதளபதிகளா? இப்போது தான் போர் முறை கற்று வந்திருக்கிறீர்களா? பீதாரையும் வாரங்கல்லையும் பிடித்து வந்த சூரர்களா நீங்கள்? ஒரு சிறு நகரத்தின் கோட்டையைச் சுற்றி இப்படி நாட்டியம் ஆடிக் கொண்டிருக்கிறீர்களே!" என்று கூறிச் சீறினார் அவர்.

"இல்லை ஐயா! இவர்கள் கோட்டை அமைப்பு வேறு மாதிரி இருக்கிறது. நமது படைகள் பரந்து நிற்பதற்கு வழியில்லை. குறுகலான இடத்தில் சண்டை நடத்த வேண்டியிருக்கிறது. இதனால் சேதமில்லாமல் சண்டை போட வேண்டுமானால், காரியங்களை அவசரமாக நடத்த வழியில்லை!" என்றார் ஒரு உபதலைவர் மிகுந்த விநயத்துடன்.



"சேதங்கள்! சேதங்கள்!" என்று குதித்து எழுந்தார் உலுக்கான். "சேதமில்லாமல் கோட்டையைப் பிடிக்க முடியுமா? நீங்கள் எல்லாம் படை நடத்தும் தலைவர்களா? வெட்கமில்லை? வெட்கமில்லை?" என்று சீறினார் அவர்.

பிறகு ஒரே வேகத்துடன் பாய்ந்து, அந்த உபதலைவனைப் பிடித்து, "நீ ஒரு தலைவனா? வீரனா? உன்னைச் சிரச்சேதம் செய்வேன்" என்று உரக்கக் கூவவே, பிடிபட்ட உபதலைவன் மிரண்டு போய் நடுங்க ஆரம்பித்தான். ஏனெனில் அவர் கூறுவது வெறும் வார்த்தையல்ல. நிறைவேற்றப்படவும் செய்யலாம் என்று அவனுக்கு நிச்சயமாகத் தெரியும்.

உலுக்கான் மேலும் உச்சநிலைக்குப் போய் ஓரேயடியாகக் கூப்பாடுகள் போட்டார். அந்தப் பிரதேசமே அவர் குரலில் நடுங்கியது.

பிறகு அவரே ஒருவாறு தணிந்து குரலைத் தாழ்த்தி, "மன்னர் எனக்கு லிகிதம் எழுதியிருக்கிறார். எனக்குத் திறமை இருக்கிறதா இல்லையா என்று கோபத்தோடு கேட்டிருக்கிறார். ஊரை விட்டுப் புறப்பட்டு ஒரு வருஷமாகியும் மாபாரை இன்னும் வெற்றி காணாமல் இருக்கிறாயே, நீ படை நடத்தத் திறன் உள்ளவன்தானா என்று கேட்டிருக்கிறார். இதுக்கு நான் என்ன மறுமொழி சொல்லுவேன்! சொல்லுங்கள்! சொல்லுங்கள்!" என்று கர்ஜித்தார்.

எல்லோரும் மௌனமாக இருந்தார்களே ஒழியப் பேசுவதற்குத் துணியவில்லை.

உலுக்கான் மேலே தொடர்ந்தார். "நடுப்பகலுக்குள் இந்த நகரத்தைப் பிடித்தாக வேண்டும். இதற்காக எத்தனை ஆள் சேதம் ஆனாலும் கவலை இல்லை. போங்கள்!" என்று சிம்மக் குரலில் கத்திவிட்டுத் துடிக்கும் நெஞ்சுடன் அமர்ந்து கொண்டார்.

பெற்றோம் பிழைத்தோம் என்று உபதளபதிகள் வேகமாக வெளியே ஓடினார்கள். களத்திற்குச் சென்று அங்கங்கே உத்தரவுகளைப் பறக்கவிட்டார்கள்.

கோவில் வாயிலில் சிறிது நேரத்தில் ஒரே கொந்தளிப்பு எழுந்தது. நூற்றுக்கணக்கான வீரர்கள் கைமாற்றம் செய்து கூடை கூடைகளாக மண்ணைக் கொணர்ந்து எரியும் நெருப்பில் தூக்கிப் போட்டார்கள்.

குடம் குடமாக நீரைக் கொணர்ந்து அங்கங்கே பாண்டங்களோடேயே தூக்கி எறிந்தார்கள்.

ஒரு முகூர்த்த நேரத்தில் கோவில் வாயிலுள்ள நெருப்பு அணைந்துவிட்டது. அதை அடுத்து வீரர்கள் சாரிசாரியாக உள்ளே புகுந்தார்கள்.

உள்ளே இருக்கும் பரணையே குறியாக வைத்துப் பலமாகத் தாக்கியதில் விரைவில் பரண் வலிமை இழந்து மௌனமாகிவிட்டது. உள்ளே இருந்த சுவரை உடைப்ப தற்காகப் போர் யானைகள் கொண்டு வரப்பட்டன.

வீரர்கள் ஒதுங்கி நின்று அவைகளின் வேகத்திற்கு வழிவிட்டார்கள். யானைகள் தமது மழுக்களுடன் சுவரில் பயங்கரமாக மோத ஆரம்பித்தன.

முதலில் சில மோதல்கள் வரை சுவர் சமாளித்துக் கொண்டு நின்றது. பின்னர் மோதல்கள் தொடரும்போது சுவரின் ஓரத்தில் விரிசல் காண ஆரம்பித்தது.

மேலும் உக்கிரத்துடன் தாக்குதல்கள் விழவே, சுவர் சிறிது சிறிதாக விரிந்து கொண்டே வந்தது.

முடிவில் வலது பக்கத்தில் ஓரப் பகுதி தபீர் என்று பெரும் ஓசையுடன் மறுபுறத்தில் சாய்ந்தது.

"ஹோ" என்று ஆரவாரமான இரைச்சலை வீரர்கள் கிளப்பினார்கள்.



அந்நேரத்தில் மற்றவர்களது எச்சரிக்கையைக் கேளாமல் பத்து டில்லி வீரர்கள் எதற்கும் அஞ்சாத நெஞ்சத்துடனும் உருவிய வாளுடனும், "அடி! கொல்லு!" என்று கூச்சல் போட்டுக் கொண்டு விரிசலின் இடுக்கு வழியாக உள்ளே வேகமாக நுழையலானார்கள்.

உள்ளே இடிபாடுகளுக்கு இடையே பஞ்சு கொண்டானும் இரு வீரர்களும், அகப்பட்டுக் கொண்டார்கள்.

ஓங்கிய வாளுடன் டில்லி வீரர்கள் அவர்களை நோக்கி வருவதைக் கண்டு பஞ்சுகொண்டான் விருட்டென்று எழுந்து உறையிலிருந்து வாளை உருவினார்.

அவர் குழுவுக்கும் அந்தப் பத்து பேர்களுக்கும் ஒரு வாட்போர் நிகழ்ந்தது. ஆனால் சீக்கிரமே பஞ்சுகொண்டானின் வீரர்கள் இருவரும் காயமடைந்து கீழே விழுந்தார்கள்.

தேகத்தில் பல இடங்களில் கீறல்பட்டு இரத்தத்தில் மெழுகிய உடலுடனும், வழிந்து விழும் வியர்வைப் பெருக்குடனும் பஞ்சுகொண்டான் தனியாக நின்று உக்கிரமாகப் போரிட்டார்.

நான்கு டில்லி வீரர்களை அவரால் கொல்ல முடிந்தது. ஆனால் அதே நேரத்தில் தமது விலாப் புறத்தில் நெருப்பு ஒன்று புகுந்ததுபோல் அவர் உணர நேர்ந்தது.

உண்மையில் அது நெருப்பல்ல. டில்லி வீரர்களில் ஒருவன் அவரது விலாப் புறத்தில் வேல் ஒன்றை எறிந்து விட்டிருந்தான். வேலைப் பற்றிக் கொண்டு அவர் மேலும் சிறிது சண்டையிட்டுப் பார்த்தார்.

ஆனால் மயக்கம் கொந்தளித்து வரவே உடல் சோர மெள்ளக் கீழே சரிந்தார். பல்லை மட்டும் இறுகக் கடித்து, கண்ணையும் இறுக மூடிச் சாய்ந்து கீழே

விழுந்து, உடலில் தைத்த வேலை அப்படியே பிடித்துக் கொண்டார் பஞ்சுகொண்டான்.

மேற்குப் பாரிசத்தில் நின்று கொண்டிருந்த குலசேகரனுக்கு இந்தச் செய்தி பறந்தது.

"சுவாமீ" என்று ஒரு தீனமான குரலை எழுப்பிக் கொண்டு உடனே கோபுர வாயிலை நோக்கி ஓடிவந்தான் அவன். அவனுடன் மூன்று வீரர்களும் ஓடி வந்தார்கள்.

டில்லி வீரர்கள் அதற்குள் அவன் எதிரே வந்து விடவே, அந்த அறுவருக்கும் நால்வருக்கும் ஒரு கடும்போர் அங்கே நிகழ ஆரம்பித்தது.

ஆத்திரத்துடன் போராடிய குலசேகரன் இரு எதிரி வீரர்களைச் சிறிது நேரத்துக்குள் வீழ்த்திவிட்டான்.

அடுத்த இரண்டு பேர்களை அவனது மற்ற இரு வீரர்களும் முடித்து விடவே, எஞ்சி நின்ற இரு ஆட்களும் தப்பித்துப் பின் நோக்கி ஓடினார்கள்.

குலசேகரன் அரைக் கணமும் நில்லாமல் பஞ்சுகொண்டானைத் தேடி ஓடினான்.

கோபுரத்தின் அருகே இடிபாடுகளுக்கிடையே பார்வை சென்ற போது அவன் இதயம் அப்படியே நின்று விட்டது.

அங்கே பீறிட்டு வரும் இரத்த வெள்ளத்தில் கிடந்து கொண்டு, வலியை மறப்பதற்காக, "ரங்கா! ரங்கா!" என்று கூறியவாறு பஞ்சுகொண்டான் கண்களை மூடியிருந்தார்.

அவர் அருகில் சென்று கண்ணீர் பொங்க நின்று, "சுவாமி!" என்று சோகம் பொங்க அழைத்தான் குலசேகரன்.



பஞ்சுகொண்டான் மெள்ளக் கண் விழித்தார்.

அவனைப் பார்த்ததும் அவர் முகத்தில் இலேசாக முறுவல் தோன்றியது.

அவரைத் தூக்கி துலா மண்டபத்திற்குள் கொண்டு போக நினைத்த குலசேகரன், மெதுவாக அவரது திருமேனிக்கு அடிப்பக்கமாகக் கைகொடுத்து இலேசாகத் தூக்கி எடுத்தான்.

முகத்தை வலித்துப் பல்லைக் கடித்தார் பஞ்சு கொண்டான்.

"குலசேகரா! அசைக்காதே! வேலின் முனை வயிற்றுள் இருக்கிறது. இந்த இடத்தை விட்டு நகர்த்தாதே? வலியில் உடனே இறந்து விடுவேன். நான் சிறிதுநேரம் உயிர் தரித்திருக்க விரும்புகிறேன். ஏனெனில் அவனது திருநாமத்தை இன்னும் சிறிது நேரம் உச்சரிக்க வேண்டும். என்னைப் பற்றிக் கவலைப்படாதே! மற்றவைகளைக் கவனி!" என்றார் ஈனமான குரலில்.

குலசேகரன் கண்ணில் நீர் மழை பொங்கியது.

"சுவாமி!" என்றான் உணர்ச்சிப் பெருக்குடன்.

"என்னை விடு! மேலே ஆக வேண்டியதைக் கவனி!" என்றார் பஞ்சுகொண்டான்.

"சுவாமி! நீங்கள் மறைந்தால் நான் அனாதை ஆவேன். திருவரங்கம் அனாதையாகும். திருவரங்கனே அனாதை ஆவார் சுவாமி! எங்களை விட்டுப் போகாதீர்கள்!" என்று புலம்பினான் குலசேகரன்.

"என் மறைவால் யாரும் அனாதை ஆக மாட்டார்கள். நீ மற்றவர்களுக்கு உற்ற துணை ஆவாய். அதற்கான மன உறுதியை ஏற்றுக் கொள்!

திருவரங்கனைக் காப்பாற்று!" என்றார் அவர். சொல்லும் போதே அவர் குரல் தடுமாறியது.

"சுவாமி திருவரங்கனையா? நானா? நான் எப்படிக் காப்பாற்றுவேன்?" என்றான் குலசேகரன் நா தழதழக்க.

அவன் சொல்லியதை அவர் கேட்டதாகத் தெரிய வில்லை.

"திருவரங்கனைக் காப்பாற்று" என்றார் மீண்டும் ஈனக்குரலில்.

அவர் கையைப் பிடித்தான் குலசேகரன்.

"நிச்சயம் காப்பாற்றுவேன், சுவாமி! நிச்சயம் காப்பாற்றுவேன்!" என்று உணர்ச்சி பொங்கக் கூறினான் அவன்.

பஞ்சுகொண்டானின் கண்கள் அரைச் செருகலில் அப்படியே நின்றன.

குலசேகரன் கைகூப்பிக் கொண்டு, துவய மந்திரத்தை உச்சரிக்க ஆரம்பித்தான்.

# 17

அரங்க நகரத்தின் கடைசியான நம்பிக்கை பஞ்சு கொண்டானின் உருவில் கீழே விழுந்து கிடந்தது.

வயிரம் பாய்ந்த தேக்கு மரம் ஒன்று கால விசேஷத்தில் அடியோடு சாய்ந்து கிடப்பதுபோல் அவர் கீழே கிடந்தார்.

அவரது உடலில் குத்திக் கொண்டு நின்ற ஈட்டி



தென்னக மக்களின் வாழ்ந்த வாழ்க்கை முறை மேல் குத்தப்பட்ட ஈட்டி போன்று நின்று கொண்டிருந்தது.

பஞ்சுகொண்டானின் திருக்கண்கள் வானத்தை நோக்கி வீசியிருந்தன. வானம் என்ற எல்லையற்ற சூன்யங்களையும், அதில் தொங்கும் பிரபஞ்சங் களையும், அவைகளிடையே சிக்குண்டிருக்கும் காலம், இடம், காரணம் என்ற பரிமாணங்களையும் கடந்து அவர் பார்வை வீசிச் சென்று எங்கேயோ ஒரு எல்லையிலா, காலமிலா, காரண, காரியமிலா வெளியில் மெள்ளக் கரைந்து கொண்டிருந்தது.

அரங்கன், அரங்கநகரம், அதன் தற்காப்பு, அதற்கான யுத்தம், இவை யாவற்றின் மீதும் அவர் கொண்டிருந்த எண்ணத்தின் பூதாகாரமான உருவம், அவர் அந்த யாத்திரை போகையில், மெள்ள மெள்ளக் குறுகிச் சிறிதாகிப் பொட்டாகிப் புள்ளியாகி, அணுவாகி, அதிலும் நுண்ணியதாகி கடைசியில் மறைந்து கொண்டிருந்தது.

அந்த யாத்திரை இந்த இகத்தின் எல்லையைத் தாண்டிச் சென்ற பிறகு, எல்லாம் ஒடுங்கி அவர் உடம்பு நிசப்தமாகிவிட்டது.

அப்போது குலசேகரன் கண்ணில் நீர் மழையாகப் பெய்யத் தொடங்கியது.

தழதழத்த குரலுடன் இடையறாது "ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் பிரபத்யே! ஸ்ரீமதே நாராயணாய நமஹ" என்ற துவய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இருந்தான்.

"ஐயா! ஐயா!" என்று அவனை உலுப்பி எழுப்பிய ஒரு வீரன், "ஐயா இறந்தவர்களையும் இறந்து கொண்டிருக்கிறவர்களையும் நினைத்து அறிஞர்கள் வருந்த மாட்டார்கள். ஆகவே எழுந்திருங்கள். நடக்க

வேண்டியதைக் கவனியுங்கள்!" என்று கூறி அவனைத் தேற்றினான்.

சோகித்திருந்த குலசேகரன், தன்னுள்ளே தேறி எழுந்து, பஞ்சுகொண்டானின் தாமரைத் திருவடிகளைத் தொட்டு வணங்கி, அவர் மீது கொத்திக் கொண்டிருக்கும் ஈட்டியை மெள்ள உருவி எடுத்து, அவரது திருமேனியை வெண்மைத் துணியால் மூடி, மற்றொரு வீரனின் உதவியுடன் மெதுவாக அந்தச் சரீரத்தை தாங்கியவாறு எடுத்துச் சென்று, துலா மண்டபத்தின் நடுவில் எழுந்தருள வைத்தான்.*

பஞ்சுகொண்டான் பாதுகாத்து வந்த அரங்க நகர்க் கோட்டை அதன் பின் சீக்கிரம் விழுந்தது. அதை அடுத்து ஆரவாரத்துடன் டில்லி வீரர்கள் உள்ளே சென்றார்கள்.

பிரகாரங்கள் யாவும் அல்லோலகல்லோலப் பட்டன. பரிசனங்கள் பல்வேறு திக்குகளில் ஓடினார்கள். கூச்சலும் அழுகுரல்களும் எங்கும் கேட்டன. வெறி பிடித்தவர்கள் போல் மக்கள் எங்கும் சிதறிப் போனார்கள். அகப்பட்டவரை எல்லாம் வாளுக்கு இரையாக்கிக் கொண்டு டில்லி வீரர்கள் பிரகாரத்தில் பரவினார்கள்.

---

*இந்தக் கதை முடிந்த பிறகு பஞ்சுகொண்டானின் வீரத்தையும் தியாகத்தையும் போற்றும் வகையில், அரங்கப் பெருமான் வடக்கு வாயிலில் எழுந்தருளும் போதெல்லாம் பஞ்சுகொண்டானின் பெயரை அருளிப் பாடி அவருக்கு மரியாதை அளிப்பது வழக்கமாக இருந்தது. இப்போது இந்த வழக்கம் மறைந்துவிட்டது என்று தெரிகிறது.

பஞ்சுகொண்டானுக்கு இணையாக, பின் ஆண்டுகளில் வீரத்தைக் காட்டியவர்கள் ஆயிரம் ராஜபுத்திர வீரர்கள் ஆவர். ஆங்கிலேயருக்கு எதிராகப் போரிட்ட சந்தாசாகிப் பிற்கு உதவி புரிவதற்காக இந்த வீரர்கள் வடக்கேயிருந்து வந்திருந்தார்கள். திருவரங்கக் கோவிலின் அரண்களைப் பாதுகாப்புக் கோட்டைகளாக்கிக் கொண்டு ஆங்கிலேயருடன்



வராகமூர்த்தி சன்னிதி முன்னுள்ள மண்டபத்தில் ஊர் மக்களும் பெரியவர்களும் ஆயிரக்கணக்கில் கூடி இருப்பதைப் பார்த்த டில்லி வீரர்கள் உடனே அங்கு விரைந்து சென்றார்கள்.

"எங்கே உங்கள் பொருள்கள்? எங்கே உங்கள் அணிமணிகள்?" என்று அங்குள்ளவர்களை நோக்கி கர்ஜித்தவாறு அவர்கள் கேட்டார்கள்.

யாரும் மறுமொழிக் கொடுக்கவில்லை. கோபம் கொண்ட வீரர்கள் கைக்கு அகப்பட்டவரை எல்லாம் வாளால் வீழ்த்தவே, மற்றவர் யாவரும் உடனே சிதறி ஓடலானார்கள்.

அவர்களை விடாது சென்று பிடித்துக் கத்திக்கு இரையாக்கி வஞ்சம் தீர்த்தார்கள் டில்லி வீரர்கள். இரத்தம் பெருக்கெடுத்து ஓட, உடல்கள் எல்லாம் உயிரற்று வீழ, வெகு விரைவில் அந்தப் பிரதேசம் முழுதும் ஒரு உருக்கத்தக்க சோகக் காட்சியாக மாறியது.

அங்கங்கே சிதறி ஓடிய குழுக்களில் வேதாந்த தேசிகரும் இருந்தார். அவர் அன்று கண்ட காட்சி வாழ்க்கையில் அதுவரை கண்டிராத அதிர்ச்சியாக இருந்தது.

---

போரிடும் போது, கோவிலின் வழிபாடுகளுக்கு எந்தவிதக் குறையும் வராமல் இந்த வீரர்கள் கவனிப்போடு பாதுகாத்து வந்தார்கள். ஆனால் நடந்தப் போரில் ஆங்கிலேயர்கள் வெற்றி பெற்றுக் கோவிலைக் கைப்பற்ற வரவே, ராஜபுத்திர வீரர்கள் கோவிலின் மூன்றாவது திருச்சுற்றில் நின்று கொண்டு, "இந்தச் சுற்றுக்குள் அந்நியர்கள் யாரும் வரக் கூடாது. அப்படி ஒரு வாக்குறுதி கொடுத்தால்தான் பணிவோம். இல்லாவிடில் கடைசி வீரன் உள்ளவரை போராடி உள்ளே வருபவர்களை எல்லாம் வெட்டித் தள்ளுவோம்" என்று சபதமிட்டார்கள். அவர்களது சமயப்பற்றையும் வீரத்தையும் மதித்த ஆங்கிலத் தளபதி அவர்களது விருப்பம் போலவே வாக்குறுதி அளித்தார். கோவிலின் உட்சுற்றுகளும் கருவறையும் இதனால் காப்பாற்றப் பட்டன. கி.பி.1752-ல் இது நடந்தது.

வைணவ அடியவர்களும், பாமரர்களும், பரிவாரங்களும், அங்கங்கே கொத்துக் கொத்தாக இறந்து கிடந்தார்கள். அவர்கள் திருமேனிகளும் திருமுடிகளும் துண்டிக்கப்பட்டுத் தனித் தனியாகக் கிடந்தன. தேசிகருக்கே தலை சுற்றியது.

தப்பிச் செல்லும் வழியில் தமக்கு மயக்கம் வருவதை அவர் உணரலானார். பார்வை மறைந்து கொண்டு வரவே சிறிது தூரத்திலேயே தள்ளாடி அவர் கீழே விழுந்தார்.

அரை முகூர்த்தம் வரை அவர் மயக்கத்தில் ஆழ்ந்து கிடந்தார்.

பின்னர் இலேசாக நினைவு திரும்பி வரவே மெள்ள எழுந்து சுற்றிவரப் பார்க்கையில் அந்தப் பிராகாரம் முழுவதும் உடல்களாகச் சிதறிக் கிடப்பது அவருக்கு தெரிந்தது.

தம்முள் ஒருவாறு தேறி, கீழே கிடக்கும் அடியவர்களின் திருமேனிகளை அவர் தாண்டிச் செல்லும் போது, "சுவாமி!" என்று மிக தீனமான குரல் கேட்கவே அவர் திடுக்கிட்டு நின்றார்.

மண்டபத் தூண் ஒன்றின் பக்கலில், பல உடல்களுக் கிடையே, ஒரு உடல் மட்டும் சலனமிடுவது அவர் கண்களுக்குத் தெரிந்தது. அருகில் சென்று பார்த்தபோது அவர் திடுக்கிட்டு நின்று விட்டார்.

அவரது நட்புக்கும், விநயத்திற்கும், பக்திக்கும் பாத்திரமான சுதர்சன ஆசிரியர் என்பார், மார்பில் ஒழுகும் இரத்த வெள்ளத்துடன் அங்கே தரையில் கிடப்பது தெரிந்தது.

"சுவாமி! சுவாமி! தங்களுக்கா இது நேர்ந்தது? அடியேனால் தாள முடியவில்லையே சுவாமி!" என்று பெருத்த வேதனைப்பட்டு, கண்ணில் அருவி பாய தேசிகர் அவர் அருகே சென்று தாழக் குனிந்தார்.



"அவனுக்கு அது உகந்ததென்றால் அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்வது நம் கடன்தானே! சுவாமி! தங்களைக் கண்டது அரங்கனையே கண்டதுபோல! என் மார்பு பிளந்திருக்கிறது. இன்னும் சிறிது நேரம்தான் உயிர் தரிப்பேன். இந்தக் குறுகிய இடைவேளையில் தங்களைக் கண்டதே என் பாக்கியம். அடியேனது வேண்டுகோள் ஒன்றைத் தேவரீர் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றார் சுதர்சன ஆசிரியர் தடுமாறிக் கொண்டே.

"அடியேன் காத்திருக்கிறேன். தேவரீர் கட்டளை இடலாம்!" என்றார் தேசிகர் கண்ணீர் விழும் கண்களுடன்.

"சுவாமி! அடியேன் பெற்ற செல்வங்கள் மூன்று. இந்த மூன்றையும் தங்களிடம் ஒப்படைத்துச் செல்ல விரும்புகிறேன். தாங்கள் காப்பாற்ற வேண்டும்" என்று கூறிய அவர் கையைத் தூக்கி அசைக்கவே, தூணுக்கு அப்பால் உள்ள படிக்கட்டில் கல்லோடு கல்லாகப் படுத்திருந்த அவர்களின் குமாரர்கள் இருவரும் அழுதுகொண்டே எழுந்து வந்தார்கள்.

பத்து வயதுக்குட்பட்ட அவர்கள் இருவரையும் தேசிகரின் கைகளில் பிடித்துக் கொடுத்தார் சுதர்சனர்.

பிறகு சிரமப்பட்டு நகர்ந்து, தமது உடலுக்குக் கீழே சிக்கி இருந்த ஏட்டுச் சுவடி ஒன்றை எடுத்து, தமது இரு கைகளாலும் தேசிகரது திருக்கைகளில் கொடுத்து, "இதுதான் அடியேனது மூன்றாவது செல்வம் சுவாமி! அடியேன் எமது ஆசிரியரான நடாதூர் அம்மாள்*

* பெருமாளுக்கு நைவேத்தியம் செய்யவேண்டிய பாலை, அதன் சூடு எப்படி இருக்கிறது என்பதைப் பார்க்க வேண்டி விரலால் தொட்டு, வாயால் ஊதி, தொண்டைக்கு இதமாக இருக்கும்படி செய்வாராம். ஒரு தாயாரைப்போல இவ்விதம் பெருமாளிடம் பரிவு காட்டியதால் அவருக்கு நடாதூர் அம்மாள் என்று பெயர் வந்தது.

பக்கலில் உபன்யாசம் கேட்டு, மனத்தில் தரித்து, எழுத்தில் வடித்துள்ள 'சுருதப் பிரகாசிகை!'* இதனைப் பின்வரும் சந்ததிகள் யாவரும் படித்து உணர வேண்டும் என்ற விருப்பம் அடியேனுக்கு இருப்பதால் இதையும் தாங்கள் காப்பாற்ற வேண்டும் என்று விண்ணப் பிக்கிறேன்" என்றார் நடுங்கும் குரலில்.

கரங்கள் நடுங்க, அந்தச் சுவடியை வாங்கித் தம் கண்களில் தேசிகர் ஒத்திக் கொள்ளும் போதே, சுதர்சன ஆசிரியர் தம் இரு குமாரர்களையும் கடைசியாகப் பார்த்து ஆசீர்வதித்து, "அவர் சொல்படி நடவுங்கள்" என்று தீனசுவரத்தில் கூறிவிட்டுத் தமது திருக்கண்கள் நிரந்தரமாக மூடி விடலானார்.

அந்தப் பிள்ளைகள் விம்மி விம்மி அழ, அவர்களைத் தேற்றி அணைத்துக் கொண்டு, இனியும் இங்கே இருக்கலாகாது என்று தீர்மானித்து, கலங்கிய கண்களுடன் கீழே கிடக்கும் உடல்களை எல்லாம் தாண்டிய வாறு நடக்க ஆரம்பித்தார் தேசிகர். சிறிது தூரமே சென்றிருக்கும்போது, திடீரென்று தூரத்தில் ஆவேசக் குரல்கள் கேட்கவே, அந்தச் சிறுவர்கள் இருவரையும் சற்று அப்பால் இறந்த உடல்கள் கிடக்கும் இடத்திற்கு விரைவாக அழைத்துச் சென்று, கீழே பெருகியுள்ள இரத்தத்தை தம் இரு கைகளாலும் அளாவி, சிறுவர்களின் முதுகிலும் வயிற்றிலும் தடவிப் பூசி, அது போலவே தம் திருமேனியிலும் தடவிக் கொண்டு, சிறுவர்களைக் கீழே படுக்கவித்து, அவர்கள் மீது இறந்த உடல் ஒன்றைக் குறுக்காகக் கிடத்தி, அவர்கள் மூச்சு விடக்கூடாது என்று எச்சரித்துவிட்டு, தாமும் அங்கு கிடந்த உடல்களுக்கு

---

* பிரம்மசூத்திரம் என்ற தத்துவ நூலுக்கு வைணவப் பெரியார் இராமானுஜர் வடமொழியில் ஒரு விளக்கவுரை எழுதினார். அதற்கு ஸ்ரீபாஷ்யம் என்று பெயர். அந்த ஸ்ரீபாஷ்யத்திற்கு விளக்கவுரையாக அமைந்திருப்பதுதான் சுருதப் பிரகாசிகை (கேட்டபடி வெளியிட்டது) இந்த வடமொழி நூல் இன்றும் நமக்குக் கிடைக்கப் பெறுகிறது. மேலே குறிப்பிடப்பட்ட நிகழ்ச்சியினாலே அழிவிலிருந்து காப்பாற்றப் பட்டது.





இடையே தம் திருமேனியை நுழைத்து, முகத்தையும் வயிற்றையும் மறைத்துக் கொண்டு இறந்தாரோடு இறந்தவராகக் கீழே கிடக்கலானார்.



அந்த வேளையில் உள்ளே நுழைந்து பிரகாரத்தில் வந்து கொண்டிருந்தவர் டில்லிப் படைகளின் தளபதியான உலுக்கான்.

அவரைப் புடை சூழ அவரது பரிவாரங்களும் நடந்து வந்தார்கள். தளபதியின் முகத்தில் ஒரே எள்ளும்கொள்ளும் வெடித்துக் கொண்டிருந்தன.

தமது பரிவாரங்களிடம் எதையோ குறை கூறிக் கடிந்து கொண்டு, இடைக்கிடையே கீழே கிடக்கும் உடல்களைப் பார்த்துச் சம்மதிப்பது போல் தலையை அசைத்துக் கொண்டு நடந்து போனார் அவர்.

அங்கங்கே உதிரியாக ஓடுகிறவர்களையும் பதுங்கி இருப்பவர்களையும் டில்லிப் பரிவாரங்கள் பிடித்து வாளுக்கிரையாக்கியவாறே முன்னால் சென்றார்கள். வழியில் கிடக்கும் உடல்களை அப்பால் தள்ளி தளபதி வருவதற்கு வழி பண்ணிக் கொண்டே பலர் முன்னால் போனார்கள்.

அப்படி அவர்கள் தள்ளிய உடல்களில் ஒன்று தேசிகர் மேலும் மற்றொன்று அந்தச் சிறுவர்கள் மீதும் வந்து விழுந்தாலும், சிறுவர்கள் அசையாது தைரியமாக இருக்கவே, பரிவாரங்கள் எதுவும் தெரியாமல் மேலே நடந்து போனார்கள்.

தெற்கு வாயில் வந்ததும் நாழிகை வட்டில் முகப்பின் முன் அதி கோபத்துடன் வந்து நின்றார் டில்லி தளபதி.

"விடாதே! எல்லா இடங்களையும் தோண்டிப்பார்! சிற்பங்களை உடைத்துப் பார்! திரவியங்களை எங்கே வைத்திருக்கிறார்கள் என்று சீக்கிரம் கண்டுபிடி! உள்ளே

பதுங்கி இருப்பவர்களை எல்லாம் வெட்டித் தள்ளு!" என்று கோபத்தில் உத்தரவுகளை அள்ளி வழங்கலானார்.

வீரர்கள் பரபரத்து எங்கும் செல்ல முனைந்தார்கள்.

அப்போது திடீரென்று, 'சலன், சலன், சலன்' எனச் சதங்கை ஒலிகள் அங்கே இன்னிசையாகக் கேட்கலாயின.

அதைத் தொடர்ந்து, மிருதங்க, வாத்திய ஒலிகள் யாவும் ஒருங்கிணைந்து மிக நேர்த்தியாகக் கேட்கவே, டில்லித் தளபதியும் அவரது உபதளபதிகளும் பிரமித்து நின்றார்கள்.

கிழக்குச் சுற்றிலிருந்து தேவலோகக் கன்னிகைகள் போல் எம்பெருமானடியார்கள், தம் முகமெல்லாம் சந்திர ஒளிபோல் காந்தி வீச, நெடுங்கண்கள், கயல்கள் போல் நீந்தி விளையாட, உடல் முழுதும் மின்னும் ஆபரணங்கள் சுடர்களிட, இளமேனியில் சிந்தூர கஸ்தூரி, சந்தன வாசனைகள் பரிமளிக்க, தாளங்களுக்கு இசையத் தம் தாமரைப் பாதங்களைத் தரையில் வைத்து நடந்து, முகத்திலும், அதரத்திலும் முறுவல்களைச் சிந்தி, கைகளில் முரலும் வளையல்களுடனும் பாதங்களில் புலும்பும் சிலம்புகளுடனும் அதி ஒயிலாக, அதி கம்பீரமாக, பவனி வந்தார்கள்.

யாழினும் இனிமையில் பல பெண்மணிகள் பாட, அவைகளுக்கு ஏற்ப அபிநயித்துக் கொண்டு வந்த அந்த இளம் ஆரணங்குகள் உரிமையுடனும் தைரியத்துடனும் தளபதியின் முன்னால் சென்று விறுவிறுப்பாக அபிநயித்து வெகு நேர்த்தியாக ஆட ஆரம்பித்தார்கள்.

அவர்களது அபிநயம் இடும் கரங்களும், மெல் இடைகளும், இலை வயிறுகளும், சிருங்கார பீடம் போன்ற மார்பகங்களும் மனமோகனக் கவர்ச்சிகளை உண்டு பண்ணி, பார்ப்பவரை எல்லாம் வெகுவாக இழுத்து நிறுத்தின.



உக்கிரமாக நின்று கொண்டிருந்த தளபதி அப்போது அந்தப் பெண்களை மிகக் கோபத்துடனே தான் பார்த்தார்.

அவர் உணர்ச்சிகளைச் சிறிதும் பொருட்படுத்தாது பெண் ஒருத்தி, அழகாக அபிநயித்து அவர் பக்கலில் சென்று மோகனமான முறுவலைச் சிந்தி, அவர் முன்னே வெகு சல்லாபமான 'பாவ'த்துடன் தன் இரு மென் கரங்களையும் அணைக்கும் பாவனையில் நீட்டலானாள்.

அப்போது தளபதி சரக்கென்று தமது உடைவாளை உருவி 'வீச்' என்ற சத்தத்துடன் ஓங்கி அவள் நீட்டிய கரங்கள் மீது வீசி விட்டார்.

# 18

டில்லித் தளபதியின் வாள் வீச்சுக்கு ஆளான விசாலினி என்னும் அடியாள், துள்ளி அப்பால் தாவுகையில், வாளின் நுனி அவளது வெண்மையான இடது கரத்தில் ஆழமாகப் பதிந்தது.

வலி வீறிட்டுப் பாய, அதைப் பொருட்படுத்தாமல், முகத்தில் தவழும் முறுவலையும் நழுவ விடாமல் ஆட ஆரம்பித்தாள் அவள்.

வெட்டிலிருந்து பீறிட்ட இரத்தம் சிதறி, அவளது பால் போன்ற மேனியில் அங்கங்கே குங்குமம் சிதறியது போல் படிந்து விட்டது.

அப்போது தாள வாத்தியக்காரர்கள் தங்கள் தாள கதிகளை துரிதமாக்கிவிடவே,

நடனமும் பரபரப்பு அடைந்து, ஒரு உச்சக் கட்டத்திற்குச் சென்று கொண்டிருந்தது.

அந்த விறுவிறுப்பான நிலையிலும், தன் முறுவல் மாறாது, இங்கும் அங்குமாகச் சுழன்று ஆடிய விசாலினியைப் பார்த்து தளபதி, 'நிறுத்து!' என்று திடீரென்று கூச்சலிட்டார்.

சடக்கென நடனம் நின்றதும், தளபதி விசாலினியைக் கை காட்டி தம் அருகே அழைக்க, கலுங் கலுங் என்று சலங்கை அடங்கலாக ஆர்த்திட, மெதுவாக நடந்து வந்தாள் அவள்.

இரத்தம் மெழுகிச் சிந்தூரமாகியிருந்த முகத்தையும் மேனியையும் நோக்கிய தளபதி, தமது சீற்றம் சிறிது தணிந்தவராய் "பெண்ணே! உனக்கு எவ்வளவு துணிச்சல்! ஒரு தளபதியின் அருகில் வந்து கை நீட்டினாயே, எவ்வளவு தைரியம் இருந்தால் அவ்விதம் செய்வாய்?" என்று கேட்டார்.

அருகிலிருந்த ஒய்சள வீரன் அவர் கூறியதைத் தமிழ் வார்த்தைகளாக்கி அவளிடம் கூறினான்.

அந்தப் பெண் தன் வேதனை நிறைந்த கண்ணைத் திறந்தாள். "டில்லி தேசத்தின் மகா புருடரே! உம்மை உகப்பிக்கும் வகையில்தானே, உம் சந்நிதானத்தை நாடினேன். பரிமளமான ஒரு தென்றல் பக்கலில் வருவதை யாராவது வேண்டாம் என்பார்களோ? பெருமை வாய்ந்த தங்கள் பக்கலில் நிற்கப் பெறுவது என் அதிர்ஷ்டம் இல்லையோ? தங்கள் கீர்த்தியும், புகழும் என் செவிகளில் என்றைக்கோ நிரம்பிவிட்டன. அராபிய, பாரசீக மொழிகளில் தாங்கள் மகா வல்லுநர் என்பதைக் கேள்விப்பட்டிருக்கிறேன். முத்து முத்தான கையெழுத்தில் விஷயங்களை ஆற்றலோடு எழுதும் பண்புடையீர் என்பது எங்களுக்குத் தெரியும். தர்க்க சாத்திரத்திலும், *யவன தத்துவம் பற்றிய விசாரணையிலும் தாங்கள் நிகரற்றவர் என்பதையும் நாமறிவோம். கணிதத்திலும், விஞ்ஞானத்திலும் தாங்கள் கொண்டுள்ள புலமையையும் நாங்கள் அறிவோம். எதையும் அறிந்து

* யவன தத்துவம் - கிரேக்க தத்துவம்



கொள்ளும் ஆவலையும், எல்லாவற்றையும் நினைவில் நிறுத்திக் கொள்ளும் தங்களது மனோ சக்தியையும் நாங்கள் செவியாரக் கேள்விப்பட்டிருக்கிறோம். தாங்கள் தொழுகைகளில் பிறழாது இருக்கும் நல் துருக்கியர் என்பதும், வாழ்க்கையில் மிகக் கண்ணியமாக நடப்பவர் என்றும் தங்கள் கீர்த்தி நன்றாகப் பரவியுள்ளது. மதுபானங்களை அறவே தவிர்த்து, தங்களது சமய வழிகள் பிரகாரமே நடந்து எல்லோர் மீதும் இரக்கமும் ஈகையும் காட்டி, ஆரோக்கிய சாலைகளையும், அறச் சாலைகளையும் வளர்ப்பவர் என்பதும் எங்களுக்குத் தெரியும். இவ்வளவும், இன்னும் நா விரிக்க வொண்ணாததுமான கீர்த்திகளையுடைய மாபெரும் டில்லி மண்டலாதிபதியின் பக்கலில், தனது பாக்கியம் என்றே கருதி, ஒரு அபலையான பெண் நிற்பதற்குத் தடையேதும் உண்டோ? இளவயதிலேயே புகழ்மிக்கவரே! தயை செய்து அறிவியுங்கள்!" என்று கூறினாள்.

விசாலினியின் அந்தப் புகழ்ச்சி உரைகளைக் கேட்டு, 'இவளுக்கு இவ்வளவும் எவ்விதமாகத் தெரிந்தது' என்று ஆச்சரியத்தில் மூழ்கிய தளபதி, திருப்தி அடைந்தவராய், அவளை நோக்கி, "இத்தகைய அறிவோடு பேசுவது கண்டு மகிழ்ந்தோம். ஆனால் உம்மவர்கள் எம் படைகளை எதிர்த்ததில் எமக்கு மகிழ்ச்சி இல்லை. பெரும் கோபத்தையே அது தந்தது" என்று கூறினார்.

"ஆற்றல் மிக்க தளபதியே! அவர்கள் அறியாதவர்கள். அவர்களைக் காத்தருள் வேண்டும். தயை நிரம்பிய தங்களுக்கு அது பெரும் காரியம் அல்ல. கோபம் இருக்கும் இடத்தில்தானே குணம் உண்டு. கோபத்தைத் தவிர்த்து குணத்தை மிகுதியாகக் காட்டுவது தங்களுக்குப் பெருமை அல்லவோ, தளபதியே!" என்று கூறினாள் விசாலினி.

"கருணை காட்டச் சித்தமாக இருக்கிறோம். பெண்ணே! ஆனால், அதற்கு ஈடாக இந்தக்

கோட்டைக்குள் இருக்கும் அணிமணிகளையெல்லாம் எமக்குப் பணயமாகக் கொடுக்க வேண்டும்!" என்றார் தளபதி.

"ஐயோ!" என்றாள் விசாலினி. "அது தெரியாதா? தாங்கள் இங்கே வரப் போகிறீர்கள் என்று அறிந்து, பாண்டியப் படைகள் இங்கு வந்து எல்லாவற்றையும் கொள்ளையிட்டுப் போனார்களே! சொந்தப் படைகள் சொந்த நாட்டையே கொள்ளையிடும் பழக்கம் எங்கேயேனும் கேள்விப்பட்டு இருக்கிறீர்களோ? அவர்கள் எடுத்தது போக மிச்சம் இருப்பதெல்லாம் வெறும் கோட்டையும் கட்டிடங்களும்தான்! இது தெரியாதா தங்களுக்கு?" என்று கூறினாள்.

தளபதி வயிறு குலுங்க சிரித்தார். "பெண்ணே! உங்கள் படைகள் உங்களது கோவிலைக் கொள்ளை இட்டபோது, உங்கள் விக்கிரகங்கள் ஏன் வாளாவிருந்தன. இதிலிருந்து தெரியவில்லையா அவை தெய்வங்கள் அல்ல என்று!" என்றார்.

"விநயத்திற்குரியவரே! எம் தெய்வங்களுக்குப் பொன்னோ அணிமணிகளோ ஒரு பொருட்டல்ல. அவை இருந்தாலும் ஒன்றுதான்; இல்லாவிடினும் ஒன்று தான். நாங்கள்தான் எங்கள் விசுவாசத்தையும், பக்தி யையும் காண்பிக்கும் பொருட்டு வாழ்க்கையில் எவைகளை உயர்ந்ததாகக் கருதுகிறோமோ, அவை களை எம் தியாக உணர்ச்சியின் பேரில், படையல்களாக எம் தெய்வங்களுக்குத் தந்திருக்கிறோம். எம் பார்வையில் தான் அவை உயர்ந்தவையே அன்றி, எங்கள் தெய்வங்களின் பார்வையில் அல்ல. அவை இருந்தும் ஒன்றுதான், இல்லாமலும் ஒன்று தான்!" என்றாள் விசாலினி.

"பெண்ணே! சாமர்த்தியமாகப் பேசுகிறாய்!" என்று குலுங்கச் சிரித்த தளபதி, "எல்லாத் திரவியங்களும் கோட்டையை விட்டுப் போய்விட்டன என்கிறாய். அப்படியானால் இதோ இந்த வாசலில் இவர்கள் ஏன் சண்டையிடச் சித்தமாக இருக்கிறார்கள்?" என்று கேட்டார்.



அவர் குறிப்பிட்டது நாழிகை வட்டில் வாயிலை அடுத்தாற்போல் உள்ள இரண்டாவது சுற்றில் ஆயுதங்களைத் தாங்கி உயிரைப் புல்லாக மதித்த வண்ணம் நின்று கொண்டிருந்த குலசேகரனையும், அழகிய நம்பியையும் மற்றும் அவர்களது பரிவாரங்களையுந்தான்!

"தளபதி பெரும! அவர்கள் நிற்பது திரவியங் களைக் காப்பதற்காக அல்ல! தங்களையே காத்துக் கொள்வதற்காகத்தான்! தங்கள் படையினர் இரக்க சிந்தனையில்லாது எல்லோரையும் வெட்டி குவித்து விட்டார்களே! தம்மையும் அக்கதிக்கு ஆளாக்குவார் களோ என்று நினைத்து அப்படி ஆளாகும் பட்சத்தில், எதிரிகளில் எத்தனை பேர்களைக் கொன்று குவிக்க முடியுமோ, அத்தனை பேரையும் குவிக்கச் சித்த மாகத்தான் அவர்கள் அப்படி நிற்கிறார்கள். அவர் களுக்கு எந்தவிதத் தீங்கும் செய்வதில்லை என்று தாங்கள் உறுதிமொழி கொடுத்தால் தங்கள் ஆட்கள் உள்ளே சென்று எதையும் தேடிப் பார்க்க அனுமதி கொடுப்பார்கள் அவர்கள். இது சத்தியம்!" என்றாள் விசாலினி.

"பெண்ணே! இதோ உறுதிமொழி தருகிறேன். அவர்களை விலகச் சொல்!" என்று கூறினார் தளபதி.

"அவர்களை மட்டுமல்ல. வேறு யாரையும் இனிக் கொல்ல மாட்டோம் என்று உறுதிமொழி கூறுங்கள். அவர்களை நான் விலகச் சொல்கிறேன்." என்றாள் விசாலினி!

"தந்தோம்!" என்று கூறினார் தளபதி சிரித்துக் கொண்டே.

விசாலினியைத் தாங்கியவாறு இரு அடியாள்கள் நாழிகை வட்டில் வாயிலுக்கு அழைத்துப் போக, அங்குள்ள வீரர்களிடம் சிறிது நேரம் தர்க்கித்துப் பேசிவிட்டு வந்த அவள், தரையெல்லாம் இரத்தத்தைப் பெருக விட்டு மயக்கத்தோடு கீழே சாய்ந்தாள்.

உடன், தளபதி தமது வைத்தியர்களை அழைப்பித்து அவளைக் கவனிக்கச் சொல்ல, அவர்கள் விசாலினியின் பக்கம் ஓடினார்கள்.

சிறிது நேரத்தில், தொங்கும் முகமும், பார்வையும் உடையவர்களாய் குலசேகரனும், அழகிய நம்பியும், எஞ்சிய வீரர்களும், பரிவாரங்களும் நாழிகை வட்டில் வாயிலில் இருந்து வெகு அமைதியுடனே வெளியேறினார்கள். அவர்கள் போவதற்கு ஏதுவாக இரு வரிசைகளாகப் பிளந்து நின்று, டில்லி வீரர்கள் வழிவிட்டார்கள்.

அதன்பின் உள்ளே சென்ற டில்லி வீரர்கள் மண்டபங்களிலும், பிராகாரங்களிலும், தூண்களிலும் சிற்பங்களிலும், கல்சுவர்களிலும், சன்னிதிகளிலும் சென்று ஆங்காங்குள்ள இடங்களைத் தோண்டியும், நகர்த்தியும் பிடுங்கியும், உடைத்தும் திரவியங்களைத் தேடும் அளவில், எதுவும் விலை உயர்ந்ததாகக் காணாமல், மிக ஏமாற்றம் அடைந்தவர்களாய் அழகிய மணவாள மண்டபத்தில் நிற்கும் டில்லித் தளபதியிடம் விவரங்களைக் கூற, அவரும் தமது மாலிக்குகளைக் கூட்டி, "இந்த திரவியமெல்லாம் வெளியே போயிருக்க வேண்டும். அல்லது உள்ளே இருந்தால் அவை இருக்கும் இடத்தைக் கண்டுபிடிக்க அதிக நேரம் செலவழிக்க வேண்டும். அதற்கு என்ன செய்வது? நாம் இப்போதே மதுரை போயாக வேண்டுமே!" என்று கூறினார்.

பிறகு அவரும் அவரது மாலிக்குகளும் யோசனையில் ஆழ்ந்தார்கள்.



நடுப்பகல் கழிந்து, மாலை அணுகும் போது டில்லிப் படைகளின் நீளமான அணிகள் தென் திருக்காவேரியைக் கடந்து சென்று கொண்டிருந்தன.

அந்தப் படைகளை வழியனுப்பும் வகையில் இரு உப-தளபதிகள் கொண்ட சிறு படை ஒன்று காவேரியின் கரையிலேயே நின்று கொண்டு, வாழ்த்தொலிகள் வழங்கிக் கொண்டிருந்தது. பலவிதக் காரணங்களுக்காக அரங்க நகரில் இந்தச் சிறு படையை நிறுத்திவிட்டுப் போக முடிவு எடுத்திருந்தார் தளபதி உலுக்கான்.

டில்லிப் படைகள் எல்லையை விட்டு நீங்கிய வேளையில் பெரும் சூறாவளியால் அடிபட்டு இறக்கை ஒடிந்த பட்சி போல அரங்க நகரம் குற்றுயிராக விழுந்து கிடந்தது.

சரிந்தும், பொடிந்தும், இடிந்தும், பாழாகியும் கிடந்த அதன் வீடுகளும் மண்டபங்களும் அலங்கோலமாகக் கிடந்தன.

அதைக் காப்பதற்காக அல்லும் பகலும் போரிட்ட அதன் மைந்தர்களில் பெரும்பாலோர் உயிரற்ற உடல்களாய் அதன் திருவீதிகளில் சிதறிக் கிடந்தார்கள்.

அந்த சோகமான வேளையில், அரங்கக் கோயிலின் திருமடைப் பள்ளியில் ஒரு ஜீவன், மிகுந்த துயரமுற்று தன்னுள்ளே மூழ்கி, அழுகை தாரை தாரையாக வீழ பிரமை கொண்டது போல் அமர்ந்து இருந்தது.

ஒரு நாழிகை நேரமாக அந்த ஜீவன் அப்படியே இருந்ததே ஒழிய, எந்தவிதச் சலனமும் அதனிடத்தில் காணப்படவேயில்லை.

அந்தத் துக்கமான வேளையில், மடைப்பள்ளி வாயிலுக்குள் பொலிவிழந்து வெளிறிய கண்களுடன் அடியாரான வாசந்திகா மெள்ள நுழைந்து, அந்த

ஜீவனின் அருகில் போய் நின்று, "சுவாமி! சுவாமி!" என்று குரல் தழதழக்க அழைத்தாள்.

அந்த ஜீவனான குலசேகரன், அப்போதும் நிமிர்ந்து பாராமல், தனது இறந்து கிடக்கும் தாயாரின் மீது பார்வையை வைத்துக் கண்ணீர் உகுத்த வண்ணம் இருந்தான்.

"சுவாமி! துக்கப்படாதீர்கள். நடந்தது நடந்து விட்டது. கண்ணீர் உகுக்காதீர்கள். தங்கள் தாய் தங்களைத்தான் கடைசியாகப் பார்க்க நினைத்தார். இரண்டு நாட்கள் உயிரோடு இருந்தாலும் சில வேளைகளில்தான் அவருக்கு நினைவு வந்தது. அப்போதெல்லாம் தங்களை அழைத்துவர எண்ணியும் போர் காரணமாக எங்களால் முடியாமல் போய்விட்டது. ஆனால் கடைசி முறை அவர் கண் விழித்த போது தங்கள் பெயரையே சொல்லிப் பலமுறை அழைத்தார். எப்படியும் தங்களை அழைத்து வர வேண்டும் என்ற எண்ணத்தின் பேரில், பயங்கரச் சண்டைகளுக்கு நடுவே, என் தாய் தடுத்தும், பிறர் எச்சரித்தும் பொருட்படுத்தாமல்கூடத் தங்களைக் காண வந்தேன். என் துரதிர்ஷ்டம்! போரின் மும்முரத்தில் உங்களை அழைத்து வர முடியாமல் போய்விட்டது.

"நான் திரும்பிவர வெகு நேரமாகியது. அதற்குள் தங்கள் தாயார் கண்களை மூடிவிட்டிருந்தார். அவ்வளவுதான்! அதன் பிறகு கண்களைத் திறக்கவே இல்லை!" என்று அவள் மெள்ள மெள்ளக் கூறவும், குலசேகரன் மேலும் பீறிட்டு அழத் தொடங்கினான். வாசந்திகா பல விதங்களில் அவனைத் தேற்ற முயன்றும் அவன் தேறுவதாக இல்லை.

அப்போது, "ம், சீக்கிரம்!" என்று குரல் கேட்கவே, வாசந்திகா அழுகை ததும்பும் குரலுடன், "சுவாமி! நான் வருகிறேன்! வருந்தாதீர்கள்! கண்ணீர் விடாதீர்கள்! வாழ்க்கையில் துக்கங்கள் வந்து கொண்டேதான் இருக்கும். தாங்கள் ஒரு தீரர்! தங்களால் இன்னும்



அரங்கனுக்கு எவ்வளவோ காரியங்கள் ஆக வேண்டும். சோகப்படாதீர்கள்! சுவாமீ! சுவாமீ!" என்று கெஞ்சிய வாறு அவள் தடுமாற, "ம்! சீக்கிரம்!" என்று மீண்டும் அந்தக் குரல் அதட்ட, யாவற்றையும் காதில் மட்டும் வாங்கிக் கொண்டு, நிமிர்ந்து கூடப் பார்க்காமலேயே இருந்து விட்டான் குலசேகரன்.

பிறகு வெளியே கூச்சல்களும், வேறு அரவங்களும் அவன் காதுகளில் விழவே!, சிலிர்ப்பு அடைந்து, தன் உணர்வு பெற்ற குலசேகரன், ஒருவாறு தன்னை உலுக்கி எழுந்து கலங்கிய கண்களுடன், தன் தாயைத் தூக்கி, முன்பு போலவே ஒரு கூடையில் வைத்து, ஏதோ உயிரற்ற ஒரு ஜடம் போல் வாயிலை நோக்கி நடந்தான்.

பிரகாரத்தைக் கடந்து, வாயிலை அணுகிய போது அங்கே ஒரு காட்சியைக் கண்டதும் அவன் துணுக்குற்று நின்றான்.

எம்பெருமான் அடியாள்கள் பலரும் அங்கே டில்லி வீரர்களுடன் எங்கேயோ புறப்படச் சித்தமாக நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அதை உணர்ந்த குலசேகரன் சற்று திடுக்கிட்டுப் பார்க்க, அங்கே வாசந்திகா, முகத்தில் சோகம் பொங்க தன் விதியைத் தானே நொந்து கொண்டு நிற்பது போல் அவனைப் பார்த்து நின்று கொண்டு இருந்தாள்.

# 19

வாசந்திகாவின் அந்தப் பார்வை குலசேகரன் மனத்தில் ஏதோ ஒரு விதமான சலனத்தை எழுப்பினாலும், அதை முழுதுமாகப் புரிந்து கொண்டு காரியத்தில் இறங்கும் அளவுக்கான வேகத்தைக் கொடுக்கவில்லை.

தாயை இழந்த துக்கம் ஒரு கனத்த சுமை போல் அவன் மனத்தில் அழுந்தி, மற்ற உணர்ச்சிகளை எழ விடாமல் செய்து கொண்டிருந்தது. ஆகவே அவளையும், மற்ற அடியாள்களையும் பார்த்துவிட்டு, எந்தவிதச் சலனமும் இல்லாமல் நடந்து செல்லத் தலைப்பட்டான் அவன்.

அப்படி அவன் செல்வதை விரித்த விழிகளுடன் பார்த்தவாறு திக்பிரமையுடன் நின்றாள் வாசந்திகா. பளிங்குபோல் அவள் கண்களில் நீர் ததும்பியது.

எதையும் பொருட்படுத்தாது குலசேகரன் தெற்கு வாயிலின் இடிபாடுகளுக்கிடையே மெள்ள நடந்து சென்றான்.

வாயிலுக்கு அப்பால் நூற்றுக்கணக்கான டில்லி வீரர்கள் அம்பால் அடிபட்டும், கொதி எண்ணெயில் வெந்து போயும் இறந்து கிடந்தார்கள். அந்தக் காட்சி கூட அவன் மனத்தில் எந்தவிதச் சலனத்தையும் உண்டு பண்ணவில்லை.

கருடன் சன்னிதிக்கு அருகில் உள்ள வாய்க்கால் பாதையை சிறிது பிரமிப்போடு பார்த்தவாறு நடந்து சென்றான் அவன். அதைத் தாண்டிச் சிறிது தூரத்தில் கார்த்திகை கோபுரவாயில் வந்ததும் திடுக்கிட்டு நின்றான்.

இரவில் தூது வந்த ஒய்சள வீரன், அங்கே கழுவேற்றப்பட்டு இறந்து கிடந்தான். பூமியில் ஒரு மூங்கில் கொம்பை நட்டு, அதன் கூர்மையாக்கப்பட்ட மேல் நுனியை ஒய்சளனின் பின்பக்கத்தில் செருகி, தோள் பக்கம் வழியாகப் பிய்த்துக் கொண்டு வரும்படி செய்திருந்தார்கள்.

மூங்கில் கொம்பிலும் சுற்றியுள்ள மண்தரையிலும் இரத்தம் ஒழுகிப் பசபசத்துக் குழம்பாகியிருந்தது. அதைப் பார்த்து, உடனே குலசேகரன் மனத்தின் அடி ஆழங்களில் சிறிது சலனம் எழுந்தது.



ஒய்சளன் கொல்லப்பட்டிருந்த கோரத்தைத் தாங்க முடியாமல் போகவே, தன் தலை மேலிருந்த கூடையைக் கீழே வைத்து மூங்கில் கழுவின் அருகில் நெருங்கி வந்தான் அவன்.

ஒரே தர்க்கலில் கொம்பை உடைத்துக் கீழே சாய்த்து ஒய்சளனின் உடலை மெள்ள மெள்ள அதிலிருந்து உருவி எடுத்தான்.

கீழே உடலை வைத்து அதன் கரங்களை அஞ்சலிக்கும் நிலையில் கூட்டி வைத்து, ஒரு துணியால் முழு உடலையும் மூடி, மிக மெல்லிய குரலில் தனது மனத்துள், "ஒய்சளப் பெரியவரே! நீர் உண்மையான அரங்க பக்தர்தான்! தூது வந்ததற்காக உயிரை இழந்திருக்கிறீர்! வானவர்க்கு மேலான வைகுண்டப் பதவியை நிச்சயம் அடைவீர்!" என்று கைகூப்பிப் பிரார்த்தித்து விட்டு, மீண்டும் ஜடம் போல், தனது கூடையை எடுத்துக் கொண்டு மேலே நடக்க ஆரம்பித்தான்.

தென் திருக்காவேரியின் கரையைப் பைய அடைந்து கூடையைக் கீழே வைத்த குலசேகரன் மேலும் வெகு நேரம் கண்ணீர் சொரிந்து நின்றான்.

பன்னிரு வருடங்களுக்கு முன் தந்தை இறந்ததும், பின்னர் குடும்பம் கஷ்டப்பட்டதும், அவனது தாய் அவனைக் கல்வி பயிலுவதற்காகக் காஞ்சீபுரம் அனுப்பியதும், கல்வியைப் பாதியில் நிறுத்தி விட்டுப் போர் பயிற்சி பெற்றதும், அது முடிந்த பிறகு திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டு வந்ததும், அவன் நினைவுகளில் அடுக்கடுக்காக வந்தன.

வெகு நேரம் அழுது அலமந்த பிறகு, தனக்குள்ளே தேறி எழுந்து, தாயை தகனம் செய்ய எண்ணுகையில், அதற்கான சாமக்கிரியைகள் எதுவும் இல்லாமல் அங்கே வந்திருப்பதை அவன் உணர நேர்ந்தது.

தானே எல்லாம் செய்ய வேண்டும் என்று உணர்ந்த அவன், நதிக்கரை மேட்டில் ஒரு புல் தரையைத் தேர்ந்தெடுத்து, அதன் மீது காய்ந்த கட்டைகளையும், சருகுகளையும் பொறுக்கி வைத்து, சிதை அமைத்து, 'நெருப்பு இல்லாமல் வந்து விட்டோமே!' என்று எண்ணும் அளவில், 'யாராவது தென்படுவார்களா?' என்னும் யோசனையுடனே புல் தரையைக் கடந்து, அருகிலுள்ள சாலை மீது ஏறி ஆவலோடு இருபக்கங்களிலும் நோக்கலானான்.

சிறிது நேரம் வரை யாரும் காணாமல் போகவே, "என் செய்வோம்?" என்று நினைத்திருக்கையில், "ஹேய், ஹேய்!" என்று சிவிகை சுமப்போரின் குரல் கேட்டுக் கீழ் திசையை உற்று நோக்கினான்.

அங்கே அந்த மாலை வேளையில், இரு கொம்புகள் கொண்ட ஒரு மூடு சிவிகையைத் தூக்கிக் கொண்டு நால்வர் வந்து கொண்டிருந்தார்கள்.

"இந்த சமயத்தில் அரங்கன் நகரத்திலிருந்து சிவிகை வருவதற்கு விரகு* ஏது?" என்று எண்ணிய அவன், மரத்தடி ஓரமாக நின்று அதைக் கவனிக்கலானான்.

முன்னும் பின்னும் ஈரிருவர் தூக்கிவர, செம்புப் பூண் பிடித்த அந்தச் சிவிகை, குஞ்சங்கள் ஆடக் குறுகி வந்து, அவன் முன் வந்ததும் சடக்கென்று நின்று விட்டது.

"ஆர்ய!" என்று சிவிகையின் மூடுதிரைக்குள் இருந்து ஒரு பெண்ணின் இனிய குரல் கேட்கவே அவன் திடுக்கிட்டுத் தன்னை யாரோ அழைக்கிறார்கள் என்பதை உணரலானான்.

அந்தச் சமயம் மெல்லிய வெண் திரை இரண்டாக

* விரகு - வழி உபாயம்



விரிய, உள்ளே உதய சந்திரனின் பிரபை விகசிப்பது போல் வதனமுள்ள ஒரு இளம் பெண் கூரிய மை விழிகளால் அவனைக் கூர்ந்து பார்த்தாள்.

"ஆர்ய! அனேனைவ மார்கேன ஸ்ரீ ரங்கேசஸ்ய யாத்ரா அகச்சத் கிம்?" என்று வடமொழியில் கேட்டாள். (ஐயா! ரங்கேசருடைய ஊர்வலம் இந்த வழியாகத்தானே சென்றது?)

"அனேன மார்கேணைவ, நாரி! கிந்து தினத்வயாத் பூர்வம் கலு ஸஹ அகச்சத்!" என்றான் குலசேகரன்.

(நாரிமணி! இந்த மார்க்கத்தில்தான்! ஆனால் அந்த ஊர்வலம் சென்று இரண்டு நாட்களாகிவிட்டன.)

"தஸ்யாம் யாத்ராயாம் வயமபி மிலிதா பவேம?"

(அதை அடைவதற்கு எங்களால் முடியுமா?

"நூநம், ந பவிதா!"

(நிச்சயமாக முடியாது.)

உடனே அந்தப் பெண் சைகை காட்டித் தன் சிவிகையைக் கீழே இறக்க வைத்து, பிறகு அதிலிருந்து வெளியே வந்தாள்.

"ஐயா! பொறுத்தருளுக! நீங்கள் அரங்க நகரவாசியா, அல்லது எதிரி ஆளா என்று தெரியவே உங்களிடம் வடமொழியில் பேசினேன். அரங்க நகரத் தூண்கூடத் தமிழும் வடமொழியும் தெரிந்து வைத்திருக்கும் என்று சொல்வார்களே!" என்றாள்.

பிறகு, "நான் ஜம்புகேசுவரத்தைச் சேர்ந்தவள். சிதம்பரத் தலத்தில் சில காலம் இருந்தேன். இப்போதுதான் ஊர் திரும்பினேன். ஊரிலுள்ள மக்கள் எல்லோரும் ஓடி விட்டிருக்கிறார்கள். டில்லிப் படைகள்

இங்கே வந்து ஊர்களை அழித்ததை அறிந்தேன். இப்போது என் பாதுகாப்புக்காக ரங்கேசர் ஊர்வலத்துடன் செல்ல விரும்புகிறேன். கூட்டத்தோடு சேர்ந்து போனால் எனக்கு யாதொரு ஆபத்தும் நேரிடாதல்லவா?" என்று கூறினாள். பிறகு அவனைப் பார்த்தபோது, அவன் அதிக சிந்தை இல்லாதவன் போல் சோகித்திருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டு, "ஐயா, தாங்கள் ஏன் துக்கிக்கிறீர்கள்? தங்களுக்கு யாது நேர்ந்தது?" என்று கலவரத்துடன் வினவினாள்.

"அம்மணி!" என்று கூறித் திக்கிய அவன், "அரங்க நகரில் போரிட்டவன் நான். என் தாய் இறந்து விட்டாள். அவளைத் தகனம் செய்ய வந்திருக்கிறேன். நெருப்பு வேண்டி அலைகிறேன்" என்று மெள்ள மெள்ள கூறினான்.

"ஐயா! நெருப்புத்தானே வேண்டும்? நான் தருகிறேன்" என்று கூறியவள் சிவிகைக்குள்ளிருந்து இரண்டு அரணிக் கட்டைகளை வெளியே எடுத்தாள். பிறகு, "தகனம் செய்ய உதவி இருக்கிறதா?" என்று அவனை வினவினாள்.

"இல்லை அம்மணி" என்றான் அவன்.

"தங்களுக்கு நான் உதவிப் புரிகிறேன்" என்று அவள் இரக்கத்துடன் கூறினாள்.

இருவரும் புல்லாந்தரிசையில் இறங்கி தகனம் செய்ய வேண்டிய இடத்திற்குச் சென்றார்கள்.

அமைதியாகக் கீழே கிடந்த அவனது தாயாரின் திருமேனியைத் தரிசித்துவிட்டு, பிறகு கண்ணீர்விடும் குலசேகரனைப் பார்த்து, "ஐயா! தன் பிரிவால் அழுகிற பிள்ளையைப் பெற்ற ஒரு தாய் பெரிய பாக்கியசாலி!



இனியும் நீங்கள் அழுவதை நிறுத்த வேண்டும். நானே தகனக்கிரியைகளை எல்லாம் நடத்தி வைக்கிறேன்" என்று கூறினாள்.

"நீங்களா?" என்றான் அவன் அவநம்பிக்கையுடன்.

"ஆமாம்! நான்தான்!" என்று கூறிய அவள், "ஜம்புகேசுவரத்தில் வேங்கடேச யஜ்வா என்பவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அத்வைத சித்தாந்தத்தில் கரை கண்டவர். அத்வைத சூரியன் என்று அவருக்குப் பட்டப் பெயர் உண்டு. அவரது ஒரே மகளான ஹேமலேகா என்பவள் நான். பிள்ளை இல்லாத குறையில் எனக்கே பாடம் சொல்லித் தந்தவர் என் தந்தை! தர்க்கம், மீமாம்சம், வேதாந்தம், வியாகரணம் ஆகிய பலதும் கற்றவள் நான்! இவை தவிர வைதீகக் காரியங்கள் யாவற்றையும் அறிந்து வைத்திருக்கிறேன் நான். என் தந்தை மற்றவர்களுக்கு சந்தை சொல்விக் கொடுக்கும் போது நான் கிரகித்துக் கொண்ட விஷயம் இது! ஆகவே, இந்தச் சமயத்தில் உங்களுக்கு உதவுவதை என் கடமையாக நினைக்கிறேன்" என்று கூறினாள் அவள்.

குலசேகரன் அவள் பேச்சைக் கேட்டு ஆச்சரியத்தில் மூழ்கி இருக்கும்போது, அவள் சிறிது கூட அவகாசத்தை வீணாக்காதவளாய் அருகிலுள்ள புதர்களை நாடிச் சென்று, தர்ப்பைகளை உருவி வந்து, அரணிக் கட்டைகளைக் கடைந்து நெருப்பு உண்டாக்கிக் கிரியைகளைத் துவங்கினாள்.

"என் தாய் என் மீது ஆசை வைத்திருந்தாள்" என்று பேச்சை ஆரம்பித்தான் அவன்.

உம் கொட்டினாள் அவள்.

"கல்வி பயில்வதற்காக என்னைக் காஞ்சிக்கு அனுப்பி வைத்தாள். நான் கல்வியைப் பாதியில்

நிறுத்தினேன். போர் பயிற்சியில் ஆசை கொண்டேன். காஞ்சிக்கு வந்த ஒய்சள வீரர்களிடம் பயிற்சி பெற்றேன்."

"ம்!"

Released by Maran's Dog. Toronto, Canada

"பாடம் கேட்டு வேதாந்த விற்பன்னராக மாறுவதைவிட, யாராவது ராஜ்ய அதிகாரியிடம் போர் வீரனாக வேலை பார்த்து அதிகப் பணம் திரட்டலாம் என்று நினைத்தேன்."

"திரட்டினீர்களா?"

Released by Maran's Dog. Toronto, Canada

"எங்கே திரட்ட முடிந்தது? பயிற்சிக்குப் பின் இரு வருடங்களாகப் பிரிந்திருந்த என் தாயாரைத் தரிசிக்க ஓடோடி வந்தேன். காஞ்சியிலிருந்து யாத்ரீகர்கள் வழக்கமாக ஒரு மண்டலம் நடந்து திருவரங்கத்தை அடைவார்கள். நான் இருபதே நாட்களில் நடந்து அரங்கத்தை அடைந்தேன்."

"உங்கள் தாயார் சந்தோஷப்பட்டிருப்பார்களே?"

"உண்மைதான்! சந்தோஷப்பட்டாள்! என்னை ஆரத் தழுவினாள். ஆனால் இரண்டே இரண்டு விநாடிதான் அவளுடன் பேசினேன். இதோ வருகிறேன் என்று வெளியே போனவன்தான்!"

"என்ன நடந்தது?"

"திருவரங்கப் போரில் ஈடுபட்டேன். அதில் ஆழ்ந்து விட்டேன். தாயைக் கவனிக்கவேயில்லை. முடிவில் அவளைப் பார்க்க நேர்ந்தபோது அவள் இந்நிலை ஆகியிருந்தாள்."

குலசேகரன் விசித்தான்.

Released by Maran's Dog. Toronto, Canada



ஹேமலேகா இதற்குள் சமித்துக்களைச் சேர்த்து அக்கினியைப் பெரிதாக வளர்த்துவிட்டாள். பிறகு மற்ற காரியங்களை விடுவிடென்று கவனிக்கலானாள்.

அவள் மந்திரங்களை ஆரம்பித்த போது, "அம்மணி! நான் சாத்தாத* வைணவன்" என்று கூறினான் குலசேகரன்.

"எவ்விதம் இருந்தால் என்ன? மாறநேர் நம்பிகள் பரமபதம் அடைந்த போது, அவருக்குப் பெரிய நம்பிகள்* பிரம்மமேதத்தால் சாமக்கிரியை செய்ய வில்லையா? தங்கள் தாயாருக்கு விதிமுறைப்படி எல்லாவிதக் கிரியைகளையும் நான் செய்து தருவேன்" என்று கூறினாள் அவள்.

காரியங்கள் யாவும் விரைவில் நடந்தேறத் தொடங்கின.

Released by Maran's Dog. Toronto, Canada

அந்தி கருகிக் கொண்டிருந்தபோது அவர்கள் இருவரும் ஆற்றில் மூழ்கி ஈரத்துடனே வந்து சாலையை அடைந்தார்கள்.

துக்கம் தோய்ந்த குரலில் அப்போது குலசேகரன் அவளை நோக்கி, "அம்மணி! தங்களுக்கு நன்றி

* பூணூல் சாத்திக் கொள்ளாத வைணவர்.

* மாறநேர் நம்பிகள் என்பார் ஒரு அரிசனர். அவருக்குத் தொண்டு செய்து மகிழ்ந்தவர் பெரிய நம்பிகள் என்ற அந்தணர். (இருவரும் ஆளவந்தார் என்னும் வைணவப் பெரியவரின் சீடர்கள்) மாறநேர் நம்பிகள் மரணம் அடைந்த போது அவருக்கு பிரம்மமேத முறையில் சரமக்கிரியை செய்தார் பெரிய நம்பிகள். (வேத விற்பன்னராக விளங்கும் அந்தணத் துறவிகளுக்கு அளிக்கப்படும் சரமக்கிரியை முறை இது.)

பெரிய நம்பிகள் வைணவப் பெரியவரான இராமானுஜரின் குரு ஆவார்.

உடையேன்! என் தாயார் அருகில் அமர்ந்து குளிரப் பேச முடியாத நான், இன்று அவள் ஆன்மா குளிரும் வண்ணம் எல்லாச் சம்பிரமங்களுடன் தகனம் செய்துவிட்டேன் என்பது ஒரு அற்பமான மனத் திருப்தி! எனினும் இந்தத் திருப்தியையாவது எனக்குக் கிடைக்கும்படி செய்ததற்குக் கடமையுள்ளவனாக இருப்பேன்!" என்று கூறினான் அவன்.

சிவிகையில் ஹேமலேகா ஏறி அமர்ந்து விடைபெறும்போது, அவன் கண்களில் நீர் துளிர்த்தது. சிவிகை ஊர்ந்து சிறிது தூரம் சென்ற போது, குலசேகரன் அதன் பின்புறமாகத் தடதடவென்று ஓடிவந்தான்.

சிவிகையை நிறுத்தி, "அம்மணி!" என்று குரல் கொடுத்தான்.

மூடு திரையைத் திறந்து முறுவலோடு பார்த்தாள் அவள்.

"உங்களிடம் ஒரு ரகசியத்தைச் சொல்லாமல் இருந்தேன். என் மனம் கேட்கவில்லை. இப்போது சொல்கிறேன். மறுகரையை அடைந்து தொண்டைமான் காட்டுக்குள் போகும் பாதையில் கீழே முறித்துப் போடப்பட்ட துளசிக் கொத்துக்களைப் பார்த்துக் கொண்டே வழி நடந்தால் நீங்கள் அரங்கன் இருக்கும் இடத்தை அடைவீர்கள். தயவு செய்து இதை யாரிடமும் தெரிவிக்காதீர்கள்!" என்று கூறினான் அவன்.

மகிழ்ச்சியுடன் விடைபெற்றாள் ஹேமலேகா.

**சி**விகை போன பிறகு குலசேகரன் அந்தச் சாலையிலேயே அமர்ந்திருந்தான். சிறிது நேரத்தில் இருள் தோன்றி எங்கும் பரவ ஆரம்பித்து விட்டது. கவலை தோய்ந்த முகத்துடன் அமர்ந்திருந்த அவன் மனத்தில் திடீரென்று வாசந்திகாவின் உருவம் தோன்றியது.



மாலையில் அவள் அவனைச் சமாதானப்படுத்த முயன்றதும், டில்லி வீரன் அவளை அழைத்துச் சென்றதும், அவள் பரிதாபமாக அவனைப் பார்த்ததும் நினைவில் சரசர என்று வந்தன.

வேகமாக ஒரு உணர்ச்சி அவனைத் தாக்கவே சிலிர்த்து எழுந்து அரங்க நகரை நோக்கி விறுவிறு என்று நடக்க ஆரம்பித்தான் அவன்.

# 20

அரங்க நகரின் கிழக்கு எல்லைக்குக் குலசேகரன் வந்தபோது நன்றாக இருட்டிக் கருகருத்திருந்தது.

அங்கே தெரிந்த பரந்த வெளியில், நட்சத்திரங்கள் பூத்தாற்போல், வெளிச்சங்கள் பரவலாகத் தெரிந்தன.

டில்லிப் படைகள் தண்டு இறங்கியுள்ள இடம் அது என்பதைக் குலசேகரன் புரிந்து கொண்டான்.

ஏராளமான கூடாரங்கள் சூழ்ந்திருக்க, அவற்றைச் சுற்றிவர ஆயுதந்தாங்கிய வீரர்கள் உலாத்திக் கொண்டே இருந்தார்கள்.

கூடாரங்கள் நெருக்கமாக இல்லாமல், தாராளமான இடைவெளிகளோடு நடப்பட்டிருந்தன.

இவைகளுக்குள் புகுந்து வாசந்திகாவை எங்கே தேடுவது என்பது அவனுக்கு யோசனையாக இருந்தது.

தூரத்திலிருந்து கவனித்துப் பார்க்கையில், ஒரு இடத்தில் அடுக்கடுக்காக எண்ணெய் விளக்குகள் தெரிய வந்தன.

இரு வரிசைகளாக அங்கே வியாபாரிகள் அமர்ந்து, வீரர்களுக்குத் தானியங்களையும் இதரத் தேவைகளையும் விற்றுக் கொண்டிருந்தார்கள்.

ஒரே கூச்சலாக இருந்த அந்த இடத்தில் வீரர்கள் தர்க்கம் பண்ணிப் பொருட்களை வாங்கிக் கொண்டு இருந்தார்கள்.

அவரவர் உணவுத் தேவைகளை அவரவரே கவனித்துக் கொள்ள வேண்டும் என்பது அந்தப் படையின் வழக்கமாக இருந்தது; அதனால்தான் இந்த வியாபாரங்கள் அங்கே நடந்து கொண்டிருந்தன.

விற்பனை நடப்பதைக் கூர்ந்து கவனிக்கையில், ஆற்றோரமாக வாழ்ந்த குடிபடை ஜனங்கள் அங்குள்ள வியாபாரிகளுக்கு மீன், முட்டை, காய்கறிகள் இவற்றை விற்றுக் கொண்டிருப்பது தெரிந்தது.

'இப்படி ஒரு வழி இருக்கிறதே!' என்று உணர்ந்த அவன், உடனே தன் மேலாடைகளைக் களைந்து குடிபடை ஆளைப்போல் தார்ப்பாய்ச்சும் முண்டாசும் கட்டி, இடுப்புக்குள் இரண்டு குறுக்கத்திகளை மறைத்துக் கொண்டு, ஒரு உத்தரியத்தில் மண்ணை நிரப்பி, மூட்டைப் போல் கட்டித் தோளில் போட்டுக் கொண்டு, கூடார நகருக்குள் வெகு சுதந்திரமாக நுழைந்தான்.

"என்ன விற்க வந்திருக்கிறாய்?" என்று கேட்ட ஒன்றிரண்டு வியாபாரிகளிடம் வெறுமனே, "ஞேஞே" என்று கூறிவிட்டு, அந்தக் கும்பல்களிடையே புகுந்து, அங்குமிங்கும் ஒரு கணம் நின்றுவிட்டு, பிறகு இருட்டுக்குள் நுழைந்தவாறு மேலே சென்றான்.

அந்தத் தாற்காலிக கடை வீதிக்கு அப்புறத்தில் சென்ற போது, வீரர்களின் கூடாரங்கள் தென்பட்டன.

வீரர்களில் பெரும்பாலானவர்கள் அப்போது தங்கள் இராக்கால உணவுகளைச் சமைத்துக் கொண்டிருந்தார்கள்.

இந்த இராச் சமையல் நடப்பதால் ஏற்பட்ட புகை அங்கிருந்த இருளை மேலும் இருட்டாக்கிக் கொண்டிருந்தது.



அந்தப் புகையைப் பயன்படுத்திக் கொண்டு, அவன் போகும் போது, இங்கே வாசந்திகா எங்கே இருப்பாள் என்ற நினைவு அவனைப் பெரிதாக அழுத்தியது.

சிறிது தூரம் போகையில் திடீரென்று சலன் சலன் என்ற மெல்லிதான ஓசை அவன் காதில் விழவே, திடுக்கிட்டுத் திரும்பினான் அவன். அவன் பார்வையில் உப-தளபதிகளின் கூடாரங்கள் தட்டுப்பட்டு விட்டன. சதங்கை ஓசைகள் அங்கிருந்துதான் வந்து கொண்டிருக் கின்றன என்பதையும் புரிந்து கொண்டான் அவன்.

சுற்றிவர உயரமான கொம்புகளில் காட்டெருமை வால்களின் குஞ்சங்கள் தொங்க அதன் நடுவில் இரு கூடாரங்களும் வெகு கம்பீரமாக நின்று கொண்டிருந்தன.

ஒவ்வொரு கூடாரத்தைச் சுற்றியும், ஒரு ஆள் உயரத்தில், துணித் தடுப்பு ஒன்று நெடுக வளைத்துக் கட்டப்பட்டிருந்தது. அந்தத் தடுப்புக்குச் சில முழங்களுக்கு அப்பால் முள்வேலி ஒன்றும் கட்டப்பட்டு இருந்தது.

இந்த இரண்டுக்கும் இடையே உள்ள இடை வெளியில் அவ்வப்போது வீரர்கள் சுற்றிக் கொண்டே இருந்தார்கள்.

கூடாரங்களின் அமைப்பை அவன் கவனித்த போது அதன் வாயிலில் இரு குதிரைகளும், ஒரு யானையும் சித்தமான நிலையிலேயே நிற்பதை அவன் அறிய நேர்ந்தது.

ஏதாவது ஆபத்து வந்தால் உபதளபதி உடனடியாக, உபயோகிப்பதற்காக அவை நிறுத்தப்பட்டுள்ளன என்று ஊகித்தான் குலசேகரன்.

கூடாரத்திற்குச் சற்று தொலைவில் நின்று கொண்டு உள்ளே எப்படி நுழையலாம், எப்படி வாசந்திகாவைக் காப்பாற்றலாம் என்று யோசித்தவாறு அவன் நின்று விட்டான்.

**சி**றிது நேரம் சென்றதும், கூடாரத்திலிருந்து மிருதங்கக்காரர் ஒருவர் வெற்றிலை உமிழ்வதற்காக வெளியே வருவது தெரிந்தது.

அதைப் பார்த்ததும் பளிச்சென்று ஒரு யோசனை உதயமாக, குலசேகரன் உடனே கிளம்பி, "அண்ணா! அண்ணா!" என்று சுவாதீனமாக அழைத்துக்கொண்டு விரைவாக அவரை நோக்கி ஓடினான்.

கை விரலால் வெறுமையைத் தாளம் போட்டுக் கொண்டு, வெற்றிலை உமிழ்ந்து கொண்டிருந்த மிருதங்கக்காரர், புதிதாக வரும் தனது 'தம்பி'யைக் கண்டு மிரண்டு, முத்தாய்ப்பிட்டாற்போல் சமைந்து நின்று விட்டார்.

அவர் அருகில் சென்ற குலசேகரன் தன் கண்ணைச் சிமிட்டி, அவருக்கு இரகசியமாக ஜாடை செய்யவே, "பையனைப் பார்த்தாற்போல் இருக்கிறதே" என்று மூளையைக் குழப்பிய மிருதங்கக்காரர், சில கணங்கள் யோசித்துவிட்டு, உடனே அவனை இனம் கண்டு கொண்டார்.

"வா தம்பி வா! மிருதங்கத்துக்கு ஆள் இல்லை என்று நினைத்தேன்" என்று கூறி, வெளிவாயிலுக்கு வந்து அவனை அழைத்துக் கொண்டு, காவல் காக்கும் வீரனைத் தாண்டி உள்ளே இழுத்துப் போனார்.

உள்ளே கூடாரம் உயரமாகவும், விசாலமாகவும் இருந்தது. அதில் குறுக்காகப் பூக்களை எல்லாம் கட்டி அலங்காரம் செய்திருந்தார்கள். நான்கு கம்பங்களில் பெரிய எண்ணெய் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன.

மூலைக்கு மூலை அங்கே பெரிய அகலமான சட்டிகளில் தீக்கங்குகள் கனிந்திருக்க, அதில் தூமப் பொடியை மெள்ளத் தூவி உள்ளே பரிமளமான புகையைக் கிளப்பிக் கொண்டிருந்தார்கள் சில ஊழியர்கள்.



உப தளபதி தமது ஆதனத்தில் கம்பீரமாக வீற்றிருக்க, அவர் முன்னால் வாசந்திகா வியர்வை ததும்ப ஆடிக் கொண்டிருந்தாள். மிருதங்கமும் குழலும் யாழும் கலந்து ஒரு சோபனமான கீதத்தை இழைத்துக் கொண்டிருந்தன.

குலசேகரன் ஒரு மிருதங்கத்தின் முன்னால் போய் அமர்ந்து அதைத் தூக்கி, மடியில் வைத்துக் கொண்டு 'திடு திடு திடு துந்' என்று அடிக்க ஆரம்பித்தான்.

'தாளம் தப்புகிறதே' என்று வாசந்திகா அவனைக் கோபத்துடன் பார்க்க, அவன் அவளைக் கவனியாமல், ஆனால் தன் முகத்தை மட்டும் அவளுக்கு நன்கு தெரியும்படி காட்டிவிட்டு, பார்வையை வேறு பக்கம் திருப்பி இருந்தான்.

இரண்டு சுழலில் அவன் இன்னார் என்று அறிந்து கொண்ட வாசந்திகாவிற்கு திடீரென்று மகிழ்ச்சி ஏற்பட்டது. அத்தனை நேரமும் துயரமுடன் ஆடிக் கொண்டிருந்த அவளுக்கு வேதனை எல்லாம் சடேலென்று மறைந்தது.

ஆட்டம் சிறிது நேரம் தொடர்ந்தபோது, குலசேகரன் மிருதங்கத்தைத் தன் தோளில் மாட்டிக் கொண்டு, வாசந்திகா முன்னால் எழுந்து வந்து (தடும் தடும்) என்று தட்டி அதன் மூலம் அவளுக்கும், அவனுக்கும் போட்டி வந்ததுபோல் ஒரு பாவனையை ஏற்படுத்தலானான்.

"ஆகா! ஆகா!" என்று சொல்லி ரசித்தார் உபதளபதி.

அவன் முன்னால் அவள் நிற்க, மிருதங்கத்தை அவன் தட்ட, அதற்கு அவள் ஆடிக் காட்ட, இதே பாணியில் கூடார வாயில் வரை இருவரும் சென்று மீண்டும் உள்ளே வந்தார்கள்.

அந்த ஒரு உலாத்தலில், குலசேகரன் வாசந்திகா வுக்குக் கண்ணைக் காட்டி வாசலில் குதிரைகள் நிற்பதை



உணர்த்தி, அதே நேரத்தில், "தூபம் நிறைய போடு" என்று கூறி அவளை உள்ளே நாட்டியத்தோடேயே அழைத்து வந்து தீச்சட்டிகள் இருக்கும் இடங்களாகச் சுற்றி அழைத்துப் போனான்.

நாட்டியம் ஆடும் பாணியிலேயே, வாசந்திகா, அங்கே நிற்கும் தூபமிடுபவரை அணுகி, அவர் கையிலுள்ள பாத்திரம் ஒன்றை எடுத்து கையிலேந்திக் கொண்டு தூபப் பொடியை அதிகம் அள்ளி அங்கங்கே தூபங்களில் போட்டுக் கொண்டே போனாள்.

இதனால் கமகமத்த புகை சற்று நிறைவாக அந்தக் கூடாரத்துள் பரவியது.

வாசந்திகா இந்த விதத்தில் இரண்டு சுற்றுச் சுற்றி வருவதற்குள் கூடாரத்துள் புகை நிறைய மண்டிக் குமைந்து விட்டது.

மிருதங்கத்தின் மிடுமிடுப்பு இதற்குள் கூடி ஒரு உச்சத்தை அடைந்தது. குலசேகரனிடமிருந்து அப்போது திடீர் சைகை கிடைக்கவே, கையில் வைத்திருந்த தூபப் பொடி முழுவதையும் ஒரு சட்டிக்குள் கவிழ்த்து விட்டாள் வாசந்திகா!

அந்தப் புகையில் எல்லோருடைய பார்வையும் தடுமாற, அதைப் பயன்படுத்திச் சதங்கைகளை விருட்டென்று கழற்றி எறிந்த அவள் குலசேகரனுடன் துள்ளி ஓடி வெளியேறினாள்.

வாசலில் நின்றிருந்த வீரன் மீது ஒரு குறுக்கத்தியை எடுத்துச் செருகிவிட்டு, விருட்டென்று ஒரு குதிரை மீது பாய்ந்து ஏறினான் குலசேகரன்.

பிறகு ஒரே அள்ளலில் வாசந்திகாவைத் தூக்கி வைத்துக் கொண்டு, நிலைவாயிலில் எரிந்து கொண்டிருந்த தீப்பந்தத்தைப் பிடுங்கி கூடாரத்தின் மீது விட்டெறிந்து, குதிரையை அடித்து ஓட்டிவிட்டு, வாயு வேகமாகப் பறந்தான் அவன்.

போகிற வழியில், கொடி பறக்கும் நீண்ட கொம்பு ஒன்றை உருவிக் கொண்ட அவன், கடை வீதி வழியாகக் குதிரையை வேகமாக ஓட்டுகையில் கொம்பை நீட்டிப் பிடித்து, வரிசையாக வைக்கப்பட்டு இருந்த எண்ணெய் விளக்குகளை எல்லாம் தட்டிக் கீழே தள்ளி, அந்தகாரத்தையும், குழப்பதையும் விளைவித்துக் கொண்டே விரைந்தான்.

இதற்குள் பிடி பிடி என்று எங்கும் கூக்குரல் பரவவே, வீரர்கள் நாலா பக்கங்களிலும் ஓடினார்கள்.

எரிபந்தம் விழுந்த கூடாரம் திகுதிகுத்து எரியத் தொடங்கியதும் கூப்பாடும் கூக்குரலும் கிளம்பவே, உள்ளே இருந்தோர் யாவரும் கூடாரத்தின் பல மூலைகளைப் பிய்த்துக் கொண்டு வெளியே ஓடினார்கள்.

அப்போது எழுந்த குழப்பத்தில் யாராலும் எதையும் நிறுத்த முடியவில்லை.

அந்நேரத்தில் மீசையும் தாடியும் வைத்த ஒரு டில்லி வீரன் விருட்டென்று ஒரு குதிரை மீது ஏறி அங்கு இங்கு என்று மோதி அடித்துச் சுழன்று, மேலும் குழப்பத்தை அதிகமாக்கிக் கொண்டிருந்தான்.

அவனும் அவன் குதிரையும் மோதிய மோதலில் பல விளக்குக் கம்பங்கள் கீழே விழ, அப்பிரதேசத்தில் இருட்டு இன்னும் அதிகமாக ஆரம்பித்தது.

கூடார நகரின் வழியில் தாறுமாறாகக் குதிரையைச் செலுத்தி, பல குதிரை வீரர்களின் மீது மோதிய அவன், கடைத் தெருவிலும் புகுந்து அங்கேயும் குழப்பம் விளைவித்து விட்டு முடிவில் பல பேரின் ஏச்சுக்களை வாங்கிக் கட்டிக் கொண்டு வெளியே நோக்கிப் பறந்தான்.

அவனுடன் மேலும் இரண்டு டில்லி வீரர்கள் குதிரை மீது ஏறி வர, "விடாதே பிடி!" என்று இரைந்து கொண்டு குலசேகரன் சென்ற திசையை நோக்கி அவர்கள் தங்கள் குதிரைகளை செலுத்தலானார்கள்.



இதற்குள் குலசேகரன் ஆற்றங்கரைச் சாலையில் பறந்து கொண்டிருந்தான். அவனது மார்பைத் தழுவி அமர்ந்தவாறு குதிரையின் வேகத்திற்கு ஈடு கொடுத்துக் கொண்டிருந்தாள் வாசந்திகா.

குதிரை நெடுந்தூரம் ஓட, குலசேகரன் வெகு விரைவில் தனது பின்னால் சில குளம்பொலிகள் அவனைத் தொடர்வதை உணர்ந்து விட்டான்.

"ஆகா! நம்மைத் தொடர்ந்து விட்டார்களே!" என்று எண்ணிய அவன், குதிரையை மேலும் மேலும் தூண்டிவிட அதுவும் நுரையைக் கக்கிக் கொண்டு தன் முழு சக்தியுடன் ஓடியது.

ஆனால் போகப் போக இருவரைத் தூக்கிச் செல்வதால், அதன் வேகம் குறைகிறது என்பதை உணர்ந்த குலசேகரன், அதே நேரத்தில் தன்னைப் பின்தொடரும் டில்லி வீரர்களுக்கும் அவனுக்கும் இடையே உள்ள இடைவெளி குறுகிக் கொண்டே வருவதையும் உணர்ந்துவிட்டான்.

இனி என்ன செய்யலாம் என்று அவன் யோசிக்கும் வேளையில், டில்லி வீரர்களின் குதிரைகள் அவனை விரைவாக நெருங்கிக் கொண்டிருந்தன.

அப்போது அவன், "வாசந்திகா!" என்று மெள்ள அவள் காதில் குரல் கொடுக்கவே, "சுவாமி!" என்று முகத்தைத் தூக்கினாள் அவள்.

"எதிரிகள் நம்மை நெருங்கிவிட்டார்கள். குதிரை மீது நீ இருந்தால் நான் சண்டையிடுவது கஷ்டம். உன்னை இறக்கி விட்டால் ஏதாவது புதருக்குள் மறைந்து கொள்வாயா?" என்று கேட்டான் அவன்.

"ஆகட்டும் சுவாமி!" என்றாள் அவள்.

உடனே குலசேகரன் வேண்டுமென்றே குதிரையைச் சாலையை விட்டுப் புழுதியில் இறக்கி, ஒரு பெரிய புழுதிப் படலத்தை தன் பின்னால் கிளப்பி விட்டான்.

அந்தப் படலத்தின் துணை கொண்டு ஓரமாகச் சென்று ஒரு இடத்தில் வாசந்திகாவை இறக்கிவிட்டு, பிறகு சாலையிலேறி விருட்டென்று அவன் பறக்க ஆரம்பித்தான்.

ஆனால் இதற்குள்ளாக முதல் வீரன் அவனை நெருங்கிவிட்டான்.

# 21

அருகில் நெருங்கிய டில்லி வீரன் வெகு ஆத்திரத்துடனேதான் வாளை உருவினான். ஆனால் அதே நேரத்தில், "சுவாமி! நான் தான் குறளன். நான் தான் குறளன்" என்று மெல்லிதான குரலில் இரைந்தான்.

திடுக்கிட்ட குலசேகரன் திரும்பி அவனைப் பார்த்தான். உற்றுக் கவனித்ததில் அவன் குறளன்தான் என்பதும், முகத்தில் பொய்த்தாடியும், மீசையும் வைத்திருக்கிறான் என்பதும் தெரிய வந்தது.

"சுவாமி! போய்கொண்டே இருங்கள்! நம் பின்னால் இரண்டு வீரர்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். மேற்கே வெகுதூரம் போய் மடக்கலாம்!" என்றான்.

அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ஓங்கிய வாளை அவன் வீசுவது போலவும், அது குலசேகரன் மீது படாதது போலவும் ஜாடை காட்டினான்.



இருவரும் வாயு வேகத்தில் குதிரையை ஓட்டிச் சென்றார்கள்.

தூரத்தில் ஒரு மணற்பாங்கான இடம் வந்ததும், திடீரென்று இருவரும் திரும்பினார்கள்.

பயங்கரமாகக் கூச்சலிட்டுக் கொண்டு குறளன் அந்த டில்லி வீரன் மீது வெகு கோபத்தோடு பாய்ந்தான்.

சற்றும் எதிர்பாராது திகைத்துப் போன அந்த வீரனை ஒரே வாள் வீச்சில் கொன்றுவிட்டான்.

அந்தத் திடீர் தாக்குதலைக் கண்டு வெகுண்ட, இரண்டாவது வீரன், மறுகணமே குதிரையை ஒரே இழுப்பில் திருப்பி பின்நோக்கித் தடதடவென்று ஓட ஆரம்பித்தான்.

குலசேகரனும் குறளனும் அவனைப் பின் துரத்திச் செல்ல, அந்த வீரன் பிடிபடாமல் சிட்டாய்ப் பறந்து மறைந்து விட்டான்.

களைத்துப் போய்த் திரும்பிய குலசேகரன், மணற் பிரதேசம் வந்ததும், கீழே குதித்து, "அப்பா" என்று மணலில் உருண்டு கைகால்களை ஆயாசத்துடன் நீட்டி நிமிர்த்தினான்.

கண்கள் சிவு சிவு என்று எரிய, ஒரு பெரிய அசதி அவனைப் பற்றிவிட்டது.

அப்போது குறளன், "சுவாமி! சுவாமி! சீக்கிரம் எழுந்திருங்கள். அந்த டில்லி வீரன் மற்ற வீரர்களை அழைத்து வருவான். வாசந்திகாவை இந்தக் காட்டுக்குள் இறக்கியிருப்பது அவனுக்குத் தெரிந்திருக்கும்!" என்று அவசரப்படுத்தினான்.

'உம்' என்று பெருமூச்சோடு எழுந்து கண்களைச் சிரமப்பட்டுப் பிரித்த குலசேகரன் உடம்பை வளைத்து நிமிர்த்தி உடன் குறளனுடன் புறப்பட்டான்.

குதிரைகளைக் கட்டிவிட்டு, "வாசந்திகா, வாசந்திகா!" என்று குரல் கொடுத்துக் கொண்டு அந்த பிரதேசத்திடையே அவர்கள் இருவரும் ஊடுருவிச் சென்றார்கள்.

பல நேரம் அழைத்தும், எந்தவித மறுகுரலும் கேட்காததால் மனம் வியாகூலப்பட்டு, 'அவளுக்கு என்ன நேர்ந்திருக்குமோ?' என்று அச்சப்பட்டார்கள்.

மரங்களிடையேயும், முட்புதர்கள் இடையேயும், புகுந்து சென்று உடம்பெல்லாம் கீறல் விழ, நீண்ட நேரம் தேடியும் அவளைக் காணாமல் திக்பிரமை கொள்ளும் வேளையில், "சுவாமி? அதோ பாருங்கள்!" என்று சுட்டிக் காட்டினான் குறளன்.

மரங்களின் இடை வழியே தூரத்தில் உள்ள சாலையை நோக்குங்கால், அங்கே புகையைக் கக்கிக் கொண்டு நிறைய தீ ஜுவாலைகள் சிலுசிலுவென்று பறந்து வருவது தெரிந்தது.

அத்தனை தீவர்த்திகளும், அத்தனை குதிரை வீரர்கள் என்று புரியும்போது, "குறளா, மோசம் போனோமே!" என்று குலசேகரன் கூற, "சுவாமி! அவர்கள் நம்மைத் தேடித்தான் வருகிறார்கள். சாலையில் நாம் குதிரைகளைக் கட்டியிருக்கிறோமே, அதை வைத்து நம்மைக் கண்டுபிடித்து விடுவார்கள்! சீக்கிரம் இந்த இடத்தை விட்டு அகல வேண்டும்!" என்று கூறினான்.

இதற்குள் அந்தத் தீவர்த்திகள் பிரிந்து வனப் பிரதேசத்தைக் கோதிக் கொண்டு வெவ்வேறு திசை நோக்கிப் பரவலாயின.

குலசேகரன் பரபரப்புடன் குறளனை நோக்கி, "குறளா! உடனே குதிரைகளை அவிழ்த்து, மேற்குத் திசை நோக்கிப் பறந்துவிடு! சீக்கிரம்!" என்றான்.



"நீங்கள்?" என்று குறளன் கேட்கவே, "வாசந்திகா என்ன ஆனாள் என்பதை நான் கவனிக்க வேண்டும். தவிர, காலையில் என் தாயாரின் அஸ்திகளைக் கரைத்தாக வேண்டும். ஆகவே நீ புறப்படு! சீக்கிரம்!" என்று அவசரப்படுத்தினான்.

குறளன் அந்த இடத்தை விட்டு விருட்டென்று ஏகினான்.

**சி**றிது நாழிகையில் வனப்பிரதேசம் முழுவதிலும் தீவர்த்தி ஜுவாலைகள் சிதறி விரியலாயின. ஆற்று மணல்வெளியிலும் அவை பொட்டுகளாகப் பரவலாயின.

குலசேகரன், நெடிதுயர்ந்திருந்த ஒரு வாகை மரத்தின் மீது கால் வைத்து வேகமாக ஏறினான்.

கிளைகளில் பின்னியிருந்த தடிமனான கொடிகளை எல்லாம் விலக்கி, மேலே மேலே சென்று உச்சாணியில் போய், இலை கொத்துக்களிடையே மறைவாக அமர்ந்து கொண்டான்.

வெகு விரைவில் தீவர்த்தி வீரர்கள் அவன் இருக்கும் மரத்தின் அருகே உள்ள இடங்களைச் சோதனை செய்தவாறு மேலே சென்றார்கள்.

அவர்கள் தேடுகிற முறையைப் பார்த்தால், வாசந்திகா எப்படியும் அவர்களிடம் சிக்கிவிடுவாள் என்று தோன்றியது.

அரை நாழிகைத் தேடலுக்குப் பிறகு, தீவர்த்திகள் அங்கங்கே இசைவான இடங்களில் அப்படியே நின்று விட்டன.

கண்களில் உறக்கம் கவிழ, களைப்பால் உடல் இற்றுப் போகத் தூக்க நிலையிலேயே பொழுதைக் கழிக்கலானான் குலசேகரன்.

பொழுது புலர்ந்து வானம் சிவந்தது. கண்களை அலர்த்திப் பார்க்கும்போது, அவன் பார்வை மரத்தின் வெகு அண்மையில் திடீரென்று விழுந்தது.

அங்கே ஆழமானதும், முன்புறங்களில் செங்குத்தானதுமான ஒரு பள்ளம் இருப்பது தெரிந்தது.

அதன் உட்புறத்தில் அவன் பார்வை திரும்புகையில் அவன் இதயம் பக்கென்று அடித்துக் கொண்டது.

அந்தப் பள்ளத்தின் அடியில் வாசந்திகாவின் உடல் துவண்டு கிடப்பது தெரிந்தது.

இரவில் அவள் தடுமாறி விழுந்திருக்க வேண்டும் என்று எண்ணிய போது அவளுக்கு உயிர் இருக்கிறதா என்ற கவலை அவன் மனத்தில் எழுந்தது. ஆனால்சிறிது நேரத்தில் மெள்ள மெள்ள அவளது உடல் உலைவது தெரியவே, இப்போது தான் அவள் மயக்கத்திலிருந்து எழுந்திருக்கிறாள் என்று தீர்மானித்தான் அவன். சுற்றிப் பார்க்கும்போது, சற்று தூரத்திற்கு அப்பாலேயே ஒரு குதிரை வீரன் நின்று கொண்டு, எதையோ கடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

உதவியை விரும்பி, வாசந்திகா கத்தினால் அது ஆபத்து!

அதே போல அவளை விளித்து அவன் கத்தினாலும் ஆபத்து!

இந்த இக்கட்டான நிலையில் சிறிது யோசித்த குலசேகரன் உடனே தன் மரக்கிளையிலிருந்து அடுத்த கிளைக்குத் தாவி பிறகு மரத்திற்கு மரம் தாவி பள்ளத்திற்கு அருகாமையில் வந்து சேர்ந்தான்.

பிறகு உச்சியிலிருந்து ஒரு கொடியை வெட்டி மெதுவாகக் கீழே நழுவவிட்டான்.



கண்ணைத் துடைத்து எழுந்த வாசந்திகா பயத்துடன் சுற்றிவரப் பார்க்கையில் அந்த கொடி அவளருகில் விழவே உடனே அண்ணாந்து மேலே பார்த்தாள்.

குலசேகரனது முகத்தைக் கண்டவுடனே அவன் சைகை காட்டியும் அதைப் புரிந்து கொள்ளாமல், "சுவாமி!" என்று மகிழ்ச்சியுடன் அழைத்தாள்.

குலசேகரன் திடுக்கிட்டான். அவனது பார்வை உடன் டில்லி வீரனின் பக்கம் திரும்பியது. டில்லி வீரன் ஆச்சரியத்துடன் அப்போது திரும்பினான்.

கையில் கடித்த கனியுடன் சரக் சரக்கென்று சருகுகளை மிதித்துக் கொண்டு நடந்து வந்தான். அவன் பார்வையில் அந்தப் பள்ளம் தெரிந்தது.

அதன் விளிம்பில் வந்து, உள்ளே நோக்கியதும், "ஹா ஹா, ரே!" என்று கூச்சல் போட்டான்.

மறுகணம் அவன் வாயை ஒரு பலமான கை பொத்தியது. அதே கணம் அவன் கழுத்தும் இறுக்கப் பட்டது. அவனது துடித்துத் துள்ளிய உடல் சில கணங்களில் துவண்டுபோய் அப்படியே கீழே சரிந்தது.

இளைப்போடு அருகே நின்ற குலசேகரன் வாசந்திகாவிற்கு சமிக்ஞை செய்து பேசாமல் இருக்கும்படிப் பணித்தான்.

பிறகு அந்த வீரனின் சடலத்தைச் சரசர என்று இழுத்து ஒரு மூங்கில் புதருக்குக் கொண்டு போய் அதன் குழிக்குள் தள்ளி அதன் மீது கொடிகளை இழுத்துப் பரப்பி மூடி வைத்தான்.

பிறகு பள்ளத்தின் பக்கம் வந்து, அருகிலுள்ள மரங்களில் சுற்றியிருந்த கொடிகளை அதன் மூடுகளோடு உருவி எடுத்து பள்ளத்திற்குள் அவற்றை நழுவ விட்டான்.

  

போதுமான அளவு கொடிகளைப் போட்ட பிறகு அவனே பள்ளத்துள் இறங்கினான்.

"வாசந்திகா! உன்னை நெருங்கி வெளியே படை வீரர்கள் இருக்கிறார்கள். தப்ப முடியாது. இப்படியே படுத்துக் கொள்! உன் மீது கொடிகளைப் போட்டு மூடி விடுகிறேன். இரவுதான் நாம் இதை விட்டு வெளியே போக வேண்டும்" என்று கூறினான்.

"நீங்கள்?" என்று அவள் வினவிய போது, "நானும் இங்கே படுத்து என்னை மூடிக் கொள்ளப் போகிறேன். நடப்பது நடக்கட்டும்!" என்று கூறினான்.

பிறகு அவள் படுத்ததும், கொடிகளை அவள் மீது படரவிட்டு மூடிய பிறகு, தானும் கீழே படுத்துத் தன்னை மூடிக் கொண்டான்.



காலை நண்பகலாகி பிறகு மாலையாகிக் கொண்டிருந்தது. இருவரும் அதே நிலையிலேயே பசி, தாகம் மறந்து படுத்திருந்தார்கள்.

பகலில் கொளுத்தும் வெம்மையை அனுபவித்த பிறகு மாலை வந்ததும் சிறிது இதம் ஏற்படலாயிற்று.

மாலை ஒழிந்து மையிருள் பெய்தபோது, மெள்ள மெள்ள அவர்கள் தங்கள் இருக்கைகளை விட்டு எழுந்து ஆசுவாசத்துடன் அமரலானார்கள்.

இரவின் மூன்று நாழிகை போகும் மட்டும் அந்நிலையிலேயே இருந்துவிட்டுப் பிறகு குலசேகரன் வாசந்திகாவை அழைத்துக் கொண்டு பையப்பைய மேட்டின் மீது ஏறினான்.

மேலே முந்தைய இரவைப் போலவே ஆங்காங்கே வீரர்கள் தீவர்த்திகளுடன் நிற்பது தெரிந்தது. இனி இங்கிருந்தால் ஆபத்து என்று உணர்ந்து அடர்ந்த அந்த



மரக் காட்டினூடே மெள்ளப் பதுங்கிச் சென்று காவேரி ஆற்றின் அருகில் இருவரும் வந்து சேர்ந்தார்கள்.

ஆற்றின் மணல் வெளியிலும் தீவர்த்தியுடன் வீரர்கள் அங்கங்கே நிற்பதைப்பார்த்துவிட்டு, 'நமக்குச் சரியான வலை விரித்திருக்கிறார்கள்' என்று எண்ணிய அவன், அருகில் மணற்பரப்பு சிறிது குழிந்து ஆழ்ந்திருப்பதை அறிந்து, அதைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தான்.

வாசந்திகாவுக்குத் தன் யோசனையைக் கூறிவிட்டு, பிறகு அவளும் அவனுமாகக் கீழே அந்த மணல் வெளியில் படுத்து உருண்டவாறு நீர் விளிம்பை அடைந்தார்கள்.

நீரில் ஓசையிலாது ஆழ்ந்து, நடு ஆழத்தை அடைந்து பிறகு கீழ் திசையை நோக்கி ஆற்று நீரோட்டத்துடன் இருவரும் செல்லத் தொடங்கினார்கள்.

வெகு தூரம் போனபிறகு இனி அபாயமில்லை என்று உணர்ந்து, ஒரு பாறையைக் கண்டு அதனைப் பிடித்து எழுந்து மேலே ஏறினான் குலசேகரன். அவன் பின்னால் ஏறிய வாசந்திகா ஈரம் இழுத்து இறுக்கிய இளமேனியுடன் அவன் பக்கலில் வெட்கித் தலை கவிழ வந்து நின்றாள்.



# 22

திருவரங்கத்தை விட்டுப் புறப்பட்ட திருவரங்கன் ஊர்வலம் அன்று இரவே திருச்சிராப்பள்ளிக் கரையைக் கடந்து, அதை அடுத்துள்ள தொண்டைமான் காட்டில் புகுந்தது.

அந்த நாளில் திருச்சிராப்பள்ளி ஒரு சிறிய நகரமாக இருந்தது. அதைச் சுற்றி ஒரு கோட்டையும்

ஆழமான அகழியும் இருந்தன. நகரத்தை அடுத்துச் சிறிது தூரம் வரை சோலை களும் கழனிகளும் இருந்தன.

அவற்றிற்கு அப்பால் ஊழியிருள் போல் ஒரு காடு பெருத்த நெருக்கத்தோடு இருந்தது.

இந்தக் காட்டுக்குள்தான் பிள்ளை உலகாசிரியர் திருவரங்கன் ஊர்வலத்துடன் நுழைந்துவிட்டார்.

புறப்பட்ட தினத்தின் இரவு முழுவதும் அந்தக் காட்டுக்குள், ஒரு வசதியான இடத்தில் ஊர்வலத்துடன் அவர் தங்கியிருந்தார்.

தீவர்த்திகள் யாவற்றையும் அணைத்துவிட்டு, விலங்குகளையும் இதர ஜந்துக்களையும் விரட்டு வதற்காக இடையிடையே முரசங்களைத் தட்டிக் கொண்டு இரவு முழுவதும் ஊர்வலத்தார் அங்கே பொழுதைக் கழித்தார்கள்.

காலையில் எழுந்து புறப்படச் சித்தமான போது, அவர்களுக்கு ஒரு கவலை எழுந்தது.

வேதாந்த தேசிகரும், இன்னும் பல பெரியோர் களும் இன்னும் வந்து சேரவில்லையே, அவர்கள் ஏன் பின் தங்கிவிட்டார்கள் என்பதை நினைத்துத்தான் அவர்கள் கவலைப்பட்டார்கள்.

ஆனால் திருச்சிராப்பள்ளிக்கு இவ்வளவு அருகாமையில் ஊர்வலம் இருப்பது ஆபத்து என்ற நினைவும் அவர்களுக்கு ஏற்பட்டது.

ஆகவே, நண்பகலுக்கு மேல் அவர்கள் அந்த இடத்தை விட்டு அகன்று காட்டுக்குள் செல்ல ஆரம்பித்தார்கள்.



அந்நாளில் பெரும் பகுதியான இடங்களைக் காடுகளே மூடியிருந்தன. பூமி அதன் கன்னித் தன்மையில் இருந்து அதிகம் மாறாமலிருந்தது.





பிரயாணிகள் போகும் சாலைகள் எல்லாம் பெரும்பாலும் இந்தக் காடுகளுள்ளும் சோலை களுள்ளுமே சென்றன.

திறந்த வெளிப்பிரதேசத்தில் கூட, சாலையின் இரு மருங்கிலும் ஆல விருட்சங்கள் வரிசையாக நெருங்கி நின்று கொண்டிருந்தன.

பிரயாணம் செய்வோருக்காக வழி நெடுகிலும் ஏராளமாகச் சத்திரங்கள் இருந்தன. இவற்றில் பெரும்பாலானவற்றை தனி மனிதர்களே ஒரு தர்ம காரியமாகக் கட்டி இருந்தார்கள். ஒவ்வொரு சத்திரத்திற்கும் அதை கட்டியவர் பெயரே வைக்கப் பட்டிருந்தது.

பிரயாணிகளில் பெரும்பாலோர் நடந்தே சென்றார்கள். கள்வர்கள் பயம் இருந்ததால் அவர்கள் பெரும்பாலும் கூட்டம் கூட்டமாகவே சென்றார்கள்.

வசதி மிக்கவர்கள் பல்லக்குகளிலும் குதிரைகள் மீதும் சென்றார்கள். பிரயாண வழிகள் கிளை கிளை களாக அங்கங்கே பிரிந்து பல்வேறு தலங்களுக்கும் நகரங்களுக்கும் சென்றன.

இவற்றில் பிரதான சாலைகளைப் பெரும்பாலும் தவிர்த்து விட்டுச் சுற்று வழியாகவே சென்றது திருவரங்கனின் ஊர்வலம்.

முன்னால் பரிசனங்கள் வழிகாட்ட, அவர்களை அடுத்து பிள்ளை உலகாசிரியரும் இதர சீடர்களும் நடந்து செல்ல அவர்களுக்குப் பின்னால் திருவரங்கனது பல்லக்கு கடுகி வந்தது.

பல்லக்கு முன்னே போகப் போக சில பரிசனங்கள் துளவக் கொத்துக்களை முறித்துக் கீழே போட்டுக் கொண்டே போனார்கள். காட்டுப் பகுதியில் மறைந்த வாறே. ஆனால் அதே நேரத்தில் பிரயாணிகள் சாலையை அனுசரித்தவாறு அந்த ஊர்வலம் சென்றது.

இரு தினங்கள் இவ்விதம் யாத்திரை செய்து சில காதங்கள்* போன /பின், இனி மற்றவர்களுக்காகக் காத்திருப்பது என்று தீர்மானித்து, ஒரு இடத்தில் ஊர்வலத்தார் நின்றுவிட்டார்கள்.

தங்கிய இடத்தில் அன்றைய இரவைக் கழித்து விட்டு மறுநாள் எழுந்த போது, 'பிரம்ம தந்திர சுதந்திர ஜீயர்' என்பார் மிக வியாகுலத்துடன் காணப்பட்டார்.

துயரம் ததும்பும், கண்களுடன் அவர் பிள்ளை உலகாசிரியரை அணுகி, "சுவாமி! அடியேனது குரு வேதாந்த தேசிகர் இன்னும் வந்து சேர்ந்தபாடில்லையே! அடியேனுக்கு கவலையாக இருக்கிறதே! என் செய்வேன்! அடியேன் திரும்பப் போய் அழைத்து வரலாம் என்று தோன்றுகிறதே!" என்று கூறினார்.

அதற்கு உலகாசிரியர் அவரை நோக்கி, "ஜீயரே! வருந்த வேண்டாம்! நாம் கடந்து வந்த வழியைக் காண்பிப்பதற்காக துளவங்களை முறித்துப் போட்டு வந்திருக்கிறோமே! அதைப் பார்த்து அடையாளம் கண்டு கொண்டு நிச்சயம் எல்லோரும் வந்து சேருவார்கள்!" என்று கூறினார்.

அந்தச் சமயத்தில் ஊர்வலத்திலுள்ள முரசம் ஒன்று எச்சரிக்கைக்கான ஓசை எழுப்பவே, எல்லோரும் என்ன விஷயம் என்று பல திசைகளிலும் உற்றுப் பார்த்தார்கள்.

வடதிசையில் மரங்களுக்கு ஊடே இருவர் வேகமாக வந்து கொண்டிருப்பது அவர்கள் கண்களுக்குப்பட்டது. யாராக இருக்கும் என்று வருகிறவர்களை சந்தேகத்தோடு எல்லோரும் கூர்ந்து நோக்கினார்கள்.

வருகிறவர்கள் அருகே வரவர அவர்கள் சோலையப்பனும், குருகையப்பனும்தான் என்பது

* ஏழரை நாழிகை வழிதூரம்



தெரிய வந்தது. பரபரப்புடன் வந்து கொண்டிருந்த அவர்கள் இருவரும் அழுது கொண்டே வருவது தெரிந்தது.

சோலையப்பன் உலகாசிரியரைக் கண்டதும் ஓடி வந்து கண்ணீர் பெருக அவர் அருகில் நின்று, "சுவாமி! மோசம் போய்விட்டது! எல்லாம் இழந்து விட்டோம்! ஊர் எல்லாம் அழிந்து போயிற்று!" என்று விம்மலோடு கூறினான்.

திக்பிரமையுடன் நின்ற உலகாசிரியர், "என்ன கூறுகிறாய் சோலையப்பா?" என்றார் பதட்டத்துடன்.

"திருவரங்க நகரமே எரிந்து போயிற்று! எல்லோரையும் கொன்று விட்டார்கள். நகரம் விதவை போல் நிற்கிறது. கழுகும் ஓநாயும் ஊருள் புகுந்து விட்டன" என்று கூறி விம்மினான் குருகையப்பன்.

"சொல்வது எல்லாம் உண்மைதானா?" என்றார் உலகாசிரியர்.

"உண்மைதான் சுவாமி! தப்பி வந்த ஒருவர் எங்களுக்கு விஷயமெல்லாம் கூறினார்" என்று கூறி, அரங்க நகரத்தில் நடந்த சண்டையை விளக்கினான் சோலையப்பன்.

அந்தக் கணத்தில், "சுவாமி!" என்று தீனமான குரலை எழுப்பிக் கொண்டு 'பிரம்ம தந்திரர்' உன்மத்தம் கொண்டவர் போல் வந்த வழியில் திரும்பி ஓடலானார்.

உடனே இருவர் பின்தொடர்ந்து ஓடி அவரைத் தடுக்க முயன்றும், அணைபடாமல் ஒரே பிரமை பிடித்தாற்போல் ஓட ஆரம்பித்தார் அவர். அந்தக் காட்சியும், அதில் ததும்பிய சோகமும் உலகாசிரியரைத் திடுக்கிட வைத்தன. அவர் திருக்கண்களிலிருந்து நீர் உதிர, அப்படியே சிலை போன்று நின்றார்.

பிறகு, "அப்பனே அரங்கனே!" என்று கூறித் தளர்ந்து போய் கீழே அமர்ந்து தம் நெற்றிப் பொட்டுக் களை அழுத்திப் பிடித்தார்.

வெகு நேரம் அவர் அவ்விதம் இருப்பதைப் பார்த்த அவரது சீடர்களில் ஒருவரான கூரகுலோத்தம தாச நாயனார் என்பவர், அவர் அருகில் சென்று, அவரது திருமேனியைப் பாங்காகத் தாங்கிக் கொண்டு, "சுவாமி! சுவாமி! தாங்கள் சோகித்தால் அடியோங்கள் கதி என்ன ஆவது?" என்று கூறி அவரைத் தேற்ற முயன்றார்.

பின்னர் ஒருவாறு தேறி உலகாசிரியர் பண்டு* போல் முகம் தெளிந்து எழுந்திருந்தார்.

பின்னர் மற்றவர்களுடன், 'இனி செய்வதென்?' என்று ஆலோசித்து கோவில் திரவியங்களையும், விக்கிரகங்களையும் காணாத டில்லிப் படையாட்கள், பெருமாளைத் தேடி நிச்சயம் காட்டுக்குள் வருவார்கள் என்று தீர்மானித்து, உடனே ஊர்வலத்தை அந்த இடத்தைவிட்டு அகற்றத் திட்டமிட்டார்.

அடுத்த அரை நாழிகையில் ஊர்வலம் அந்த இடத்தைவிட்டு நகர்ந்தது.

மாலை மங்கும் நேரத்தில் சில காதங்கள் சென்ற பிறகு, தங்கும் இடம் ஒன்றைத் தேர்ந்தெடுக்கும் நேரத்தில் 'திடு திடு திடு' என்று சுற்றி வர சப்தங்கள் எழுவது கேட்டு ஊர்வலத்தார் திடுக்கிட்டு நின்றார்கள்.

கைகளில் தூக்கிப் பிடித்த ஈட்டிகளுடனும், வாள்களுடனும், முப்பது பேர் அந்த ஊர்வலத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டார்கள்.

கொடிய மீசைகளுடனும், ஆஜானுபாகுவான தோற்றங்களுடனும், திண்டு திண்டான புஜங்களுடனும்

* பண்டு – முன்பு



தென்பட்ட அவர்கள், அந்தக் காட்டிலுள்ள கள்வர்கள் தான் என்று சில கணங்களிலேயே ஊர்வலத்தாருக்குத் தெரிந்து போயிற்று.

அந்த நாளில் தொண்டைமான் காட்டுப் பகுதியில் பெரிய பெரிய கள்வர் கூட்டங்கள் இருந்து வந்தன.

சாலைகளில் செல்லும் பிரயாணிகளை வழிப்பறி செய்தும், சுற்றியுள்ள கிராமங்களைச் சூறையாடியும் ஜீவனம் நடத்தி வந்தார்கள் அவர்கள்.

அவர்களுக்குப் பயந்து பிரயாணிகள் அந்நாளில் கூட்டம் கூட்டமாகவே நடந்து போவார்கள்.

சாலையை விட்டு வேறு எந்தத் திக்கிலும் செல்ல மாட்டார்கள். சென்றால், பொருள் பறி போவதும் அன்றி உயிருக்குக் கூட ஆபத்து ஏற்படும் என்று அவர்கள் அறிந்திருந்தார்கள்.

அப்படிப்பட்ட கள்வர் கூட்டம் ஒன்று தான் இப்போது திருவரங்கனது ஊர்வலத்தைச் சுற்றி வளைத்திருந்தது.

ஊர்வலத்தில் வந்தோர் எல்லாம் வாய் புதைத்து நிற்க, கள்வர் தலைவனான ஒரு முரட்டு மனிதனும், அவனது இரு சகாக்களும் அந்த ஊர்வலத்தை வெகு வேகத்துடனே பார்வையிட்டார்கள்.

ஊர்வலத்தினரது பெட்டகங்களைக் கண்ட அவர்கள், "இதற்குள் என்ன?" என்று அதட்டிக் கேட்க, பதறிப் போன பரிசனங்கள், "இவை திருவரங்கனின் நகை நட்டுகள்!" என்று கூறினார்கள்.

"திருவரங்கனா? அவன் எந்த ஊர் ராஜா?" என்று தலைவன் அலட்சியமாகக் கேட்க, பரிசனங்களில் ஒருவர், "அவர்தான் திருவரங்கத்துப் பெருமாள்!" என்று கூறினார்.

"பெருமாளா? அவர் ஏன் காட்டுக்கு வந்தார்? இந்தப் பொய்தானே வேண்டாம் என்கிறேன். உயிருக்கு ஆசையிருந்தால் உடனே பெட்டகங்களை திறவுங்கள்" என்று கூறினான்.

முதல் பெட்டகத்தைத் திறந்தபோது உள்ளே அரங்கனின் அணிமணிகளும், வைர நகைகளும், முத்து, பவளம், பொன், வெள்ளி ஆபரணங்களும் நட்சத்திரப் புள்ளிகளைப் போல் ஒளியை வீசி அடித்தன.

அவற்றை இரு கைகளாலும் அள்ளி ஆசை பொங்கும் கண்களுடன் அந்தத் தலைவன் பார்க்கும் போது, "அப்பா!" என்ற குரல் அவன் பின்னால் கேட்டது.

பிள்ளை உலகாசிரியர் அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

"இந்த ஆள் யார்? " என்று வெகு ஆத்திரத்துடனே தல்லவன் அவரை நோக்க, அதைப் பொருட்ப் படுத்தாதவர் போல் அவனையே பார்த்துக் கொண்டு நடந்து வந்தார் உலகாசிரியர்.

உடனே கள்வர் தலைவன் தன் இடையிலிருந்த வாளை உருவினான்.

# 23

கள்வர் தலைவன் வாளை உருவுவதைக் கண்டு வெருளாது, அவன் முன்னால் சென்றார் பிள்ளை உலகாசிரியர்.

"அப்பா! வாளை உருவுகிறாயே! வாளுக்கு நாம் எதிர்வாள் கொண்டு வந்தோமில்லையே! நீ ஒருதீரன் என்று அல்லவா நினைத்திருந்தோம். வாயால் பேச



வேண்டியதை வாளால் பேசுகிறாயே!" என்று கூறினார் அவர்.

கள்வர் தலைவன் அவரை அரைக் கோபத்தோடும் அரை வியப்போடும் பார்த்தான்.

அவனது சீற்றத்தைச் சிறிதும் பொருட்படுத்தாது அவன் முன்னால் உரிமையுடன் நடந்து சென்றார் உலகாசிரியர்.

கள்வர் தலைவன் அவரை அலட்சியத்துடன் பார்த்தான். ஆனால் உலகாசிரியரின் கண் மலர்களில் கனிந்த ஒரு அருள் ஒளி அவனைச் சிறிதே தடுமாறச் செய்தது.

"நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்? யாருக்கு இந்தக் கப்பம் எடுத்துச் செல்கிறீர்கள்?" என்று கேட்டான் தலைவன் சீற்றத்துடன்.

"அப்பா! பூஉலக வைகுந்தம் என்று கூறப்படும் திருவரங்கத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதில்லையோ? பரத கண்டம் முழுவதும் பிரசித்தமாயிற்றே! இந்தக் கண்டத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் அரசர்களும், பிரதானிகளும், பரிசனங்களும், பக்தர்களும் தினந் தோறும் புனித யாத்திரையாக வந்து சேவிக்கும் தலமல்லவா திருவரங்கம்! அந்த அரங்க நகரில் குடி கொண்டிருக்கும் திருவரங்கனின் பரிவாரங்கள் நாங்கள்! இவை எல்லாம் 'அரங்கனது சொத்துக்கள்!" என்றார் உலகாசிரியர்.

கள்வர் தலைவன் அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

"திருவரங்கனை அறிவோம் ஐயா! அவருடைய சொத்துக்கள் இந்தக் காட்டுக்குள்ளே வர வேண்டிய அவசியம் என்ன? எங்களை ஏமாற்றப் பார்க்கிறீர்களா? அரங்கனது சொத்துக்களை நீங்களே அபகரித்துக் கொண்டு போகிறீர்களா? நேர்மையாக எடுத்துச்

செல்வதென்றால் சாலை வழியாகப் போயிருக்கலாமே?" என்றான் அவன்.

"அபசாரம்! அபசாரம்!" என்று கூறிய உலகாசிரியர், "அப்பா, நாட்டில் தூரதேசப் படைகள் வந்திருப்பது தெரியாதா? அவர்கள் அரங்க நகரைப் பாழ்படுத்தி விட்டார்களே! இது தெரியாதா உனக்கு? இது காரணம் பற்றியே திருவரங்கன் காட்டுக்குள் பிரவேசித்து இருக்கிறார். நாட்டில்தான் பயம் புகுந்திருக்கிறது என்றால் காட்டுக்குள்ளும் இந்தக் கதி அவருக்கு ஏற்படலாமா?" என்றார் அவர்.

"ஐயா! நீங்கள் என்ன கூறுகிறீர்கள்? திருவரங்கன் இந்தக் காட்டுக்குள் வந்திருக்கிறாரா?" என்றான் பதட்டத்துடன்.

"ஆமாம் அப்பா! இதோ உன் கண் முன்னாலேயே இருக்கிறார்!" என்று கூறிப் பரிவாரங்களுக்கு சமிக்ஞை காட்டவே, திருச் சின்னங்களை உடனே ஊதிக் கொண்டு எழுந்த பரிவாரங்கள், பல்லக்கை எழுந்தருள வைத்துக் கொண்டு உலகாசிரியர் முன் வந்தார்கள்.

"அப்பா! ஆயிரம் ஆயிரம் அரசர்களும், அடியார்களும் அரங்கன் இருக்கும் இடம் தேடி வருவார்கள். அப்படி வந்தாலும் குறித்த வேளை தவிர மற்ற நேரங்களில் அவரைக் காண முடியாது. ஆனால் இங்கே, நீ செய்த பூர்வ புண்ணியத்தினால், இந்தக் காட்டுக்குள் திருவரங்கன் எழுந்தருளி, நீ இருக்கும் இடத்தையே தேடிவந்து உனக்குச் சேவை சாதிக்கிறார் பார்!" என்று கூறி திருப்பல்லக்கின் திரையை நீக்கி விட்டார் உலகாசிரியர்.

அப்போது கற்பூரத்தை ஒருவர் ஏற்றிக் காண்பிக்க, உள்ளே திருவரங்கனின் திருப்பொலிவு பெற்ற திவ்விய உருவம் ஒரு சுடர் விடும் புன்னகையோடு அதி மோகனமாக விகசித்தது.



அந்த திருக்காட்சியைச் சில கணங்கள் மெய் மறந்து பார்த்திருந்த கள்வர் தலைவனின் கண்களிலே நீர் சுரந்தது. அவன் கைகள் தாமாக வாளைக் கீழே நழுவவிட்டு அஞ்சலியாக மேலே குவிந்துவிட்டன. "ரங்கா! ரங்கா!" என்று கூவிக் கைகளைத் தூக்கி, கீழே விழுந்து வணங்கிய தலைவன், "சுவாமி! பெரிய பாபம் செய்வதாக இருந்தோம். எங்களைக் காப்பாற்றினீர்கள்! பெருமாளுக்கு நேர்ந்தவைகளைக் கேட்டு மனம் வருந்துகிறோம். எங்கள் எல்லைவரை பெருமாளுக்கு எந்தவிதத் தீங்கும் ஏற்படாதவிதம் காக்கிறோம்" என்று கூறினான்.

பிறகு, பெருமாளுக்கு அன்றைய தின நைவேத்தியங்களுக்காகப் பொருட்களைக் கொணர்ந்து காணிக்கையாகக் கொடுத்ததும் அன்றி, ஊர்வலத் தாருக்கு வேண்டிய வசதிகளை எல்லாம் அவன் செய்து கொடுத்தான்.

சிரமப் பரிகாரம் செய்து கொண்ட ஊர்வலம் மீண்டும் புறப்பட்டபோது, கள்வர் தலைவனும் அவனது ஆட்களும் பயபக்தியோடு திருவரங்கனைத் தொடர்ந்து வந்து, அவர்களது எல்லை வந்ததும், மிக உருக்கமாக விடை பெற்றுக் கொண்டு, "ஐயாக்களே! போகிற வழியில் பல்வேறு கள்ளர் பற்றுக்கள் இருக்கின்றன. கவனத்தோடு செல்லுங்கள்!" என்று கூறி, கூப்பிய கைகளைப் பிரிக்காதவாறு, ஊர்வலம் மறையும் வரை அங்கேயே நின்றார்கள்.

அரங்கன் கோட்டை வீழ்ந்த அன்று, உயிரற்ற சடலங்களுக்கு அடியில் மறைந்திருந்த வேதாந்த தேசிகர், இரவு வெகு நேரம் வரை அப்படியேக் கிடந்தார்.

இருட்டி ஒரு நாழிகைக்குப் பிறகு, ஓசையெல்லாம் அடங்கி விட்டதை அறிந்து மெள்ள எழுந்து, சுதர்சன ஆசிரியரின் பிள்ளைகளை எழுப்பி, மண்ணுக்குள்

செருகி வைத்திருந்த சுருத பிரகாசிகை ஏட்டையும் பறித்து எடுத்து, அடி மேல் அடி வைத்து, கோபுர வாயிலுக்கு வந்தார்.

வாயிலில் யாரும் இல்லை என்பதை அறிந்து, பைய நடந்து வெளியேறி, தென் காவேரி செல்லும் பாதையில் விரைவாக நடந்தார்.

மறைவான ஒற்றைத் தடங்களில் நடந்து மேற்கே வெகுதூரம் போய், ஆற்றைக் கடந்து உறையூருக்கு அப்பால் கரையேறினார். போகிற வழியில் ஆயாசம் ஏற்படவே தரிசையாக கிடந்த ஒரு வயல் வெளியில், அந்த இரு சிறுவர்களோடு படுத்திருந்து இரவுப் பொழுதைக் கழித்தார்.

காலையில் எழுந்து வேகமாக நடந்து, ஒரு குக்கிராமத்தை அடைந்தார். அங்கே திருவரங்க நகரை விட்டு ஏற்கெனவே வந்திருந்த நகரவாசிகள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள்.

திருவரங்கத்தில் நடந்ததைச் சுருக்கமாக தேசிகர் விவரிக்கவே, அவர்கள் அதனைக் கேட்டுக் கண்ணீர் உகுத்தார்கள்.

பிறகு அவர்கள், "சுவாமி! எங்களை எல்லாம் தனி ஊர்வலமாகப் பிரித்து, தந்திரமாக மேற்கே அழைத்து போய் அந்தந்த கிராமங்களில் போய் இருங்கள் என்று சொல்லி விட்டார்களே! அரங்க ஊர்வலத்துடன் எங்களையும் அழைத்துச் சென்றிருக்கலாமே!" என்று கூறினார்கள்.

அப்போது தேசிகர் அவர்களை நோக்கி, "பெரியவர்களே! அரங்கன் ஊர்வலத்துடன் போனால் அவருக்கும் ஆபத்து! உங்களுக்கும் ஆபத்து! பல காரணங்களை உத்தேசித்து நீங்கள் பிரிந்து வந்ததுதான் உசிதம். இப்போது நாட்டையே ஒரு இருள் சூழ்ந்து இருக்கிறது. கோவிலில் தங்கியிருந்த எல்லோரும்



கொல்லப்பட்டார்கள். நகரம் பாழாகிவிட்டது. நீங்களும் இங்கே வந்து அன்றாட வாழ்க்கைக்கே கஷ்டப் படுகிறீர்கள். இந்த நேரத்தில் நாம் பிரார்த்தனை செய்வதைத் தவிர வேறு வழியில்லை!" என்று கூறினார்.

அவர் கண்களில் அப்போது நீர் கசிய அவரது மனம் பாகாக இளகியது. அந்த நெகிழ்ச்சியான வேளையில் அவர் திருவாயிலிருந்து மெள்ள மெள்ள ஒரு சோகமான பிரார்த்தனை ஊறி வந்தது.

கலிப்ரணதி லக்ஷனை : கலித சாக்ய லோகாயதை:
துலுஷ்க யவநாதிபிர் ஜகதி ஜ்ரும்பமாணம் பயம் |
ப்ரக்ருஷ்ட நிஜ சக்திபி: ப்ரஸப மாயுதை: பஞ்சபி:
க்ஷிதி த்ரிதஸ ரக்ஷகை: க்ஷபய ரங்கநாத க்ஷணாத்

(ஏ! ரங்கநாத! கலி புருடனின் ஒற்றர்களைப் போன்றவர்களும் சாக்கியர், உலோகாயதர் இவர்களை சேர்த்தியாகக் கொண்டவர்களுமான துருஷ்கர், யவனர் (வெள்ளைக்காரர்கள்) முதலியவர்களாலே நாட்டில் இப்போது தோன்றியுள்ள பயத்தை, இயற்கையிலே வலிமை வாய்ந்தவையும் உம்முடைய சக்தி உருவங்கள் ஆனவையும், தேவர்களைப் பாதுகாப்பதுமான ஐம்படைகளைக் கொண்டு உடனே போக்கி அருள வேண்டும்)*

* திருவரங்கன் நகரம் ஆக்கிரமிக்கப்பட்டதைக் குறித்து வேதாந்த தேசிகர் மனம் நொந்து பாடியது அந்தக் கவிதை! இதுவும் இதனுடன் சேர்ந்த 28 பாக்களும் "அபீதிஸ்தவம்" என்னும் தலைப்பில் வழங்கப் பெறுகின்றன. இந்த நூல் இப்போதும் நமக்குக் கிடைக்கப் பெறுகிறது. மனத்தில் பயம் உடையவர்களும், கஷ்டங்கள் உடையவர்களும் அவை நீங்குவதற்காக இந்தத் தோத்திரத்தைப் பாராயணம் செய்வது இன்றும் வழக்கமாக இருந்து வருகிறது.

யவனர்களைக் குறிப்பிட்டதால் பின்னாளில் வரப் போகும் வெள்ளைக்காரர்களையும் தீர்க்க தரிசனத்தோடு தேசிகர் கூறிவிட்டார் என்று சிலர் சொல்லுவார்கள்!

நெக்குருக, அரங்கன் இருக்கும் திசைநோக்கிப் பிரார்த்தனையை நிகழ்த்திய தேசிகர் அன்று எதுவும் உட்கொள்ளாமலேயே உபவாசம் இருந்தார்.

மறுநாள் காலையில் எல்லோரிடமும் விடை பெற்று, சிறுவர்களையும் அழைத்துக் கொண்டு கிழக்கு முகமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தார்.

தொண்டைமான் காட்டை அடைந்த பிறகு, கீழே துளசிக் கொத்துக்களைத் தேடிக் கண்டு பிடித்து, அவற்றைப் பின்பற்றி மேலே நடக்கத் தொடங்கினார்.

அரை நாழிகை நடந்தபின், கீழே துளசிக் கொத்துகளைக் காணாமல் தடுமாறி அங்கும் இங்கும் அலைந்தார். மூன்று தினங்களாகிவிட்டபடியால் கொத்துக்கள் காற்றில் சிதறி வெவ்வேறு திக்குகளில் ஓடிவிட்டிருந்தன.

பிறகு, "இந்த வழியாகத் தான் போயிருக்க வேண்டும்" என்று ஒரு குறிப்பிட்ட திசையை நிச்சயித்து அந்த வழியாக அவர் போகத் தொடங்கினார்.

போகப் போக மரங்களின் அடர்த்தி அதிகமாகி விட்டது. அவற்றைச் சூழ்ந்திருந்த கருகருவென்ற இருட்டும் அதிகமாகியது. முன்னடி வைக்க வழி தெரியாமல், "ஐயோ! வழி தவறி விட்டோமே!" என்று நினைத்துச் சுற்றிச் சுற்றிப் பார்க்க, வந்த வழி கூட அவருக்குத் தெரியாமல் போய்விட்டது.

இதாகத்தான் இருக்கும் என்று ஒரு திசை நோக்கிச் செல்ல, அங்கே ஒரு மரத்தடியைப் பார்த்ததும் அப்படியே அவர் திடுக்கிட்டு நின்றார்.

முழு அளவில் அங்கே பல மனித எலும்புக்கூடுகள் கீழே படுத்துக் கிடந்தன.

காட்டுக்குள் எப்போதோ வந்த சிலர் அங்கே நசித்திருக்க வேண்டும் என்று அவர் தீர்மானம் செய்தார்.



அப்போது திடீரென இரு சிறுவர்களும், "சுவாமி! பாம்பு! பாம்பு!" என்று அலற, உடனே அவர் ஏறிட்டுப் பார்க்கையில் அங்குள்ள தாழ்ந்த மரக்கிளைகளில் நீள நீளமான பாம்புகள் புடலை காய்த்துத் தொங்குவது போல் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்க நேர்ந்தது.

அந்தக் கணமே சிறுவர்களை இழுத்து நிறுத்தி, வேறு திசையை நோக்கி விரைவாக நடக்க ஆரம்பித்தார் அவர். போகப் போக, மர இடுக்குகள் வழியாக வந்த பகல் வெளிச்சம் கூட மெள்ள மெள்ள மறைந்து கொண்டிருந்தது.

ஏது செய்வது என்று புரியாமல், "ஜீயா! ஜீயா!" என்று கூவினார் தேசிகர். அவர் அவ்விதம் கூவி அழைத்தது அவரது சீடரான பிரம்மதந்திர சுதந்திர ஜீயரைத்தான்.

"ஜீயா! ஜீயா!" அவர் அழைக்க, அந்தப் பொல்லாத வனப்பிரதேசம் அவரை நோக்கி, "ஜீயா! ஜீயா!" என்று குறும்புத்தனமாக எதிரொலித்துக் கூவியது.

ஒரு குறிப்பிட்ட இடம் வந்ததும், "ஜீயா! ஜீயா!" என்று அவர் அழைக்கும் குரல் பன்மடங்கு அதிகமான சப்தத்துடன் எதிரொலிப்பதைக் கவனித்து விட்டு, சடக்கென அங்கேயே நின்றார் அவர்.

அங்கே அவரது முன்னால் ஒரு பள்ளத்தாக்கின் முனை இருக்க வேண்டும் என்றும், அதனால்தான் எதிரொலி இரட்டை மடங்காகக் கேட்கிறதென்றும் ஊகித்தார்.

எங்கும் இருள் கனத்து நிற்பது தெரிந்ததே ஒழிய வேறு எதுவும் தெரியவில்லை. இனிமேலும் நடந்தால் பள்ளத்தாக்கில் விழுவோம் என்று உணர்ந்து அங்கேயே நின்றுவிட்டார் அவர்.

அப்போதும், வானம் இருட்டி, அந்த வனப் பிரதேசம் மேலும் இருட்டாகியது.

# 24

**கா**லையில் எழுந்ததும் கண்ணை திறந்து பார்த்து, இரண்டு அடி தூரத்தில் அதல பாதாளமான பள்ளத்தாக்கு இருப்பதைக் கண்டு, 'தப்பித்தோம்' என்று நினைத்த வேதாந்த தேசிகர், சிறுவர்களை அழைத்துக் கொண்டு, பள்ளத்தின் கரையோரமாக, "ஜீயா! ஜீயா!" என்று கூவியவாறு நடந்து சென்றார்.

அப்போது திடீரென்று ஒரு இடத்தில், "சுவாமி" என்று எதிர்க் குரல் கேட்க, திடுக்கிட்ட தேசிகர் பள்ளத்தின் அக்கரை நோக்கி, "ஜீயா!" என்று மறுகுரல் கொடுத்தார்.

அங்கிருந்து மீண்டும், "சுவாமி" என்று குரல் கேட்க, அது தமது சீடரான பிரம்மதந்திரரின் குரல்தான் என்று உணர்ந்த தேசிகர் கரையோரமாகக் குரல் கொடுத்துக் கொண்டே போக, எதிர்க்கரையில் இருந்த பிரம்ம தந்திரரும் மறுகுரல் கொடுத்துக் கொண்டே வர, ஒரு நாழிகை தூரம் மேற்கே போய் பள்ளத்தாக்கு முடிந்த இடத்தில் இருவரும் ஒன்று சேர்ந்து கொண்டார்கள்.

பிரம்மதந்திரர் புளகித்துத் தேசிகரை ஆரத்தழுவ இருவரும் ஆனந்தக் கடலில் மூழ்கி, ஒருவர்க்கொருவர் தங்கள் விருத்தாந்தங்களைக் கூறி அவரவர் மனச் சுமைகளை இறக்கிக் கொண்டார்கள்.

பிறகு பிரம்ம தந்திரர், "சுவாமி! வரும் வழியில் டில்லி வீரர்கள் திருவரங்கன் ஊர்வலத்தை தேடிப் போவதைப் பார்த்தேன். ஆகவே நாம் ஊர்வலத்தை நோக்கித் திரும்புவதில் ஆபத்துக்கள் நிறைய இருக்கின்றன. மேற்குத் திசை நோக்கிப் போவதுதான் நல்லது" என்று கூறினார்.



தேசிகருக்கும் அது சரி என்று படவே, இருவரும் அந்தச் சிறுவர்களை அழைத்துக் கொண்டு மேற்குத் திசை நோக்கிப் பயணமானார்கள்.

**டி**ல்லி வீரர்களிடம் தப்பி ஆற்றின் கரையேறிய வாசந்திகாவும், குலசேகரனும் இரு நாட்கள் வரை ஒரு *ஈரங்கொல்லியின் வீட்டில் தங்கி இருக்க, மூன்றாம் நாள் காலையில், குறளன் அவர்களைத் தேடிவந்து கண்டுபிடித்துக் கொண்டான்.

குலசேகரனது தாயாரின் அஸ்திகளைக் கரைக்க வேண்டி இருந்ததால் அன்று இரவு அவர்கள் அங்கேயே தங்கியிருந்து நடுயாமத்தில் அந்தக் கரைப்பு வேலையை முடித்துவிட்டு, மறுநாள் விடியுமுன்னே ஈரங்கொல்லி யிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்கள்.

வாசந்திகாவைப் போர்த்திப் பொய்த்தாடி, மீசை வைத்து ஒரு சந்நியாசிப் போல் செய்து, ஆண்கள் இருவரும் யோக உடை தரித்துப் பைராகிகளைப் போல் வேடம் போட்டுக் கொள்ள எல்லோரும் தங்கள் பயணத்தைத் துவக்கினார்கள்.

தொண்டைமான் காட்டில் துளவக் கொத்துக்களைச் சரிவரக் காண முடியாததால் சாலையிலேயே அவர்கள் நடந்து சென்று, மாலை சாயும்பொழுது ஒரு சத்திரத்தில் போய்த் தங்கினார்கள்.

இரவில் படுத்த போது வாசந்திகா தூக்கம் இல்லாதவளாய் அங்குமிங்கும் புரண்டு படுக்க, குலசேகரன் உடனே அவளது நகைகள் சிணுங்குவதைக் கேட்டு, எச்சரிக்க, இருட்டில் வெகு நெருக்கத்தில் இருந்து வரும் அவன் குரலைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்த அவள், அவன் மேலும் பேசுவான் என்று எதிர்பார்க்க, அவன் பேசாததால் வருத்தமும் துக்கமும் கொண்டவளாய் நினைக்கலானாள்.

* ஈரங்கொல்லி - துணி வெளுப்பார்

'பருவம் எய்திய நாள் முதலாய் எனைக் கண்டு மோகியாதவர் கிடையாதே! வைராக்கியமுள்ளவர் கூட எனைக் கண்டு அரை விநாடியாவது நெஞ்சம் குலைவார்களே! சிறுவயதினரும் என் அபரிமிதமான அழகைக் கண்டு திடுக்கிட்டு மெய்மறந்து நிற்பார்களே! அப்படி இருக்க, இவர் (குலசேகரன்) ஏன் இவ்விதம் இருக்கிறார்? மூன்று தினங்களாக என்னோடு இருந்தும் மனம் தடுமாறி, ஒரு வார்த்தை கூடச் சொல்லாமல் இருக்கிறாரே! என் மொழியோ, என் விழியோ அவரை ஏதும் செய்யாது இருக்கின்றனவே? இவர் ஒரு கல் நெஞ்சுக்காரரோ?'

'அல்லது மனதில் குமிழ்வதை வெளியிட இயலாது இருக்கும் இயல்பினரோ! எதுவும் புரியவில்லையே!'

'அல்லது நான் பிறந்த குலம் கண்டு என்னை வெறுத்து இருக்கிறாரோ!'

'எல்லோரது கண்களுக்கும், பேச்சுக்களுக்கும் என் குலத்தவர்கள் விருந்தாகிறார்கள் என்னும் காரணத்தால், ஒரு விதத்தில் இவள் ஒரு தனி நபரின் சுகானுபவத்திற்கு அல்லாமல், ஒரு சமூகத்தின் சுகானுபவத்திற்கே உரியவள் என்று நினைத்து, அதனால் ஒருவர் மட்டுமே என்னை உரிமை கொண்டாடுவது கூடாது என்று நினைத்து, என்னை ஒதுக்கித் தள்ளுகிறாரோ!'

'அல்லது பல பேர்களது கண் எச்சிலும், சொல் எச்சிலும், நினைவு எச்சிலும் பட்டவள் இவள்! அதனால் ஒதுக்கத்தக்கவள் என்று நினைக்கிறாரோ!'

'இவ்விதம் பலவிதத்திலும் ஒதுக்கித் தள்ளும் ஒரு குடியில் பிறந்தேனோ? இழி ஜன்மம் எடுத்தேனோ!' என்று பலதும் நினைத்துக் கண்ணீர் உகுத்த வண்ணம் இராப்பொழுதைக் கழித்தாள்.



முதலாவது கள்வர் பற்றை விட்டுச் சென்ற திருவரங்கன் ஊர்வலம் இருநாள் வரை எந்தவிதத் தடங்கலும் இல்லாமல் சென்று கொண்டிருக்க, பிள்ளை உலகாசிரியர் பெருமானின் பல்லக்கிற்குச் சற்று தூரம் முன்பாக, தமது சீடர்களுடன் நடந்து கொண்டிருந்தார்.

மூன்றாம் நாள் மாலையில் அப்படிச் செல்லும் வேளையில், "கீகீகீ" என்று தலை மேலே ஒரு பறவையின் அபயக் குரல் கேட்கவே, "என்ன இது?" என்று பார்க்கையில் கூரக் குலோத்தமதாச நாயனார் என்பார், "சுவாமி! இது நம் அரங்கனுடன் வரும் ராஜகிளி அல்லவோ. நம்மை அது இனங்கண்டு அழைக்கிறதே!" என்று கூறினார்.

அவர் அப்படிச் சொல்லும்போதே, ராஜகிளி பின் நோக்கிப் பறந்து செல்வதை பார்த்த உலகாசிரியர், "அரங்கனுக்கு ஏதோ நிகழ்ந்திருக்க வேண்டும்" என்று தீர்மானித்து, சீடர்களுடன் பின் திரும்பி விரைந்து செல்லலானார்.

ஊர்வலத்தைச் சீக்கிரம் அவர் அடைந்த போது, அங்கே தோன்றியிருந்த காட்சியைக் கண்டு திடுக்கிட்டு நின்றார். பல்லக்கையும், பெட்டகங்களையும் சுற்றி ஒரு பெரிய கள்வர் கூட்டம் சூழ்ந்திருப்பதையும், அரங்கனின் பரிசனங்கள் அவர்களுக்குப் பயந்து மௌனமாய் அமர்ந்திருப்பதையும், பரிசனங்களில் மூவரைக் கள்வர்கள் அடித்துக் கீழே தள்ளி இருப்பதையும் சோகத்துடன் அவர் பார்க்க நேர்ந்தது.

கள்வர் தலைவன் கையில் வேலோடு நின்று கொண்டிருக்க, அவனது அடியாட்கள் ஆபரணப் பெட்டகங்களைத் தூக்கி எடுக்க முயன்று கொண்டு இருந்தார்கள்.

"அப்பா" என்று குரல் எழுப்பிய உலகாசிரியர் கள்வர் தலைவனை நோக்கி, "இவை எல்லாம்

திருவரங்கன் சொத்துக்கள் அப்பா! அவைகளை எடுத்துச் செல்வது பாபம்!" என்று கூற, தலைவனும் அவரை நோக்கி, "பாபந்தான் சுவாமி! பாபத்தைப் பார்த்தால் நாங்கள் வாழ முடியுமா?" என்று கேட்டான்.

"அப்பா வாழ்வதற்கு வழியா இல்லை? நினைத்தால் எத்தனையோ வழி இருக்கிறதே!" என்று அவர் சொல்லும் போது, "சுவாமி, அவரவர் எல்லைக்குள் வந்த சொத்துக்களை அபகரிப்பது அரசர்களின் உரிமையாயிற்றே! நாங்கள் இந்தக் காட்டைப் பங்கு போட்டுக் கொண்டு அரசுரிமை செய்து வருகிறோம். ஆகவே எங்கள் எல்லைக்குள் வந்த சொத்துக்களை நாங்கள் பறித்துக் கொள்கிறோம்." என்று கூறினான்.

உலகாசிரியர் பலவித நியாயங்களை எடுத்துக் கூறியும் அதைப் பொருட்படுத்தாத தலைவன் அந்தப் பெட்டகங்களைத் தூக்கிச் செல்லும்படி அடியாட்களுக்கு உத்தரவு இடவே, பொறுமை இழந்த ஆசிரியர், "பாபிகாள், அரங்கனது செல்வத்தை எடுத்துச் செல்கிறீர்கள். உங்களுக்கு மேலுலக செல்வம் கிடையாது!" என்று கூறி, "இந்தாருங்கள் இவைகளையும் எடுத்துச் செல்லுங்கள்!" என்று சொல்லித் தம் காதில் அணிந்திருந்த கடுக்கன்களையும், கையில் தரித்திருந்த தோடாக்களையும், கணையாழிகளையும் கழற்றி அவர்கள் முன்னே வீசி எறிந்துவிட்டு, "போங்கள்! போங்கள்! இதோடு போய்விடுங்கள்!" என்று கத்தினார்.

அனைத்தையும் எடுத்துக் கொண்ட கள்வர் தலைவன் அந்த இடத்தை விட்டு, அகலாமல் நேரே திருவரங்கன் இருக்கும் பல்லக்குச் சென்று அருகிலுள்ளோர் தடுப்பதையும் பொருட்படுத்தாது பல்லக்கின் திரையை நீக்கினான்.

அப்போது உலகாசிரியர் ஓடிவந்து, "அப்பா! இன்று நீ பெற்ற பரிசில் ஏழு தலைமுறைக்குக் காணுமே. இன்னும் என்ன வேண்டும்?" என்று கேட்க, "இவையும் வேண்டும்" என்று பெருமாளின் மீது இருக்கும் ஆபரணங்களையும் அவன் கேட்க, சினம் பொங்கிய உலகாசிரியர் மனம் பொருமிக் கொண்டு அவைகளையும் கழற்றிக் கொடுத்தார்.



அப்படியும் தலைவன் போகாமல் இருப்பதைப் பார்த்த ஆசிரியர், "இன்னும் ஏன் நிற்கிறாய்?" என்று கேட்க, "நாச்சிமார்த் தாலிகளும், பெருமாளின் தங்கப் பூணூலும் எஞ்சியிருக்கின்றனவே?" என்று அவன் கூற, மேலும் கோபம் கொண்ட உலகாசிரியர், "பாபிகாள்! உங்களுக்கு நற்கதி நிச்சயம் கிட்டாது" என்று கூறி, நாச்சிமார்கள் கழுத்தில் மஞ்சட் கயிறுகளையும், பெருமாள் உடம்பில் பருத்திப் பூணூலையும் தொங்கவிட்டு மற்றுள்ள பொன் ஆபரணங்களை அவனிடம் கழற்றிக் கொடுத்துவிட்டு, "ம், கிளம்புங்கள்!" என்று கூறிப் பரிவாரங்களைக் கிளப்பிக் கொண்டு மேலே போகலானார்.

அவ்வளவில் கள்வர்களில் பலர் தனியாக நின்று ஆலோசித்து, "இவர் ஒரு மகான் போல இருக்கிறதே. இவரை நம் எல்லையில் சரிவர நடத்தினோம் இல்லையே?" என்று வருத்தப்பட்டு, அவசர அவசரமாக ஒரு தட்டு எடுத்து வந்து அதில் தங்கள் காணிக்கைகளாகக் காசுகளையும் கனி வர்க்கங்களையும் குவித்து, அதை எடுத்துக் கொண்டு உலகாசிரியரை நோக்கி ஓடினார்கள்.

விரைவில் கூட்டத்தைப் பிடித்து, "சுவாமி!" என்று கூவி ஆசிரியரின் பாதம் பணிந்து, பச்சை கட்ட*, அவரும் தாம் அடைந்திருந்த வெறுப்பில் இருந்து மீளாதவராய், அவர்களை நோக்கி, "வேண்டாம், எடுத்துச் செல்லுங்கள்!" என்று கூறி மேலே திடுதிடு என்று நடந்து செல்லத் தொடங்கினார்.

* பச்சை கட்ட - காணிக்கை செலுத்த

இவ்விதம் திருவரங்கனோடு சென்ற அணிமணி, ஆபரணங்களும், இதர திரவியங்களும் தொண்டைமான் காட்டில் பறிபோய்விடவே, எஞ்சிய வெறும் பரிவாரங்களோடும், வெறும் பல்லக்கோடும் ஊர்வலம் மேலே செல்ல ஆரம்பித்தது.



சத்திரத்தை விட்டுக் காலையில் புறப்பட்ட குலசேகரன் குழுவினர், அன்று பகல் முழுவதும் நடந்து மாலையில் மற்றொரு சத்திரத்தை அடைந்தார்கள்.

அந்தச் சத்திரத்தில் அவர்கள் இரவு உண்டுவிட்டு உறங்கச் சென்ற வேளையில், குலசேகரனும் குறளனும் வாசந்திகாவை ஒரு பெண் என்று காட்டிக் கொள்ள விரும்பாததால் சிறிதளவே இடைவெளி விட்டு அருகருகே படுத்துக் கொண்டார்கள்.

மூவரும் நடுநிசிக்கு மேல் நன்றாக உறங்கும் போது வாசலில் எழுந்த ஏதோ ஒரு அரவத்தினால் குலசேகரன் தூக்கம் கலைந்தது.

குறளனை அவன் மெதுவாக எழுப்ப, பிறகு இருவருமாக மெள்ளச் சாளரம் வழியே வெளியே பார்த்தார்கள். அங்கே சில ஆட்கள் குதிரைகளோடு வந்து நிற்பதையும், சத்திரத்தின் அம்மையார்ப்பாட்டி ஒரு விளக்குக் கூட்டைத் தூக்கிச் சென்று அவர்களை வரவேற்பதையும் அவர்கள் பார்க்க நேர்ந்தது.

குதிரைகளிலிருந்து இறங்கின ஆட்களில் ஒருவன், "பாட்டி சத்திரத்தில் பெண்கள் யாரேனும் தங்கி இருக்கிறார்களா?" என்று கேட்க, "யாரும் இல்லையே!" என்று அம்மையார்ப் பாட்டி கூறினாள். "நாங்கள் கொஞ்சம் பார்க்கிறோமே, பாட்டி!" என்று கூறி எல்லோரும் கீழே குதிக்க, அவ்வளவில் அதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த குறளன், குலசேகரனை இழுத்துக் கொண்டு உள்ளே ஓடினான்.





"ஐயா, இவர்கள் டில்லி வீரர்கள்!" என்று குறளன் கூற, "அதெப்படி உனக்குத் தெரியும்?" என்று குலசேகரன் கேட்க, "ஐயா டில்லிப் படையின் குதிரைகளுக்குச் சூடு போட்டிருப்பார்கள். இந்தக் குதிரைகளுக்கும் இடது தொடைகளில் சூடுகள் இருக்கின்றன" என்று குறளன் மறுமொழி கூறினான்.

பிறகு இருவரும் வாசந்திகாவை எழுப்பி, விஷயத்தைச் சொல்லி, கூடத்தின் ஓரத்தில் நிற்கும் குதிர் ஒன்றின் மூடியைத் திறந்து அதற்குள் அவளை இறக்கி மறைத்து வைத்தார்கள்.

பிறகு இருவரும் முன்பு போல் தம் இடங்களில் படுத்திருக்க, சூழ்ந்தியைக் கொளுத்தி வந்த ஐந்து வீரர்கள் அவர்களை எழுப்பிச் சோதித்து விட்டு எந்தவிதச் சலனமும் இல்லாமல் மேலே போனார்கள்.

எல்லா இடமும் தேடிய வீரர்கள், பிறகு பாட்டியிடம் வந்து, "பாட்டி, ஒரு பெண், அழகான பெண், நாட்டியமாடும் பெண், அவள் திருவரங்கத்தில் இருந்து தப்பி ஓடிவிட்டாள். அவளை எப்படியாவது நாங்கள் பிடிக்க வேண்டும். அந்தப் பெண் இந்தச் சத்திரத்துக்கு வந்தால் உடனே பிடித்து வைக்க வேண்டியது உங்கள் பொறுப்பு!" என்று கூறினான்.

"ஆகட்டும் அப்பா" என்று பாட்டி பயந்து கொண்டே கூற, உடனே அவர்கள் யாவரும் விடை பெற்று வெளியேற அடுத்த கணங்களில் குதிரைகள் புறப்பட்டு ஓடும் குளம்பொலிகள் உள்ளே வந்து பொழிந்தன.

இரவின் மீதிப் பொழுதைத் தூக்கமின்றிக் கழித்த குலசேகரன் குழுவினர் காலை இளம் இருட்டில் எழுந்து, மெள்ள சத்திரத்தைவிட்டு வெளியே வந்து, சாலையின் ஒதுக்குப்புறத்தில் செல்ல யத்தனிக்கையில், "நில்" என்று ஒரு குரல் கேட்டது.

அவர்கள் அசையாமல் நிற்க, ஒரு ஆள் அவர்களை நெருங்கி நெருங்கிவந்து கொண்டிருந்தான்.

பக்கத்தில் வரவர, அந்த ஆள் டில்லி வீரன்தான் என்று தெரிந்து கலங்கிப் போய் அவர்கள் நிற்க, அவனும் வாசந்திகாவை நெருங்கி அவளை ஆழப் பார்வையால் பார்த்து, "இவர் எந்த ஊர்ச் சாமியார்?" என்று கேட்டான்.

"தென்திருப்பேரை" என்று குறளன் சொல்ல, குபீர் என்று சிரித்த அந்த வீரன், "தென்திருப்பேரைச் சாமியாரா இவர்?" என்று கூறிவிட்டு, இன்னும் அருகில் போய் சடேலென்று, "வாசந்திகா!" என்று அழைத்தான்.

"ஆ" என்று மறுமொழி கூறுவது போல் தன் நினைவு இல்லாமல் கூவினாள் வாசந்திகா.

# 25

அந்த டில்லி ஒற்றனைப் பார்த்தாலே புதுமையாக இருந்தது. அரைத் தாடி வைத்துக் கொண்டு, உடலில் நீள அங்கி அணிந்திருந்தான். நாற்பதுக்கு மேல் வயது இருக்க வேண்டும். அவனது கன்னத்தில் பெரிய மச்சம் இருந்தது. தமிழ் பேசுவது கொச்சையாக இருந்தாலும் அவன் அதைச் சரியாகப் பேசினான்.

குலசேகரக் குழுவினர் மூவரையும் தள்ளிக் கொண்டு போன அவன், 'பகபக'வென்று சிரித்து, "ஐயாக்களா! குதிருக்குள்தான் வாசந்திகாவைப் பதுக்கி வைத்தீர்கள். ஆனால் அவள் உடலிலிருந்து எழும் நறுமணத்தைப் பதுக்கவில்லையே! கூடத்தை எல்லாம் நிறைத்துவிட்டதே! அதைக் கவனிக்கவில்லையே நீங்கள்! போகட்டும். தந்திரத் தொழிலுக்கு நீங்கள் புதியவர்கள். இப்போது மறுமொழி கூறுங்கள்! எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டான்.



உடனே குலசேகரன், "இராமேசுவரம் போகிறோம். வெகு நாளைய பிரார்த்தனை!" என்று கூற, மீண்டும் சிரித்த அந்த மச்சக்காரன், "புனித யாத்திரையா? போக வேண்டியதுதான். ஆனால் இந்தப் பெண்ணைச் சாமர்த்தியமாக எங்கள் கூடாரத்திலிருந்து தூக்கிக் கொண்டு இப்படி ஓடுவது தான் புனித யாத்திரையா? இதற்கு என்ன தண்டனை தெரியுமா?" என்று ஓங்கி குரல கொடுக்க, குலசேகரனும் குறளனும் மறுமொழி கூறத் தெரியாது நின்றார்கள்.

"இது பெரும் குற்றம். எங்கள் உபதளபதி ஒரே கோபத்தில் இருக்கிறார். நாலா திசைகளிலும் இவளைத் தேடி ஆட்களை அனுப்பியிருக்கிறார்" என்றான் அவன்.

பிறகு வாசந்திகாவின் அருகில் வந்து, "உன் மீது தளபதிக்குக் கோபம் மட்டும் அல்ல! ஆசையும் கூட! நீ எங்கே ஓடினாலும் பிடித்து வர வேண்டும் என்று உத்தரவு!" என்று கூறினான்.

அவர்கள் மூவரும் கலங்கிப் போய் நிற்க, உடனே மச்சக்காரன், "பயப்படாதீர்கள்! உங்கள் பங்கில் கடவுள் இருக்கிறார். நான் உங்களைக் காட்டிக் கொடுக்கப் போவதில்லை" என்று கூறினான்.

மூவரும் சிறிது சந்தேகத்தோடு பார்க்கவே, "ஏன் சஞ்சலப்படுகிறீர்கள்? நான் கூறுவதெல்லாம் உண்மை தான். உங்களைத் தப்புவிக்கவே இப்படி ஓரமாக அழைத்து வந்தேன். எனக்கு ஏன் இவ்வளவு இரக்கம் என்று கேட்பீர்கள். சொல்கிறேன். சென்ற தலைமுறையில் எங்கள் குடும்பம் தென்பகுதியில் தான் இருந்தது. பிறகு நாங்கள் டில்லிக்குப் போனோம். அங்கே போய் நாங்கள் வாழ்வுக்காக மதம் மாறிய வர்கள். இன்னும் எங்கள் தாயும் மூத்த சகோதரிகளும்

தெலுங்கில்தான் பேசுவார்கள். நான் டில்லி உளவாளியாக வந்தாலும் உங்களது சமயத்தையும், பழக்க வழக்கங்களையும் நன்கு மதிக்கிறவன். உண்மையில் இது எனக்கு ஒரு புனித யாத்திரை! எங்கள் பழைய தாயகத்தைக் காண வந்திருக்கிறேன். தவிரவும் உங்களது அரங்கநாதரைப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை. என் தாயார் எவ்வளவோ சொல்லியிருக்கிறார். வேறு பல காரணங்களும் உண்டு. நான் உங்களைப் போக விடுகிறேன். இப்படியே மறைந்து போய் விடுங்கள்! ஆனால் ஒன்று. உங்கள் அரங்கன் இப்போது எங்கே இருக்கிறார்? அதை மட்டும் சொல்லுங்கள்! நான் சௌகரியப்பட்டால் வந்து பார்க்கிறேன். சௌகரியப் படுவதென்ன? நிச்சயம் வந்து பார்க்கிறேன்!" என்றான்.

"ஐயா! அரங்கன் எங்கு போயிருக்கிறார் என்று எங்களுக்குத் தெரியாது. நாங்களும் அவரைத்தான் தேடுகிறோம்" என்று குலசேகரன் கூற மீண்டும் சிரித்த மச்சக்காரன், "நல்ல பிள்ளைகள் அப்பா நீங்கள்! விடாக்கண்டர்களாக இருக்கிறீர்களே! போங்கள்! போங்கள்! நான் உங்களைக் காட்டிக் கொடுக்கப் போவதில்லை. ஆனால் அரங்கனுக்கும் அவன் சொத்துக்களுக்கும் எப்போதும் ஆபத்து உண்டு. வாசந்திகாவுக்கும் ஆபத்து உண்டு. நாட்டின் நாலா பக்கத்திலும் உளவாளிகளும், படைவீரர்களும் போயிருக்கிறார்கள்! ஆகவே போய் அரங்கனைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள்! போங்கள்! தயங்க வேண்டாம்! நான் உங்களை ஏதும் செய்யமாட்டேன்" என்றான்.

குலசேகரனும் மற்றவர்களும் யோசித்தவாறே மேலே நடந்து போனார்கள். ஆனால் முக்காலும் நம்பிக்கையில்லாமல் அடிக்கடி திரும்பிப் பார்த்தவாறே சென்று, காதவழியும் தாண்டி ஒரு காட்டுச் சுனையின் பக்கலில் அமர்ந்து, விடாய் தீர்த்துக் கொள்ளும் அளவில், குறளன் ஆன்வன் குலசேகரனை நோக்கி, "ஐயா, மச்சக்காரன் ஒரு சூழ்ச்சிக்காரன் போல



இருக்கிறதே! நம்மை முன்னே செல்லவிட்டுப் பின்னே தொடர்ந்து வருகிறானோ என்னவோ! திருவரங்கனின் ஊர்வலத்தைக் கண்டுபிடிக்க இது ஒரு தந்திரமாக இருக்குமோ?" என்று கூறினான்.

குலசேகரனும் யோசித்திருந்து, "அப்படிக் கூட இருக்கலாம்" என்று தெரிவித்து, "இனி நாம் சுற்றுவழிகளிலேதான் செல்லவேண்டும்! நேராகச் செல்லக் கூடாது" என்று கூறவே, பிறகு அவர்கள் கிளைப்பாதைகளில் இறங்கி அங்கங்கே திசைகளை மாற்றிக் கொண்டே சென்றார்கள்.

மறுநாள் மாலையில் குலசேகரனுக்கு ஆயாசமும் களைப்பும் மேலிட்டுவர, "இனி என்னால் நடக்க முடியாது" என்று கூறி கீழே அமர, அவ்வளவில் தீ ஜுவாலைபோல் ஒரு காய்ச்சல் அவனைத் தொற்றிக் கொண்டது.

பிறகு குறளன் ஒரு இருக்கையைக் கண்டு பிடித்துவர, அவனும் வாசந்திகாவுமாகச் சேர்ந்து குலசேகரனை அங்கு போய் ஒரு வைக்கோல் மெத்தை மீது வசதியாகப் படுக்க விட்டார்கள்.

அந்த இருக்கை பழைய காரை வீடாக இருந்தது. அதனுள் இருந்த வயதான தம்பதியர் அங்குள்ள சந்தனக் காட்டுக்குக் காவலாக இருந்து வந்தார்கள்.

இரவில் வாசந்திகா குலசேகரனுக்குப் பணிவிடை செய்வதைப் பார்த்து அந்த வயதான மனிதர் தம் கிழவியைப் பார்த்து, "மனைவி என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும்! என்னமாகப் பணிவிடை செய்கிறாள் பார்!" என்று சொல்ல, அதையே நினைத்து இரவு முழுதும் மகிழ்ந்திருந்தாள் வாசந்திகா.

மறுநாள் வீட்டு மூதாட்டிக்கு உதவி செய்யும் வகையில் வாசந்திகா தன் இடுப்பில் செப்புக் குடம் ஏந்தி

அருகிலுள்ள நீரோடைக்கு நீர் கொண்டு வரச் சென்றாள்.

அங்கே தெள்ளிய பளிங்கு நீர், கூழாங்கற்கள் இடையே "தென்னா தெனா" என்ற புலம்பலாய் முரல, அதன் கரையில் மெய்மறந்து அமர்ந்த அவள் நீர்ச்சுழிகளையும், குமிழ்களையும் பார்த்துச் சொக்கியவாறு இருந்து விட்டாள்.

அந்நேரத்தில் சிலுசிலுவென்று சந்தனக் காட்டிலிருந்து மென்மையான மணம் தவழ்ந்து வர, நெடிதுயர்ந்த மரங்கள் மீது பட்சி ஜாலங்கள் யாவும் மெச்சும் ராகங்களில் குரல் இசைக்க, ஓடைக்கு அப்பால் புள்ளி மான்களின் கூட்டம் மருண்டு கொண்டே துள்ளி ஓட, அந்த மனோ ரம்யமான காட்சிகளில் தன்னை முழுமையாக இழந்த வாசந்திகா, தனது இள இதயத்தில் வசந்த காலத்து மெல் அரும்புகள் பொல்லென்று ஆயிரங்களாய் அரும்பி விரிவதை உணரலானாள்.

அதுவரை கோவில்களிலும், சபைகளிலும் மாளிகைக் கூடங்களிலும் அவள் நூற்றுக்கணக்கான முறை அபிநயித்த விரகதாபப் பாடல் ஒன்று விருட்டென்று அப்போது விசுவரூபம் எடுத்தாற்போல் எழுந்தது.

பொன்னைக் கொண்ட உரைகல் மீதே,
நிறம் எழ உரைத்தாற் போல்,
உன்னைக் கொண்டு என் நா அகம்பால்*
மாற்றின்றி உரைத்துக் கொண்டேன்;
உன்னைக் கொண்டு என்னுள் வைத்தேன்
என்னையும் உன்னுள் இட்டேன்
என் அப்பா! என் இருடீகேசா!
என் உயிர் காவலனே!



* நா அகம்பால் - நாவினில்

பெரியாழ்வார் திருமொழியில் வரும் இந்த பாசுரத்தை முன்பெல்லாம் உள்ளக் கிளர்ச்சி இல்லாமல் அபிநயித்தவள், இப்போது அதன் உள் அர்த்தத்தில் தொனிக்கும் விரகத்தை, தாபத்தை, ஆற்றாமையை அறிந்து கொள்ளும் வகையில் அவள் மனத்துள் ஒரு ரகசியக் கதவு படீரென்று திறந்து கொள்ளவே, கண்ணில் நீர் ததும்ப, அதரங்கள் உலர்ந்து வெளுக்க, தேகம் எல்லாம் காந்தலுடன் எரிய, அப்பாடலில் எழும் தாபத் தழலின் சொரூபமாகவே அவள் மாறிவிட்டாள்.

அந்தத் தீய்ந்த நிலையில் சிறிது நேரம் இருந்தவள், பிறகு சுருட்டி எழுந்து, குடத்துள் நீரைக் கவ்விக் கொண்டு, காரை வீட்டை நோக்கிப் போக, அங்கே வாயிலில் மூன்று குதிரைகள் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு நின்றாள்.

எங்கேயாவது மறைந்து கொள்ளலாமா என்று நினைக்கும் அளவில், வெளியில் குதிரை ஏற வந்த மூவீரர்களும் அவளைப் பார்த்து விட்டார்கள். அவர்களுள் சற்று வயதானவனும், கொடுவாள் போன்ற மீசை வைத்து ஆயுதங்கள் தரித்திருந்தவனும், ஆஜானு பாகுவாக இருந்தவனுமான ஒரு வீரன் அவளைப் பார்த்து விட்டுத் திக்பிரமித்து அவளையே சிறிது நேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். வாசந்திகா இனி வருவது வரட்டும் என்ற தைரியத்துடன் செப்புக் குடத்தில் குளிர்நீர் ஆர்ப்ப, தந்த நிறமான வலது கையைக் கீழே துவளவிட்டுத் துழாவிக்கொண்டு அடிமேல் அடி எடுத்து வைத்து வாயிற்புறம் வந்து, கவிழ்ந்த பார்வைகள் படபடக்க, வீட்டுக்குள் ஏகி மறைந்து விட்டாள்.

அச்சமயத்தில் திண்ணையில் அமர்ந்திருந்த குலசேகரன் அந்த ஆஜானுபாகுவை நோக்கி, "சேனாதிபதி! இவள் என் மனைவி!" என்று துணிச்சலுடன் அழுத்தத்துடனும் கூற, "ஓகோ! அப்படியா?" என்று உடனே சிலிர்த்த சேனாதிபதி, குதிரைமீது ஒரே தாவலில் ஏறி, விருட்டென்று ஒரே இழுப்பில் மிக ஒய்யாரமாகத் திரும்பி வெகு அலட்சியத்துடன் வீட்டுக்குள் ஒரு பார்வையை எறிந்துவிட்டு டகடக டகடக என்று குதிரையை ஓட்டினான்.



அவர்கள் போன சிறிது நேரத்தில், குலசேகரனும் குறளனும் வாசந்திகாவை அவசரப்படுத்திப் புறப்பட வைத்து, வீட்டுக்காரர்களிடம் அவசரமாக விடைபெற்று வெளியே வந்து, சாலையில் சிறிது தூரம் சென்று பிறகு, காட்டுப் பாதைக்குள் இறங்கினார்கள்.

சற்றுதூரம் சென்ற பிறகு, "சுவாமி! ஏதாவது ஆபத்தா என்ன? வந்தவர்கள் யார்?" என்று ஆவலுடன் வாசந்திகா கேட்க, "அவர் வாணாதிராயனின் சேனாதிபதி!" என்று குலசேகரன் கூறினான்

உடனே அவள், "யார் இந்த வாணாதிராயன்?" என்று கேட்க, குலசேகரன் உடனே "பாண்டியன் வம்சம் உன்னதமாய் இருந்த நாட்களில் அவர்களுக்கு உட்பட்டு இருந்த குறுநில மன்னர்கள் இந்த வாணாதிராயர் பரம்பரையார். இந்தப் பகுதிகள் அவர்கள் ஆட்சிக்கு உட்பட்டவை, நாம் திருவரங்கத்திலிருந்து வருகிறோம் என்று தெரிந்து நம்மை விட்டுவிட்டார்கள். இந்த சேனாதிபதி துர்க்குணம் நிரம்பியவன். அவன் உன்னைப் பார்த்த பார்வை எனக்குப் பிடிக்கவில்லை. அதனால்தான் உடனே கிளம்பி விட்டோம்" என்று கூறினான்.

ஒரு வாரம் சென்றபிறகு பல இடங்களில் சுற்றி, வழி தடுமாறி, கடைசியில் ஒருவாறு அரங்கன் போன பாதையை கண்டுபிடித்து, அதை அனுசரித்து நடந்து ஒரு மாலையில் அரங்கன் ஊர்வலத்தைப் போய்ச் சேர்ந்தார்கள் அவர்கள்.

ஊர்வலத்தைப் பார்க்கும் அளவில் அது பாதியாகக் குறைந்துப் போய், பெருமாளது திருபெட்டகங்கள்

யாவும் காணாதிருக்கக் கண்டு, அருகிலிருந்து பரிசனங்களை ஏதென்று காரணம் கேட்டார்கள்.

பெட்டகங்கள் பறிபோனதையும், அதனால் ஊழியர்களில் முப்பது பேர்களைப் பிள்ளை உலகாசிரியர் திருப்பி அனுப்பி விட்டதையும் கேள்விப்பட்ட அவர்கள் துடிதுடித்து, "பெருமாளுக்கு இப்படி எல்லாம் நேருமா?" என்று மிகவும் வருத்தப்பட்டார்கள்.

பிறகு உலகாசிரியர் உடம்பு சரியில்லாமல் படுத்திருப்பதை அறிந்து, அவர் பக்கவில் போய் குலசேகரனும் குறளனும் நின்றார்கள். மெல்ல எழுந்து அமர்ந்த உலகாசிரியர் அவர்களை வரவேற்று, "அப்பா! குலசேகரா திருவரங்கத்தை விட்டு அந்நியப் படைகள் போய்விட்டனவா?" என்று ஆவலுடன் கேட்டார்.

"இல்லை சுவாமி! அங்கேயே அவர்கள் நிரந்தரமாகத் தங்கிவிட்டார்கள்" என்று கூறி நடந்த விருத்தாந்தங்களை எல்லாம் சொல்ல, ஆசிரியரும் திரு உள்ளம் வெதும்பி திருமுகம் கலங்கித் துக்கத்தோடு இருந்து விட்டார்.

பிறகு திருவரங்கன் பல்லக்கின் அருகில் குலசேகரன் செல்ல, அவன் வரவு கண்டு, "ரங்கா, ரங்கா.." என்று ராஜகிளி சோகமாக மிழற்றி, இறக்கைகளைச் சடசடத்தது. அதைப் பார்த்த அவன் கண்ணில் நீர் படர்ந்து நின்றது.

பல்லக்கின் சித்திரத் துணிகள் கிழிந்திருப்பதையும் அதன் விதானங்கள் அங்கங்கே அடிபட்டு உடைந்திருப்பதையும் எல்லாப் பகுதிகளிலும் தூசியும் மண்ணும் ஒட்டி ஒளி மங்கி இருப்பதையும் கண்டு மிகவும் நொந்து, "பெருமாளுக்கு விளக்கு வைக்கவில்லையா?" என்று கேட்க, "எண்ணெய் ஏது ஐயா, திரி ஏது? எல்லாவற்றிற்கும் பணம் ஏது?" என்று அருகில் உள்ளவர்கள் மறுமொழி கூறினார்கள்.



அவன் கலங்கி நிற்கும் வேளையில், ஒருவர் பல்லக்கின் திரையைத் திறந்து பெருமாளின் தரிசனம் காண்பிக்க, அவரைப் பார்த்த அவன் திடுக்கிட்டு அப்படியே உறைந்து விட்டான்.

முடியில் தங்கக் கிரீடமும், நெற்றியில் வைரத் திருநாமமும், செவிகளில் கர்ணப் பூக்களும், திருமார்பில் ரத்தின ஆரங்களும் பொன் சரங்களும், கை, கால் இடைகளில் பொன் ஆபரணங்களும் பூண்டு அதிகோலாகலமாகக் காட்சி தரும் அவர், எந்த நகைகளும் ஆபரணங்களும் இல்லாமல், கையகலத் துணி உடுத்தி பருத்திப் பூணூலைக் குறுக்கிட்டுக் கொண்டு வெறுமையில் வெறுமையாய், எளிமையிலும் எளிமையாய்க் காட்சி அளித்தார்.

குலசேகரன் விக்கித்து நிற்கும் போதே, "பெருமாள் காலையிலிருந்து அமுது செய்யவில்லை. அமுதுக்கு எதுவும் இல்லை" என்று அருகிலுள்ளார் கூற, அப்படியே தாக்குண்டது போல் அதிர்ச்சியுடன் நின்றான் குலசேகரன்.

# 26

**கா**லையிலிருந்து பெருமாளுக்கு அமுது படைக்கவில்லை என்ற செய்தி குலசேகரனைத் துக்கத்தில் ஆழ்த்தியது. பெருமாள் அமுது செய்ய வில்லை என்றால் பரிசனங்கள் யாவருமே பட்டினி என்பது பொருளாகிவிட்டது.

திருவரங்க நகரில் அரங்கன் வாழ்ந்த வாழ்க்கை, அவனது நினைவுக்கு வந்தது. அரங்கன் ஒரு தெய்வம் மட்டுமல்ல அரசரும் கூட!

திருவரங்க நகரையும் அதைச் சூழ்ந்துள்ள எண்ணற்ற ஊர்களையும் அவர் பரிபாலித்து வந்தார்.

*இறையிலிகளாக அவருக்கு எத்தனையோ கிராமங்கள் சொந்தமாக இருந்தன. நஞ்செயும் புஞ்செயுமாக எவ்வளவோ விளைநிலங்கள் வருடா வருடம் அவரது திருவைப் பெருக்கிக் கொண்டே வந்தன.

பக்தர்களும், யாத்திரிகர்களும், அரசர்களும் காணிக்கைகளாக வேறு பொருள்களைக் குவித்து வந்தார்கள்.

எனவே இவ்விதம் செல்வங்கள் அவரிடமும் பெருகிக் கொண்டே வந்ததால் அவரது வாழ்க்கை தெய்வீகத்தோடு மட்டும் அல்லாமல் ராஜரீகத்தோடும் நடந்து வந்தது.

அவரது நித்தியப்படிக் காரியங்களைக் கவனிப்ப தற்காக ஏராளமான பரிசனங்கள் இருந்தார்கள். பத்து கொத்துகளாகப் பிரிந்து அவர்கள் கணக்கு எழுதுவதில் இருந்து கோவிலைச் சுத்தம் செய்வது வரை எல்லா ஊழியங்களையும் செய்து வந்தார்கள்.

இந்தக் காரணங்களால் திருவரங்கன் கோவிலே ஒரு குட்டி சமஸ்தானமாக இருந்து வந்தது.

இப்படிப்பட்ட சீர்களோடும் சிறப்புகளோடும் வாழ்ந்து வந்த திருவரங்க அரசர், இன்று தமது சமஸ்தானத்தைத் துறந்து, அணிமணி திரவியங்களை எல்லாம் இழந்து அன்றாட வாழ்க்கைக்கான அமுது படிக்குக் கூட வழியில்லாமல் திண்டாடுகிறாரே என்ற நினைவு குலசேகரன் மனத்தில் ஆழமாகத் தைத்துக் கொண்டது.

அந்த நினைவில் அவன் வெதும்பி, 'கூர குலோத்தமதாச நாயனார்' அருகில் சென்று, "சுவாமி! அருகில் ஏதாவது கிராமம் இருந்தால் பார்க்கக் கூடாதோ?" என்ன, அவரும் உடனே, "அப்பா, குலசேகரா! பார்ப்பதில் கஷ்டமில்லை, ஜனங்களும்

* இறையிலி - வரி இல்லாத நிலங்கள்



பொங்கி வந்து அரங்கனுக்கு வேண்டிய உதவிகளை எல்லாம் செய்வார்கள். ஆனால் திருவரங்கன் இந்தக் காட்டில் தங்கி இருக்கும் விஷயம் வெளியே பரவி விட்டால் ஆபத்து ஆயிற்றே! இந்த ஊர்வலத்தையே குறியாகத் தேடிக்கொண்டு படைவீரர்கள் அலைகிறார் களாமே!" என்று கூறினார்.

"அதுவும் சரிதான் சுவாமி! காட்டில் கனி வகைகள் கூடக் கிடைக்கவில்லையா?" என்று கேட்க, நாயனாரும், "அப்பா! இங்கே கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆலும் வேலும், கருவேலும், உடை மரங்களும் தென்படு கின்றன, பழமரங்களுக்கு எங்கு செல்வோம்?" என்று கூறினார்.

சற்றைக்கெல்லாம் இருட்டிவிடவே, யாவரும் மௌனமாக அமர்ந்து ஒரு பொதுவான சோகத்தில் அமிழ்ந்திருக்கும் வேளையில், அரங்கன் பல்லக்கின் அருகிலிருந்து ஒரு மிருதுவான பாடல் தவழ்ந்து வந்தது.

இரவின் வழிபாட்டை மானசீகமாகக் கற்பனை செய்து கொண்டு, வாசந்திகா தனது கடமையைக் கைவிடாதவள் போல், அரங்கன் முன் நின்று அவரை உகப்பிப்பதற்காக அபிநயித்து பாடிக் கொண்டிருந்தாள்.

தவழ்ந்து வரும் குழந்தை போல் அந்தப் பாடல் அங்கும் இங்குமாய் ஊர்ந்து தன் முகத்தை தூங்கத் தூங்கக்* காட்டி முறுவலித்து அங்குள்ளவர்கள் யாவரையும் இணைத்துப் பரவசமாக்கியது.

பாடல் முடிந்ததும் வாசந்திகா, நேராகக் குலசேகரன் அருகில் வந்து, "சுவாமி என்னிடம் நகைகள் இருக்கின்றனவே! அவற்றைக் கிராமத்தில் விற்று அமுதுபடிக்கான பொருட்களை வாங்கி வரலாமே!" என்று கூறி, தனது மார்பு அணிகளையும் இதர ஆபரணங்களையும் கழற்றிக் கொடுத்தாள்.

* தூங்கத் தூங்க - அசைய அசைய



அவற்றை வாங்கிப் பார்த்த குலசேகரன், அவற்றில் யவன நாட்டு செம்பொன்* நாணயங்கள் பல இருப்பதைக் கண்டு திடுக்கிடவே, அவளை நோக்கி, "இவை செம்பொன் ஆயிற்றே! உன் அம்மா இவற்றைப் பெரிதும் பாதுகாப்பாளே! இவை போனது தெரிந்தால் மிகவும் வருத்தப்படுவாளே!" என்று கூறினான்.

உடனே வாசந்திகா, "சுவாமி! நாங்கள் யாவரும் அரங்கனுக்கு அர்ப்பணிக்கப்பட்டவர்கள் அன்றோ! அப்படியிருக்கும் போது எங்கள் உடைமைகள் யாவும் கூட அரங்கனது சொத்துக்கள் அன்றோ! அவருக்குச் சோதனை நேர்ந்துள்ள காலத்தில் இந்த உடைமைகளைத் தியாகம் செய்வது என் கடமை அன்றோ! என் தாயார் இங்கே இருந்தால்கூட அவளும் நான் செய்ததைத்தான் செய்திருப்பாள். பாவம்! அவள் எங்கே இருக்கிறாளோ? என்ன கஷ்டப்படுகிறாளோ?" என்று கூறினாள்.

பிறகு குலசேகரன் பல முறை மறுத்தும், வாசந்திகா அந்த நகைகளை வற்புறுத்திக் கொடுக்கவே, அவற்றைப் பெற்றுக் கொண்டு, குறளனையும் அழைத்துக் கொண்டு, அருகில் கிராமம் ஏதாவது இருக்கிறதா என்று தேடிக் கொண்டு புறப்பட்டான் அவன்.

இப்போது திருவரங்க நாச்சியாருடன் புறப்பட்டு, மேற்கு நோக்கிச் சென்ற பரிவாரங்களைப் பற்றிச் சிறிது கூற வேண்டியிருக்கிறது. திருவரங்கக் கோவிலில் நாச்சியாருக்கு என்று தனி சன்னிதி, தனி மரியாதைகள், அரங்கர்க்கு நிகரான வழிபாடுகள் யாவும் அவருக்கு உண்டு.

*கலகம் நடந்தபோது, நாச்சியாரின் மூலவரான கல்

* யவன நாட்டு செம்பொன் - ரோம் நாட்டு நாணயங்கள் அவை. அவற்றில் உள்ள தங்கத்திற்காக அவை அந்நாளில் நம் நாட்டுக்கு தருவிக்கப்பட்டு வந்தன.

* கலகம் - படை எடுப்பைக் குறிக்கிறது

விக்கிரகத்தை சன்னிதிக்கு அருகிலுள்ள தோட்டத்தின் வில்வ மரத்தடியில் புதைத்து வைத்தார்கள்.

உற்சவ விக்கிரகத்தை ஒரு பல்லக்கில் எழுந்தருளப் பண்ணி, நகை, நட்டு, திரவியங்களை எல்லாம் பெட்டகங்களில் அடைத்து, துணையாகப் பரிவாரங் களைக் கூட்டி, இந்த ஊர்வலத்தை மேற்கு நோக்கிப் போக வைத்திருந்தார் பஞ்சுகொண்டான்.

இந்த ஊர்வலத்தில் பின்னர் அழகிய நம்பியும் அவரது ஆட்களும் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று ஏற்பாடாகி இருந்தது.

திருவரங்கக் கோட்டை விழுந்த பின், அழகிய நம்பியும் அவனுடன் எஞ்சிய ஆட்களும் பஞ்சு கொண்டான் திருஉடலை வடக்காவேரிக்கு எடுத்துப் போய் தகனம் செய்த பிறகு மேற்கு நோக்கிப் புறப்பட்டனர்.

இரண்டு நாட்கள் பிரயாணம் செய்த பிறகு ஊர்வலத்தைக் கண்டுபிடித்து, அங்குள்ள பரிவாரத்தார் அனைவருடன் ஆலோசித்து ஊர்வலத்தை நேராக திருப்பதிக்கு எடுத்துச் சென்று விட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான்.

அதன் பிறகு ஊர்வலம் மேலே செல்ல, சாலை மார்க்கமாய்ச் செல்லாமல், அழகிய நம்பி பிறகு காட்டு மார்க்கமாகவே அதை அழைத்துப் போனான்.

வழியில் தென்பட்ட இரு கள்ளர் கூட்டத்தினரிடம் நல்ல வார்த்தை சொல்லித் தப்பித்து, மூன்று தினங்கள் பயணம் செய்து, நான்காம் நாள் மாலையில் காட்டு நடுவில் செல்லும்போது, அங்குள்ள மரங்களிடையே ஏதோ இயக்கங்கள் இருப்பதைப் பார்த்து, பழைய கள்வர் கூட்டத்தினர் திரவியங்களை அபகரிக்கும் எண்ணத் துடன் ஊர்வலத்தை விடாது தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைச் சூசகமாக அறிந்து உடனே ஆலோசனையில் இறங்கி, அந்தக் கணமே எல்லோரும் பிரிந்து ஓட வேண்டும் என்ற தீர்மானத்திற்கு வந்தான்.



யார் யார் எந்தத் திசை செல்லவேண்டும் என்று முடிவெடுப்பதற்குள், குதிரைகளின் குளம்பொலிகள் தொலைவில் கேட்கவே, அது அந்தக் கள்வர் தலைவர்கள்தான் என்று அறிந்து உடனே, தீவர்த்தி களின் நெருப்பால் அங்குள்ள காய்ந்த புதருக்கெல்லாம் தீ வைத்து, அவை கிளப்பிய புகையில் அவரவர் நினைத்த திசைக்கு ஓடலானார்கள்.

ஆபரணங்கள் நிறைந்த மூன்று பெட்டகங்களைத் தொடர்ந்து சென்ற அழகிய நம்பி, ஒரு நாழிகை அளவு ஓடி, ஒரு கணவாயின் அருகில் போய் சேர்ந்தான்.

மூன்று பெட்டகங்களைத் தூக்கி வந்த ஆறு ஊழியர்களும் அவர்களுக்கு மாற்றுத் தோள் கொடுப்பதற்காக வந்த மூன்று உபரி ஊழியர்களும் களைத்துப் போய் கீழே அமர்ந்து அன்றைய இரவை அங்கே கழிக்க விரும்ப 'அப்படியே ஆகட்டும்.' என்று அழகிய நம்பியும் அங்கேயே தங்கிவிட்டான்.

இரவில் தூக்கமில்லாது புரளும் வேளையில், ஏதோ கசமுசவென்று குரல்கள் கேட்க, திடுக்கிட்டு எழுந்து சத்தம் வந்த திசை நோக்கிச் சென்ற அழகிய நம்பி, அங்கே அந்த ஆறு ஊழியர்களும் அந்தப் பெட்டகங் களைத் தாங்களே அபகரித்துச் செல்லச் சதி பேசுவதை அறிந்து திடுக்கிட்டான்.

அவன் என்ன செய்வது என்று முடிவு செய் வதற்குள், அந்த அறுவரும் உருவிய வாளோடு ஓடி வருவதைக் கண்டு, சடக்கென விரைந்து மற்ற மூவரையும் எழுப்பிய நம்பி உடனே சதிகாரர்களுடன் சண்டை செய்வதற்குச் சித்தமானான்.

வந்த அறுவரும் அவர்களைத் தாக்கத் தொடங்கிய தும், உடன் அழகிய நம்பி வாளைச் சுழற்றவே, முறையாகச் சண்டை பயிலாத அந்த ஊழியரில் ஒருவன்

இறக்க, மற்றவர்கள் கையிலும், உடம்பிலும் காயம்பட்டு தப்பித்தோம், பிழைத்தோம் என்று ஓடிவிட்டார்கள்.

பிறகு நம்பியும், இதர மூவர்களும் விடியும்வரை விழித்திருந்து, வெளிச்சம் வந்ததும் பெட்டகங்களைச் சிறிது தூரம் தூக்கிக் கொண்டு போய், பெரிய குழி ஒன்று வெட்டி, அதனுள் அவற்றை இறக்கி, மண் இட்டு மூடி, தழை, கொடிகளை மேலே பரப்பி அடையாளத்திற்காகக் கற்களைக் கொண்டு வைத்து, பிறகு கிழக்குத் திசை நோக்கிப் பிரயாணம் செய்யத் தொடங்கினார்கள்.

இனி, திருவரங்க நகரில் நடந்த சில முக்கியமான நிகழ்ச்சிகளை இங்கே கவனிக்க வேண்டி இருக்கிறது.

திருவரங்கன் சொத்துக்களுக்கான வேட்டையில் மும்முரமாக இறங்கி டில்லிப் படை உபதளபதி, அந்தச் சொத்துக்கள் போன இடத்தை அறிந்து வர ஒற்றர்களை ஏவியது மட்டுமல்லாமல், கோவிலுக்குள்ளும் நிறையப் பணியாட்களை அனுப்பி அங்கங்கே இடித்தும் தோண்டியும் பார்க்கக் கட்டளை இட்டிருந்தார்.

அந்தப் பணியாட்கள், உள்ளே சென்று கண்ட இடங்களை எல்லாம் இடித்தும் பெயர்த்தும் நாசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கைப்பட்டு நிறையச் சிற்பங்கள் மூளிகளாகவும் முண்டங்களாகவும் மாறிக் கொண்டிருந்தன.

இவைகளை எல்லாம் கேள்விப்பட்ட ஒரே ஒரு ஜீவன் வெகுவாகத் துடித்துக் கொண்டிருந்தது. அந்த ஜீவன் திருவரங்கத்திலிருந்து தப்பிக் காவிரியின் எதிர்க் கரையிலுள்ள அழகிய மணவாளபுரம் என்ற கிராமத்தில் பதுங்கி வாழ்ந்து கொண்டிருந்த அம்சகலா என்பவள் தான்.

அவளும், இன்னும் அநேக எம்பெருமான் அடியார்களும் யுத்தம் முடிவடையும் நேரத்தில் தந்திரமாகத் தப்பி, அந்த ஊருக்குப் போயிருந்தார்கள்.



அப்படிப்போனவர்களில் வாசந்திகாவின் தாயாரும் ஒருத்தி.

இந்த அம்சகலா என்பவள் திருவரங்க நகருக்கு நேர்ந்தவற்றையெல்லாம் கேள்விப்பட்டு மிகவும் கொதிப்பு அடைந்திருந்தாள்.

அவளது உயிர் தோழி விசாலினி என்பாள் உலுக்கானின் வாளால் காயப்படுத்தப்பட்டு, அதனால் புண்ணில் புரையோட்டம் கண்டு மூன்று தினங்களுக்குள் இறந்து விட்டிருந்தாள்.

இவை எல்லாமாகச் சேர்ந்து அவளைக் கொதிப் படையச், செய்திருந்ததால், அந்த உணர்ச்சிமயமான அம்சகலா, பழிக்குப் பழி வாங்கத் திட்டம் செய்து இருந்தாள். இதற்காக ஒரு நாள் காலையில் வெகு அழகாகத் தன்னை அலங்கரித்து, கோவிலின் மூன்றாவது வாயிலின் முன்னிலையில் அதி ஒய்யாரமாக அவள் நின்று கொண்டிருந்தாள்.

அப்போது பணியாட்கள் வேலைகளைக் கவனிப்ப தற்காக உப-தளபதி தனியாகக் குதிரைமீது ஏறி அங்கே வரவே, அவரைக் கண்டு வெட்கித் தலைகுனிந்து ஓரமாக நடந்து, அதே நேரத்தில் தன் உடலின் வசீகரப் பகுதிகளை எல்லாம் அவரை ஈர்க்கும் வண்ணம் காட்டி, கடைக்கண் விழியைச் சுழற்றியவாறு சென்றாள் அவள்.

கண்டதுமே அவள் மீது மையல் கொண்ட உப-தளபதி, குதிரையை விட்டுக் கீழே இறங்கி அவளுடனே உள்ளே நடந்து செல்ல, அவள் ஒரு ஓரத்தில் நின்று அவரைப் பார்த்து முறுவலிக்க, அவருக்குப் போதை தலைக்கேறி அவளைத் தொடர்ந்து கொண்டே சென்றார்.

மறைவான ஒரு பகுதி வந்ததும், விருட்டென்று உப-தளபதி அவள் கையைப் பிடிக்க, அவள் அதை விடுவித்து மேலும் சாகசங்கள் செய்து, அவரைத் தனியாக அழைப்பது போல் ஒரு கோபுர நிலைக்கு

அழைத்துச் சென்று அதன் படிகளில் விறுவிறு என்று ஏறலானாள்.

கோபுரத்தில் மூன்று நிலைகளிலும் அவன் பின் தொடர ஏறி, "அதோ! எங்கள் கடவுள்! எங்கள் சொத்து!" என்று ஜாடை காட்டிச் செல்லவே உப-தளபதியும் ஆர்வத்துடன் அவள் காட்டிய திசையைப் பார்ப்பதற் காகக் கோபுர துவாரத்தின் வழியே, வெளியே எட்டிப் பார்க்க, அவ்வளவில் அவள் ஒரு வஞ்சகத்துடன் அவனை ஒரே உந்தலில் கீழே தள்ளினாள்.

காற்றில் ஊடுறுவிக் கொண்டு கீழே கல் தரையில் படீர் என்று விழுந்தார் உப-தளபதி.



# 27

கோபுரத்திலிருந்து தள்ளப்பட்ட உப-தளபதி கீழே விழுந்தார். தலை சுக்கு நூறாகியது. அவர் விழுந்த வேகத்திலேயே இறந்தார்.

கோபுர துவாரத்திலிருந்து அதைக் கவனித்த அம்சகலா கோபக் கனலாய் ஒரு பார்வை பார்த்து, அதிக வெம்மையாக ஒரு பெருமூச்சு விட்டாள். அவள் முகம் கல்லாகியது. அவள் கண்கள் இரத்தக் களறியாகின.

படபடக்கும் நெஞ்சத்துடன் அவள் கோபுரத்தின் எதிர் துவாரத்திற்கு ஓடினாள். அங்கிருந்து பொன் மயமான திருவரங்க விமானத்தைத் தரிசித்தாள். வெய்யிலில் உயிர் சிலும்புவதுபோல் அது தகதகத்துக் கொண்டிருந்தது.

"ரங்கநாதா!" என்று கூவினாள்.

விமானத்தில் உள்ள பரவாசு தேவரின் உருவம் அவளைப் பார்த்துப் புன்னகை புரிந்தது.




"ரங்கநாதா! உன் அடியவர்கள் நூற்றுக்கணக்கில் மடிந்தார்கள். உன் திருவெல்லாம் பாழாகியது. உன் வாழ்க்கையே வெறுமையாகியது. திருவிழாவின் ஒலிகள் நிறைந்த இந்நகரத்தில் பெரும் இழவே இன்று ஒலிக்கிறது. உன் அடியவளாகிய எனக்கு இதை எல்லாம் பொறுக்க முடியவில்லை. ஆகவே வஞ்சம் தீர்க்க முனைந்தேன். "ரங்கநாதா, ரங்கநாதா, ரங்கநாதா!" என்று கூவினாள்.

பிறகு கைகளைச் சேர்த்து மேலே குவித்து, கண்களை மூடித் தியானித்து, இமை வழியே கண்ணீர் சோர, உடம்பெல்லாம் வியர்வை வழிய, "ரங்கநாதா, என்னை ஏற்றுக்கொள்!" என்று உரத்துக் கூவிக் கோபுர உயரத்திலிருந்து கீழே படீர் என்று குதித்தாள்.

கோபுர வாயிலில் உப-தளபதி இறந்திருக்கும் செய்தி விரைவில் டில்லிப் படைகளுக்குப் பரவியது. படையின் அதிகாரிகளும் வீரர்களும் ஓடிவந்து பார்த்தார்கள்.

உப-தளபதி இறந்த மர்மம் அவர்களுக்குப் புரியவில்லை. உயரத்திலிருந்து விழுந்திருக்க வேண்டும் என்று ஊகித்து, கோபுரத்தின் மீதேறி சுற்றிவரப் பார்த்தார்கள். தடயம் ஏதும் அவர்களுக்குக் கிடைக்கவில்லை.

ஏதோ ஒரு காரணத்திற்காகக் கோபுரத்தின் மேல் அவர் ஏறி இருக்க வேண்டும். பிறகு எதேச்சையாகத் தவறி விழுந்திருக்க வேண்டும் என்று அவர்கள் தீர்மானித்தார்கள். அவரது உடலை அன்றே அடக்கம் செய்ய ஏற்பாடு செய்தார்கள்.

மறுநாள் காலையில் வடகாவேரியின் மறு கரையில் உள்ள அழகிய மணவாள கிராமத்திலிருந்து சிங்கப்பிரான் என்பார் அதி சம்பிரமங்களுடனும்,

மேளதாள வாத்தியங்களுடனும் பரிவாரக் கும்பல் களுடனும் திருவரங்க நகரை நோக்கிப் புறப்பட்டார். அந்தக் கிராமத்தில், திருவரங்கக் கோயிலுக்குச் சொந்தமான நில புலன்களையும், கோ சாலையையும் கவனிக்கும் காணியாளராக வேலை பார்த்தார் அவர்.

ஆற்றைக் கடந்த அவர், அரங்க நகர்க்குக் கிழக்கே தண்டு இறங்கி இருந்த டில்லிப் படையின் கூடார எல்லைக்குப் போய்ச் சேர்ந்தார்.

அங்கே வெளியே காத்திருந்து, அதிகாரிகளின் அனுமதி பெற்ற பின்னர் உள்ளே விநயத்தோடு நடந்து சென்றார். இரண்டாவது உப-தளபதியைக் கண்டு, பலமுறை சேவித்து எழுந்து, கைகட்டி வாய் புதைத்து, கன்னங்களில் போட்டுக் கொண்ட அவர், "பிரபோ! டில்லி அரசனின் அதிவீர அதிபராக்கிரம, அதி சாமர்த்தியத் தளபதி அவர்களே, தங்கள் கீர்த்தியும், குணமும், நேர்மையும், வாய்மையும், சீலமும் ஞானமும் எண்திசையும் பரவி இருக்கின்றனவே, அடியோர்கள் அழகிய மணவாளக் கிராமவாசிகள் வந்தனம் தெரிவிக்கிறோம், தங்களது தர்மம் மிகுந்த ஆட்சிக்குக் கீழ் என்றும் நிரந்தரமாக வாழ்ந்து வர விரும்புகிறோம். மன்னாதி மன்னரான தாங்கள் எமக்குக் கிடைத்ததே பெரும் பாக்கியம். தங்களது குடை நிழலில் நாங்கள் என்றும் இருக்க விரும்புகிறோம். இவை எல்லாம் எங்கள் மாமன்னருக்கு யாம் கொண்டு வந்துள்ள காணிக்கைகள்" என்று கூறி பரிசில்கள் யாவற்றையும் அவர் முன்பாகப் பரத்தி வைத்தார்.

முத்துக்கள், செம்பவழங்கள், நீலங்கள், வைரங்கள், பொன் ஆபரணங்கள், வெள்ளித் தட்டங்கள், கிண்ணங்கள், கும்பாக்கள், குடங்கள், பட்டுத்துணிகள், யவனக் காசுகள், யாவும் பளபளவென்று ஜொலித்துக் கூடாரத்தின் உட்புறத்தை வெளிச்ச வெள்ளத்தில் ஆழ்த்தின.

கூடை கூடையாய்த் தானியங்கள், கனி வகைகள், அம்பாரங்களாய்க் காய்கறிகள், கிழங்குகள், பருப்பு



வகைகள், வெல்லக் கட்டிகள், மிளகு பாக்கு வகைகள் யாவும் அங்கே குவிக்கப்பட்டன.

இவை தவிர, வெளியே, வெள்ளை நிறத்தில் பத்துக் குதிரைகளும், கொம்புகளுடன் இரு யானைகளும், ஒரு ஒட்டகையும் பரிசிலாக நிறுத்தப்பட்டிருந்தன.

இவையெல்லாவற்றையும் பார்த்த உப-தளபதி ஆச்சரியத்திலும் சுய பெருமையிலும் மூழ்கிவிட்டார்.

"பிரபோ! எங்களைப் பரிபாலிக்க வேண்டும். காத்து இரட்சிக்க வேண்டும்" என்று சிங்கப்பிரான் பலமுறை வீழ்ந்து வணங்கி எழுந்தார்.

இன்னும் உப-தளபதி தமது வாய் திறவாமல் இருப்பதைப் பார்த்து சிங்கப்பிரான், "பிரபோ! அடியோங்களுக்கு ஆணை இட வேண்டும். வாயிலில் இன்னும் எம் காணிக்கைகள் இருக்கின்றன!" என்று கூறி வாயில் நோக்கி 'டொக் டொக் டொக்' என்று கை கொட்டினார்.

"ரீம் ரீம் ரிக ரிக" என்று இசையினை எழுப்பியவாறு கழுத்தில் தொங்கும் வீணைகளுடன் பலர் உள்ளே வர, அவர்களுக்குப் பின்னால் பெரிய பெரிய யவன நாட்டுக் கொண்டைக் குடங்களைத் தூக்கிக் கொண்டு பரிவாரங்கள் உள்ளே வந்தார்கள்.

இடுப்பளவு உயரமுள்ள குடங்களைக் கீழே வைத்து அதன் மூடிகளை அவர்கள் திறந்துவிடவே, கம்மென்ற வாசனையுடன் உயர் ரகத் திராட்சை மது தன்னை வெளியே அறிமுகப்படுத்திக் கொண்டது.

ஆதனத்திலிருந்து துள்ளி எழுந்த உப-தளபதி வெகு ஆர்வத்துடன் ஒரு குடத்தின் அருகில் வந்தார்.

உள்ளே உற்றுப் பார்த்து மதுவின் வாசனையிலும், அதன் இரத்தச் சிவப்பிலும் மனதைப் பறி கொடுத்து, "யார் நீ! இவைகளையெல்லாம் எங்கிருந்து

கொணர்ந்தாய்?" என்று பாதி சந்தேகத்திலும், பாதி மகிழ்ச்சியிலும் கேட்டார். அவர் பேசியதை ஒரு ஒய்சள வீரன் தமிழ் வார்த்தைகளாக்கிக் கூறினான்.

"பிரபோ! அடியேன் சிங்கப்பிரான்! பாண்டிய நாட்டுக் காயல் துறைமுகத்தில் வந்திறங்கும் யவன நாட்டு மது வகை இவை! தங்களுக்கென்றே கொண்டு வந்திருக்கிறோம். எங்கள் அற்பக் காணிக்கை" என்று கூறினார் சிங்கப்பிரான்.

"இது உண்மையான மதுதானா? நம்பலாமா?" என்று கேட்டார் உப-தளபதி

"பிரபோ! எள்ளளவும் சந்தேகம் வேண்டாம். தங்களது அதி விசுவாசப் பிரஜைகள் நாங்கள்!" என்றார் சிங்கப்பிரான்.

"அப்படியானால் நீயே முதலில் அருந்து!" என்று கூறினார் உப-தளபதி.

"சுவாமி! அப்படிப்பட்ட பழக்கம் எங்களுக்குக் கிடையாதே? மது என்பது மன்னருக்கு உரியது அன்றோ! நாங்கள் ஏழைகள், பருகலாமோ?" என்று கூறினார் சிங்கப்பிரான்.

"பருகலாமே, நீ பருகித்தான் ஆகவேண்டும்!" என்று உப-தளபதி கட்டளையிட, ஒரே ஒரு சிராங்காய் அளவு கிண்ணத்தில் ஊற்றித் தயங்காமல் விழுங்கினார் சிங்கப்பிரான். பிறகு அவர் மற்றொரு கிண்ணத்தை எடுத்து வந்து அதில் மதுவை ஊற்றி உப-தளபதிக்குக் கொடுத்தார்.

உப-தளபதி ஒரு மடக்குக் குடித்து விட்டு கண்ணைச் சிமிட்டி நாக்கைச் சப்பிட்டு, "ஆகாகா!" என்று சிரித்து, நீள ஆடை குடைபோல் சுழலத் திரும்பி "வாருங்கள்" என்று மற்ற அதிகாரிகளைக் கூப்பிட்டார்.



ஒவ்வொருவரும் ஒவ்வொரு கிண்ணம் குடித்து ஆதனங்களில் அதி உல்லாசமாக அமர்ந்தார்கள்.

அப்போது "வழி, வழி" என்று குரல் கேட்க, அதைத் தொடர்ந்து சில பரிவாரங்கள் சூழ ஒரு மை விழி நங்கை அழகாக உள்ளே வந்தாள்.

அவள் உண்மையில் அழகிய மணவாள கிராமத்தைச் சேர்ந்த எம்பெருமானடியாள்.

ரூபவதியான அவள் தன் முகத்திரையை நீக்கி, தனது சந்தன மயமான முகத்தையும், திராட்சையை நிகர்த்த கரிய விழிகளையும் வெளியே காட்டினாள்.

"பிரபோ!" என்று அப்போது குரலை எழுப்பினார் சிங்கப்பிரான். "அழகிய மணவாளத்தின் ராணி இவர்! தங்களுக்கு வந்தனம் செலுத்துவதற்காக வந்திருக்கிறார்" என்று கூறினார்.

"ராணி?" என்று வியப்பை எழுப்பினார் உப-தளபதி. "இவள் ஒரு ராணியா? எந்த நாட்டுக்கு?" என்று கேட்டார் அவர்.

"எங்கள் அழகிய மணவாளம் என்ற கிராமத்துக்கு இவர் தான் ராணி! குறுநில ராணி! எங்கள் கிராமங்களில் இப்படிப் பல குறுநில அரசிகள் உண்டு." என்று கூறினார் சிங்கப்பிரான்.

பிறகு அவர், "மகாராணி! வருக! வருக!" என்று அந்தப் பெண்ணை அழைத்துப் போய் உப-தளபதிக்கு முன்னால் நிற்க வைத்தார்.

அரையில் சிறு மணிகள் புரள, மார்பின் கச்சுகளில் பொன் பொட்டுகள் ஊசிபோல் துணுக்கு ஒளிகளைச் சிதறி விட, அந்த ராணி தாழக் குனிந்து உப-தளபதிக்கு வணக்கம் தெரிவித்தாள்.

உப-தளபதி மிக்க மகிழ்ச்சி அடைந்து அவளுக்கு ஆதனம் கொடுத்து அமர்த்தினார்.

ராணி, சிங்கப்பிரானை அழைத்துக் காதோடு ஏதோ சொல்ல, உடனே அவர், உரத்த குரலில் "பிரபோ! அழகிய மணவாளம் மகாராணி தங்கள் சமூகத்தைத் தரிசித்ததை நினைத்து மகிழ்ச்சி அடைகிறார். அவரது காணிக்கைகளை ஏற்றுக் கொண்டதற்கும் மகிழ்ச்சி அடைகிறார். தங்கள் பரிபாலனத்தின் கீழ் முழுச் சம்மதத்துடன் இருக்க விரும்புகிறார்" என்று தெரிவித்தார்.

அதற்கு உபதளபதியும் தமது மகிழ்ச்சியைத் தெரிவித்துவிட்டு, "ராணி நமது பாதுகாப்பில் வாழ விரும்புவதைக் கேட்டு மகிழ்கிறேன், ராணி அடிக்கடி நம் படைவீட்டுக்கு வந்து போகலாம்!" என்று தமது எண்ணத்தைக் குதூகலத்துடன் கூறினார்.

பிறகு ராணி சிங்கப்பிரானிடம் ஏதோ கூற, அவரும் "பிரபோ! திருவரங்கன் கோவிலுக்கு ஏராளமான நிலங்கள் உள்ளன. எங்கள் கிராமத்தின் சொத்துக்கள் கூட திருவரங்கனுக்குத் தான் சொந்தமானவை. அவற்றின் நிர்வாகம் எல்லாம் தங்களது படை எடுப்பால் நின்று விட்டது. ஆகவே அந்த வகையில் நிர்வாகம் நடத்தும்படி அழகிய மணவாள ராணி என்னைக் கேட்டுக் கொள்கிறார். தாங்கள் அனுமதித்தால் அடியேன் அந்த நிர்வாகங்களைச் செய்வதுடன் தங்களுக்குக் கப்பமாக அரிசி முதலிய எல்லா விளைச்சல் பொருள்களையும் அளந்து விடுகிறேன். மகாராணியின் விருப்பம் இது!" என்றார் சிங்கப்பிரான்.

"அவ்வளவு தானே! தாராளமாகச் செய்யுங்கள்!" என்றார் உப-தளபதி.

உடனே சிங்கப்பிரான், "பிரபோ! அப்படியானால் ஒரு வேண்டுகோள்! தானியங்கள் வருஷம் முழுவதும் விளைந்து வருவதால், அவ்றைச் சேர்த்து வைப்பதற்கான பெரிய பெரிய கொட்டாரங்கள் கோவிலில்தான் இருக்கின்றன. அங்கேயே அவற்றைச் சேமித்து வைத்து, கணக்கு வழக்குகளை அடியேன் கவனித்துக் கொள்கிறேன்" என்று கூறினார்.



"அப்படியே கவனி! ஆனால் ஒரு நிபந்தனை! தினமும் நமது பொக்கிஷதாரரிடம் வந்து உமது நடவடிக்கைகளை அறிவிக்க வேண்டும்" என்று கூறினார் உப-தளபதி.

"ஆகட்டும், பிரபோ!" என்றார் சிங்கப்பிரான்.

ஒரு நாழிகைக்கு அப்பால் கையில் ஏட்டு ஓலைகளையும் எழுத்தாணியையும் எடுத்துக் கொண்டு சிங்கப்பிரான் திருவரங்கன் கோவிலுக்குள் வெகு சுவாதீனமாக நுழைந்தார்.

கிழக்கு வாயிலைக் கடந்து உள்ளே போனபோது, அங்கே துளசிச் செடிகள் வளர்ந்திருந்த பகுதியிலிருந்து, "ஆங்! ஆங்!" என்று தீனமான குரல் எழுவதைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றார்.

புதர்களைத் தமது வலிமையான கைகளால் விலக்கி அவற்றின் இடையே புகுந்து சென்று உள்ளே போய்ப் பார்த்தார்.

அப்போது திடீரெனத் தெரிந்த ஒரு காட்சி அவர் இரத்தத்தை உறைத்தது.

அரணுக்கு சமீபத்தில், துளசிச் செடிகளுக்குக் கீழே உள்ள தரையில் இரத்தம் சேறாக வடிந்திருக்க அதன் நடுவில் அம்சகலா குற்றுயிரோடு துடித்துக் கொண்டு இருந்தாள்.

"இதென்ன அநியாயம்!" என்று நினைத்து, அருகில் சென்று பார்த்தார் சிங்கப்பிரான்.

அவளது ஒரு காலும் கையும் மடிந்து முறிந்து இருந்தன. தோளிலும் மார்பிலும் சதைப்பகுதி பிய்த்திருந்தது. கழுத்தில் நரம்புகள் தெறித்திருந்ததால் அவள் தலை ஒரு பக்கம் சாய்ந்தே கிடந்தது.

கண்ணீர் பொங்கும் விழிகளுடன் அவளருகே விரைந்த சிங்கப்பிரான் சோகத்துடன் கீழே குனிந்து, "அம்மா அம்சகலா! குழந்தாய்! அம்சகலா!" என்று தழுதழுக்கும் குரலில் அழைத்து அவள் பக்கத்தில் அமர்ந்து கொண்டார்.

அவளது முகத்தில் உறைந்திருந்த இரத்தத்தைத் துடைத்து, மொய்க்கும் ஈக்களை விரட்டி, துணி இல்லாப் பகுதிகளை எல்லாம் தம் உத்தரியத்தால் மூடி ஆதுரத்துடனும், இரக்கத்துடனும், நெஞ்சிழிந்த சோகத்துடனும், "அம்சகலா! அம்மா அம்சகலா!" என்று அரற்றினார் சிங்கப்பிரான்.

அதல பாதாளத்தில் உயிரின் கடைசித் துடிப்புகளை வைத்திருந்த அம்சகலா, ஆதரவான குரல் ஒன்றைக் கேட்டு, மிகவும் பிரயாசையுடன் தன் இமைகளைப் பிரித்து வெளி உலகைப் பார்த்தாள்.

சிங்கப்பிரானைப் பார்த்ததும் பார்வையில் மட்டும் புன்னகை தோன்றியது.

"குழந்தாய் அம்சகலா! கண்ணே அம்சகலா! அவசரப்பட்டு விட்டாயே! நீ ஒருத்தி மட்டும் உயிரைத் துறப்பதால் திருவரங்க நகர் மீண்டு விடுமா? ஒரு நாட்டு மக்களின் முழுமையான தியாகத்தினால்தானே அதைத் திரும்பப் பெற முடியும்! அதைப் புரியாது அவசரப்பட்டு விட்டாயே!" என்று கூறினார் அவர்.

அம்சகலாவின் விழி ஸ்தம்பிப்பதைப் பார்த்து, "கண்ணே அம்சகலா! பேசம்மா! ஒரு வார்த்தை பேசு! ஒரே ஒரு வார்த்தை பேசு!" என்று சொல்லி அவளது தலையை மெள்ள எடுத்துத் தமது மடியில் ஆதுரத்துடன் வைத்துக் கொண்டார் அவர்.



"சு..வா.." என்று கூறிக் குழறி நிறுத்தினாள் அவள்.

"என்னைத் தெரிகிறதா அம்சா! என் பெயர் சொல்லு!" என்றார் அவர்.

"சி.. ங்க..ரான்!" என்று குழறினாள் அவள்.

"சரியாகச் சொன்னாய்! அம்சா! சொல்! உனக்கு என்ன நேர்ந்தது? நீ என்ன செய்தாய்?" என்று கேட்டார் அவர்.

மெள்ள மெள்ள அம்சகலா பேசலானாள், வார்த்தைகளைச் சிதைத்தும், குழறியும், பாதியை விழுங்கியும் ஒரு அரை குறை ஓவியம்போல் தன் கதையை வெகுநேரமாகத் திக்கித் திணறி வரைந்து காட்டினாள் அவள். அதைச் சொல்வதற்காகவே அவளது உயிர் தன் கடைசி வலிமை முழுவதையும் உபபோகிப்பது போல் தோன்றியது.

விட்டு விட்டுச் சொல்லப்பட்டாலும் கதை முழுவதையும் அம்சகலாவின் தியாகத்தையும் கேட்டுக் கொண்ட சிங்கப்பிரானின் கண்களில் அருவிபோல் நீர் வழிந்து ஓடியது.

"அம்மா அம்சகலா! உன் தியாகம் பெரிதம்மா! காவியத்தில் எழுதவேண்டிய தியாகம் அல்லவா, அது! வீர சுவர்க்கத்தில் உனக்கு நிச்சயம் இடம் உண்டு! குழந்தாய் அம்சா! இப்படி உடலை நொறுக்கிக் கொண்டு வீழ்ந்து கிடக்கிறாயே! உனக்கு ஏதாவது ஆசை இருந்தால் சொல்லு அம்மா! அதை நிறைவேற்றி வைக்கிறேன்" என்றார் சிங்கப்பிரான்.

"சுவா. . ." என்று குழறினாள் அம்சா. விரைவாக மூச்சு விட்ட அவள், "சு. .வா. .மி..! நான். .இற..ப்..பேன்! வேண். .டு. .கோள்! நான். . .இறந். . .ததும். . . எனக்கு

அரங்கன். . . .கோவி. . . .லில். . . .இருந்து மாலையும் பரிவட்டமும். . .கொண்டு. . .சூட்..டுங்கள்! திரு. . . மடைப்.. பள்ளியில். . . இருந்து. . . வாய்க்கரிசி. . போடுங்கள்! திரு .. மடைப் பள்ளியில். . இருந்து. . . கொள்ளி. . . கொண்டு. . வந்து. . என்னை. . எரியுங். . கள்! என்னை. . . மட்டு. . மல்ல! என் இனத்தார் . யார். . இறந்தாலும் அப்படிச் செய்யவேண்டும். . . . வேண்டுகோள்!" என்று தத்தித் தடுமாறிக் கூறிக் கண்களாலேயே அவரிடம் ஒப்புதல் கேட்டாள் அம்சகலா.

விழி பொங்கிய சிங்கப்பிரான், "குழந்தாய், அம்சா! மிகவும் அற்பமானதுதான்! ஆனால் அழகான ஒரு விருப்பத்தைக் கேட்டாயே! இதனாலேயே நீ அரங்கனின் உண்மையான அடியவள் என்பதை நிரூபித்துவிட்டாயே அம்மா! தியாகவல்லி! உன் ஆசையை நிறைவேற்றி வைப்பேனம்மா! சத்தியம்" என்று கூறி அவளது இரத்தக் களறியான நெற்றியை மெள்ள வருடிவிட்டார் அவர்.

அம்சகலாவின் திறந்த கண்களில் புன்னகை தவழ்ந்தது. அவளது உடலின் வேறு எந்தப் பகுதியின் மீதும் அவளுக்கு ஆதிக்கம் இல்லை. எனவே பார்வையில் மட்டும் நன்றியையும் புன்னகையையும் அவள் காட்ட வேண்டி வந்தது.

பிறகு மெள்ள மெள்ள அந்தக் கண்கள் அதே புன்னகையிலேயே உறைந்து நின்றன.

அம்சகலா அமர உலகுக்குள் புகுந்தாள்.*

---

* திருவரங்கக் கோவில் மீண்டும் பழைய உன்னதத்தை அடைந்த பிறகு, அம்சகலாவின் கடைசி விருப்பத்தைக் கோவிலார் நிறைவேற்றி வைத்தார்கள். தேவதாசிகள் இறந்த போதெல்லாம் அவர்களுக்குக் கோவில் மடைப் பள்ளியிலிருந்து வாய்க்கரிசியும், கொள்ளியும் கொண்டு போடப்பட்டன. இந்தப் பழக்கம் பின்னர் வெகுகாலம் வரை தொடர்ந்து நடந்து வந்தது.



# 28

அம்சகாலாவின் உயிர் நீங்கியதும், சிங்கப் பிரானின் கண்கள் குளமாகின. இமை மூடி, கைகளைக் கூப்பினார். துவய மந்திரத்தைப் பலமுறை உச்சரித்தார். பிறகு உத்தரியத்தால் அவள் உடலை மூடினார்.

சில கணங்கள் சோகத்தில் ஆழ்ந்திருந்தார். பிறகு தெளிந்து எழுந்து ஆகவேண்டியதைக் கவனிக்கலானார். அந்தப் புனித உடலை எடுத்துப் போகலாமா என்று எண்ணினார்.

ஆனால், அது தவறு; கோபுரத்திலிருந்து அம்சகலா விழுந்து இறந்திருப்பது தெரிந்தால், அவள்தான் உபதளபதியைக் கொன்றாள் என்பது தெளிவாகிவிடும் அதனால் எத்தனையோ ஆபத்துக்கள் விளையும். எனவே, உடலை அகற்றாமல் இருப்பதுதான் நல்லது என்று அவர் நினைத்தார்.

பிறகு துளசிப் புதர்களை விலக்கி அவர் வெளிவந்தார். கோவிலை நோக்கி மெள்ள நடந்து சென்றார். பிரகாரங்கள் யாவும் பாழாகியிருந்தன. இறந்தவர் சடலங்கள் யாவும் அகற்றப்பட்டிருந்தாலும் ஒரு துர்நெடி உள்ளே வீசிக்கொண்டிருந்தது. மதில்மேல் கூட்டங்களாகக் கழுகுகள் அமர்ந்திருந்தன. அவற்றின் அகவல்கள் சமயங்களில் பயங்கரமாகக் கேட்டுக் கொண்டிருந்தன.

கோவிலுக்குள் பல சந்நிதிகள் பாழாகியிருந்தன. ஆனால் மூலவர் சந்நிதி மட்டும் பாழ்படவில்லை. அதன் முன்னால் கற்சுவர் இருந்ததால் படை வீரர்கள் பார்வையிலிருந்து அது தப்பிவிட்டது.

மூலவர் சந்நிதியின் முன் தரையில் விழுந்தார் சிங்கப்பிரான். "ரங்கநாதா! ரங்கநாதா!" என்று அரற்றினார். "நித்திப்படி கைங்கர்யம் எதுவும் நடத்த

முடியவில்லையே நாங்கள் பாவிகள் ஆகிவிட்டோமே! பொறுத்தருள வேண்டும்" என்று புலம்பினார்.

சிறிது நேரம் முசித்துக் கிடந்து, பிறகு தேறி எழுந்து வெளியே வந்தார்.

அம்சகலாவின் கடைசி ஆசையை நிறைவேற்றுவது தான் அவரது தலையாய பணி! அவள் கேட்டவை நான்குதான்! திருமாலை, திருப்பரிவட்டம், வாய்க்கரிசி, கொள்ளிக் கட்டை! எவ்வளவு சாதாரணமானவை இவை! ஆனால் இந்த நேரத்தில் எவ்வளவு குதிரைக் கொம்பானவை! இவற்றை எங்கே போய்த் தேடுவது?

எனினும் அவர் மனம் தளரவில்லை. நேராக மடைப்பள்ளிக்குச் சென்றார்.

அதன் இருட்டான உட்பகுதியைப் பார்வையிட்டார்.

அரங்கனுக்கு தினமும் புதுப்புது மண் பாண்டங்களில்தான் அமுது சமைப்பார்கள்.

அந்தப் பாண்டங்களைத் தேடும் அளவில் அவையாவும் உடைந்திருப்பது தெரிந்தது.

பார்வையால் துழாவிக்கொண்டே செல்லும் போது, ஒரு இடத்தில் அடுப்பின் ஓரமாக பளிச்சென்று சிரிப்பது போல் ஏதோ தென்பட்டது. பக்கத்தில் சென்று பார்த்தால் அரிசி! சிதறிக் கிடந்த ஒரே ஒரு பிடி அரிசி!

"ரங்கா!" என்று கூவிக்கொண்டு அவைகளைத் திரட்டி எடுத்தார். இடுப்புத் துணியில் முடிந்து கொண்டார்.

பிறகு அடுப்பில் தீய்ந்து போயிருந்த இரண்டு விறகுக் கட்டைகளைத் தேடி எடுத்தார்.

அவைகளையும் முடிந்து கொண்டு வெளியே வந்தார்.



நேராக ஆற்றங்கரைப் பக்கம் சென்று குடி படைகள் வாழும் பகுதிக்குச் சென்றார். கோயில் துணிமணிகளை வெளுத்துக் கொடுப்பதற்கு என்று ஈரங்கொல்லிகள் தனியாக இருந்தார்கள். அவர்களிடம் சென்று பெருமாளின் பரிவட்டம் ஏதாவது இருக்கிறதா என்று கேட்டார்.

நல்லவேளை! ஒரே ஒரு பரிவட்டம் கிடைத்தது. அதைப் பயபக்தியுடன் வாங்கிக் கொண்டார்.

பிறகு அவர் நேராக தமது ஊர் போய்ச் சேர்ந்தார்.

பகல் முழுவதும் காத்திருந்து, இரவு வந்ததும் தமது ஆட்கள் நால்வரை அனுப்பி, திருவரங்கன் கோவிலுக்குள் கிடந்த அம்சகலாவின் உடலை எடுத்துவர ஏற்பாடு செய்தார்.

நடு இரவுக்கு மேல் அந்தக் காரியம் நிறைவேறியது.

மறுநாள் அதிகாலையில் அவர் பெரிய கூட்டத்தோடு அம்சகலாவின் உடலை எரிக்க எடுத்துச் சென்றபோது, அவளது ஆசையில் ஒன்றே ஒன்று மீதி இருந்தது.

பெருமாளின் திருமாலையைத் தனக்கு சூட்ட வேண்டும் என்று அவள் கோரியிருந்தாள்.

அதற்கு எங்கு போவது?

சிங்கப்பிரானுக்கு ஒரு யோசனை தோன்றியது. அருகிலுள்ள சோழங்கநல்லூர் எனும் கிராமத்தில் திருவரங்கக் கோவிலுக்குச் சொந்தமான ஒரு பிருந்தாவனம் இருந்தது. பசுக்களை வளர்ப்பதற்காக ஏற்பட்ட பிருந்தாவனம் அது. அதற்கு அதிபதியாக ஆநிறை மேய்த்த பெருமாள் அவ்வூர்க் கோவிலில் குடி கொண்டிருந்தார். அந்தப் பெருமாளை இராமாநுஜரே அங்கே பிரதிஷ்டை செய்திருந்தார். அவ்வளவு விசேஷம் பொருந்திய பெருமாளின் திருமாலைகளை அவர் எடுத்துவர ஏற்பாடு செய்தார்.

"அம்மா! அம்சகலா! உனது ஆசைகளை எல்லாம் நிறைவேற்றிவிட்டேன் அம்மா!" என்று சொல்லி, விதிமுறைப்படி எல்லாக் காரியங்களையும் குறைவரத் தாமே நடத்தி, அவளது உடலைத் தகனம் செய்தார் சிங்கப்பிரான்.

**வா**சந்திகா கொடுத்த யவன நாணயங்கள் அந்த நாளில் மதிப்பு மிகுந்தவை. ரோம் நாட்டிலிருந்து அவை பண்டமாற்ற முறையில் தமிழ்ப் பிரதேசங்களில் தருவிக்கப்பட்டன. நாணய முறையில் அவை புழங்கி விடாமல் இருக்கும் வண்ணம், அவைகளின் மேற் புறத்தில் ஒரு வெட்டு போட்டிருப்பார்கள். இந்த நாணயங்களிலுள்ள தங்கத்தின் மதிப்புக்காக அவற்றை அந்நாளைய மக்கள் பெரிதும் விரும்பினார்கள்.

முப்பது பேர் அடங்கிய ஒரு கூட்டத்துக்கு பல நாட்களுக்கான உணவுப் பொருள்களை ஒரு நாணயத்தின் மதிப்புக்கே வாங்கிவிடலாம்.

அத்தகைய ஒரு நாணயத்தை அருகிலுள்ள கிராமத்தில் மாற்றி, அரங்கனது கூட்டத்திற்கான அனைத்துப் பொருள்களையும் குலசேகரன் வாங்கி வந்தான்.

அப்பொருள்களை வைத்துக் கொண்டு வழி நடந்த ஊர்வலத்தார்கள், பல கிராமங்களைக் கடந்து ஒருநாள் மாலையில் புதிய கிராமப்புறம் ஒன்றை அடைந்தார்கள்.

உணவுப் பொருள்கள் குறைந்து விட்டதால் அவற்றை வாங்கிவருவதற்காகப் புறப்பட்ட குலசேகரன் அந்தக் கிராமத்தை அடைந்து பெரும் வணிகர் ஒருவரிடம் மற்றொரு யவன நாணயத்தை விற்க முயன்றான். அப்போது "திருவரங்கா!" என்று ஒரு குரல் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான்.

அந்தக் குரலை எங்கேயோ கேட்டதுபோல் அவனுக்குத் தோன்றியது.



யாராக இருக்கும் என்று மூளையைக் குழப்பிக் கொண்டே பார்த்த போது, எதிர் வரிசையில் பல வீடுகளுக்கு அப்பால் ஒரு வீட்டில் ஒருவன் பிச்சை எடுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

"திருவரங்கா!" என்று கூறினான், மீண்டும் அந்தப் பிச்சைக்காரன். அவன் உடம்பு முழுவதும் பல கந்தல் துணிகளால் மூடப்பட்டிருந்தது. எதிர்த் திசையை நோக்கி இருந்ததால் அவன் முகம் தெரியவில்லை.

குலசேகரன் மெள்ள வீதி வழியாக நடந்தான் நடு வீதியில் சென்று அந்தப் பிச்சைக்காரனைப் பார்த்த போது, "திருவரங்கா!" என்று அவன் கூவிக் கொண்டு மேலே நகர்ந்து அடுத்த வீட்டுக்குப் போய் கொண்டிருந்தான்.

அப்போது அவனது கன்னப் பகுதி தெரியவே, "இவன் அந்த மச்சக்காரன் அல்லவோ!" என்று சொல்லித் திடுக்கிட்டான் குலசேகரன். உடனே அவனுக்கு ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

"ஓகோ, இவன் திருவரங்கன் ஊர்வலத்தைத் தேடி வருகிறானோ! ஏற்கெனவே அது இருக்கும் இடத்தைக் கண்டுபிடித்துவிட்டானோ! அல்லது இருக்கும் இடம் தெரியாமல் இந்தக் கிராமத்தாரிடமிருந்து அறிந்து கொள்ளப் பார்க்கிறானோ! அல்லது என்னையே அவன் கவனித்து விட்டு மெதுவாக நோட்டம் பார்க்கிறானோ; இவன் தனியாக வந்திருப்பானா, பல ஆட்களோடு வந்திருப்பானா?"

இவ்வாறு பலவிதத்திலும் சிந்தனை செய்து, இனி அங்கிருப்பது சரியல்ல என்று நினைத்து, நாணயத்தை விற்காமல் மெதுவாக வீதியிலிருந்து நழுவினான் குலசேகரன்.

ஊரைவிட்டு வேகமாக நடந்து விரைவில் காட்டுப் பகுதியை அணுகினான்.

ஊர்வலத்தை அடைந்ததும் உடனே அவன் குறளனை அழைத்து விஷயத்தைக் கூறினான். பிறகு இருவரும் அவசரமாக ஆலோசித்தார்கள். ஊர்வலத்தை உடனே கிளப்புவது என்று முடிவுக்கு வந்தார்கள்.

இருவரும் பிறகு பிள்ளை உலகாசிரியரைச் சந்தித்தார்கள். உடல் நிலை சரியில்லாததால் அவர் படுத்திருந்தார்.

விஷயத்தைக் கேட்டதும் அவர், "அப்பா குலசேகரா! எனக்கு நல்ல காய்ச்சல். உடலுக்குள் ஏதோ உபாதை இருந்து கொண்டிருக்கிறது. எனினும் அரங்கனுக்கு ஆபத்து வந்துள்ள வேளையில் அதைப் பொருட்படுத்தலாகாது. நானும் புறப்படுகிறேன்" என்று புறப்பட்டார்.

**ஊ**ர்வலம் முழுவதையும் அனுப்பிய பிறகு, குலசேகரனும் குறளனும் தங்கள் ஆயுதங்களைத் தரித்துக் கொண்டார்கள். அவை தெரியா வண்ணம் தம்மை நன்றாகப் போர்வையால் மூடிக்கொண்டு கிராமத்தை நோக்கிப் புறப்பட்டார்கள்.

"சுவாமி! மச்சக்காரன் நிச்சயமாகத் தனியாக வந்திருக்கமாட்டான். துணையோடுதான் வந்திருப்பான். ஆகவே கிராமச் சுற்றுப்புறத்தை முதலில் கவனிப்பது தான் நல்லது" என்று கூறினான் குறளன்.

ஊர்ப்புறத்தை அடைந்த பிறகு, இருவரும் கிராமச் சோலைகளில் புகுந்து, சுற்றிவரப் பார்க்கலானார்கள்.

பல இடங்களைத் தேடிவிட்டு ஊரைச் சேர்ந்த மயானத்தை அடைந்தார்கள். அங்கே ஆலமரங்கள் அடர்ந்து வளர்ந்திருந்தன.

அவை பரப்பிய இருட்டான நிழலில் மயான தெய்வங்கள் பலவற்றின் கோயில்கள் தெரிந்தன.



பகலிலேயே பயங்கரமாகக் காட்சியளித்த அந்த இருட்டுப் பிரதேசத்தை இருவரும் அணுகிச் சுற்றிவரப் பார்த்தார்கள்.

கோரமான உருவங்களில் சில தெய்வங்களும், சில பீடங்களும் தெரிந்தன. ஒரு பலிபீடமும் அதற்கு உயரே கொக்கியுடன் கூடிய ஒரு சங்கிலியும் தெரிந்தன. "சிவுசிவுசிவு" என்று ஏதோ ஒரு ஒலி நடுக்கமாகக் கேட்டுக் கொண்டே இருந்தது.

"இங்கே யாரும் இல்லை!" என்றான் குறளன்.

அப்போது குலசேகரன் உயரே அடர்ந்த ஆலமரத்தின் கிளைகளை நோக்கிப் பார்வையைத் திருப்பினான்.

ஏதோ சந்தேகத்தில் ஒரு கல்லை எடுத்து மேலே விண் என்று எறிந்த போது இரண்டு சுடுகாட்டுக் கழுகுகள் 'குவீ குவீ' என்று இரைந்து கொண்டு மேலே பறந்தன.

அதைத் தொடர்ந்து திடீரென்று ஒரு குதிரையின் கனைப்பு கோவிலுக்குள்ளிருந்து கேட்கவே இருவரும் உடனே திடுக்கிட்டார்கள்.

மெள்ளக் கோவிலுக்குள் பார்வையைத் திருப்பிய போது கருவறைக்குள் முன்னாலுள்ள அறையில் ஒரு குதிரை நிழலாக நிற்பது தெரிந்தது.

குறளன் சட்டென்று உள்ளே ஓடினான். அவனது வலது கை இடுப்பிலுள்ள வாளைப் பிடித்திருந்தது. உள்ளே சென்று பார்த்ததில் யாருமில்லை என்று தெரிந்தது.

குதிரைமீது ஒரு சாக்கு மெத்தைமட்டும் போடப் பட்டிருப்பது கண்களில் பட்டது.

குதிரையின் இடது தொடையை மூடியிருக்கும் மேல் துணியை ஆவலோடு அவன் விலக்கிப்

பார்த்தான். அவன் நினைத்தது சரியாகி விட்டது! குதிரையின் தொடையில் சூட்டுக் குறி* தென்பட்டது.

"சுவாமி! தொடையில் சூடு போட்டிருக்கிறது. இது டில்லிக்காரர் குதிரைதான்" என்றான் குறளன்.

"குதிரையை இங்கே நிறுத்திவிட்டு, மச்சக்காரன கிராமத்தில் உளவறியப் போயிருக்கிறான்" என்றான் குலசேகரன்.

குதிரை மீதுள்ள மெத்தையை இருவரும் சோதித்தார்கள். அதனுள் சில கத்திகளும், ஓலைச் சுவடிகளும், எழுத்தாணியும், மது நிறைந்த ஒரு குடுவையும், சில துணிமணிகளும் இருப்பது தெரிந்தது.

அவற்றைப் பார்த்துவிட்டு, இருவரும் சீக்கிரமாக வெளியே வந்து ஒரு பதுக்கலான இடத்தில் தங்களை மறைத்துக் கொண்டு ஆலோசனையில் ஆழ்ந்தார்கள்.

ஊர்வலத்திற்கு இவ்வளவு அருகாமையில் அந்நிய உளவாளி வந்துவிட்டான். இனி அவன் அகப்பட்டால் கொன்றுவிட வேண்டியதுதான் என்று இருவரும் தீர்மானித்தார்கள்.

**வெ**கு நேரம் அவர்கள் காத்திருந்த பிறகு தூரத்தில் மச்சக்காரன் நடந்து வருவதைப் பார்த்தார்கள்.

மச்சக்காரன் சுற்றிவரப் பார்த்துக் கொண்டே, மெதுவாக நடந்து வந்தான்.

*டில்லி சுல்தான்கள் காலத்தில் ஆஜர் பட்டியல் ஊழல் நடந்தது. சுல்தானுக்கு வேண்டிய குதிரைப் படைகளை அவரது பிரபுக்கள் கொடுப்பார்கள். அவர்கள் வைத்திருக்கும் குதிரை களின் எண்ணிக்கையின் அளவுக்குத் தக்கபடி சுல்தான் அவர்களுக்கு ஊதியம் கொடுப்பார். எனவே, ஒரே குதிரைப் படையை பலரிடம் காட்டி பிரபுக்கள் அநியாய ஊதியங்கள் பெற்றுவந்தார்கள். இதைத் தடுக்கவே சுல்தான் குதிரைகளுக்கு வெவ்வேறு விதக் குறிகளில் சூடு போடச் செய்திருந்தார்.



கோவிலுக்கு அருகில் வந்து மீண்டும் எல்லா திசைகளையும் பார்த்து, படிக்கட்டுகளில் ஏறி உள்ளே போனான்.

"என் அருமைப் புரவியே! தனியாக இருக்கப் பயமாக இருந்ததா? அந்தத் தெய்வத்தைப் பார்த்துப் பயப்பட்டாயா, கண்ணு! அது உன்னை ஒன்றும் செய்யாது" என்று கூறி குதிரையைத் தட்டிக் கொடுத்தான் அவன்.

பிறகு, "தெய்வமே, என் குதிரையைக் காப்பாற்றிய தற்கு நன்றி" என்று கூறி, மெள்ளக் குதிரையை அவிழ்த்து வெளியே இழுத்து வந்தான்.

கோவில் முன் அதை நிறுத்திவிட்டு, மதுக் குடுவையை வெளியே எடுத்தான். ஆவலோடு அதில் இரண்டு மடக்குகளைக் குடித்து அதை மூடி உள்ளே வைத்து விட்டு, புளகிதமாய் 'ஆகா'காரம் செய்து, வெகு உல்லாசமாக ஒரு சிரிப்புச் சிரித்தான்.

பிறகு உள்ளே தெரிந்த காளியைப் பார்த்து, "அம்மா, காளி! உனக்கு நன்றி அம்மா! நான் இல்லாத போது உள்ளே யாரோ வந்து; என் குதிரையைத் தொட்டுப் பார்த்ததை நீ இரகசியமாகக் கூறிவிட்டாய்! மிக்க நன்றி!" என்று சொல்லிச் சிரித்தான்.

பின்னர், "யாரப்பா? எங்கே ஒளிந்திருக்கிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று கூவிக்கொண்டே சுற்றிவரப் பார்த்தான்.

சில கணங்கள்வரை அவனுக்கு எந்த மறுமொழியும் வரவில்லை.

உடனே மச்சக்காரன், "நீ ஒரு பேடி! தைரியம் இருந்தால் வெளியே வா!" என்று கூறிவிட்டு 'கடகட'வென்று சிரித்தான்.

அப்போது, "அங்கேயே நில்! நகராதே!" என்று கூவிக்கொண்டு, குலசேகரன் விருட்டென்று வாளை ஓங்கியவாறு பாய்ந்து வந்தான்.

அவனைத் தொடர்ந்து குறளனும் சீறிக்கொண்டு தாவி வந்தான். இருவரும் துள்ளிப் போய் மச்சக்காரனைப் பிடித்துக் கொண்டார்கள்.

குலசேகரனையும், குறளனையும் இனம் கண்டு கொண்ட மச்சக்காரன் சிறிது திடுக்கிட்டான்.

பிறகு, "தம்பிகளா! நீங்களா? செளக்கியமா?" என்று குசலம் விசாரித்தான்.

"எல்லாம் செளக்கியம்தான்" என்று கூறிய குலசேகரன் அவனது கைகள் இரண்டையும் பின்னால் சேர்த்துக் கட்டினான்.

"யார் நீ? உண்மையைக் கூறு!" என்றான் குறளன்.

"நானா? நான்தான்!" என்று சொல்லிச் சிரித்தான் அவன்.

ஓங்கி அவன் முகத்தில் ஒரு குத்துவிட்டான் குறளன்.

"மரியாதையாக உண்மையைச் சொல்? நீ யார்? இங்கே எப்படி வந்தாய்?" என்று மிரட்டினான் குறளன்.

"ஐயாக்களா; ஏற்கெனவே எல்லாம் உங்களுக்குச் சொல்லிவிட்டேன்!" என்றான் மச்சக்காரன்.

"அதை நம்ப முடியாது! எதையோ நீ மறைக்கிறாய்!" என்றான் குறளன்.

"நான் சொன்னதுதான் மெய்! அதைத் தவிர வேறு எதுவும் சொல்வதற்கில்லை" என்றான் மச்சக்காரன்.



பலமுறை கேட்டும் பயனில்லாமல் போகவே, குறளன் மரத்தில் ஏறி இரண்டு மிளாறுகளைப் பறித்து வந்தான்.

பிறகு 'வீச் வீச்' என்று மச்சக்காரனை அடிக்க ஆரம்பித்தான்.



# 29

மச்சக்காரன் மீது வீச் வீச் என்று அடிகள் விழுந்தன. ஒவ்வொரு அடியும் உக்கிரமாகிக்கொண்டே வந்தது. காற்றைக் கிழித்துக் கொண்டு சுரீர் சுரீர் என்று விழுந்த அவை அவன் முதுகைப் பாளங்களாகப் பிளந்து கொண்டிருந்தன.

மச்சக்காரன் வெகு நேரம் வரை புன்னகை மாறாமல் இருந்தான். ஆனால் கடைசி அடி அவனது வயிற்றில எக்கச்சக்கமாகப் பதியவே, 'அம்மா!' என்று கூவிச் சுருண்டு கீழே விழுந்தான்.

சுபாவமாக எப்போதும் சிரிப்பையோ, உல்லாசத் தையோ, மிதமிதப்பையோ தன் முகத்தில் காட்டிக் கொள்பவன் அவன்!

ஆனால் கடைசி அடி இசைவுப் பிசகாக விழுந்ததால் காலக் கணக்கில் அவனிடம் உறைந்திருந்த அந்த இனிய சுபாவம் முதன் முறையாக நொந்து சிதிலமாகியது.

எனினும் பழைய புன்னகை இயல்பாக எழும்பிவர. அதையும் அழுத்திக் கொண்டு அவனது உள்வேதனை மேலே மீறிவர, இரண்டும் கலந்த ஒரு நிலையில் "ஐயாக்களா!" என்று அழைத்தான் அவன்.

அவன் கண்ணில் நீர் தெறித்து விழுந்தது.

"ஐயாக்களா! தரும துரைகளா! உங்களுக்கு என்ன பாதகம் செய்தேன்? என்ன கொடுமை செய்தேன்? உங்களை மரண வாயிலிருந்து மீட்டவன் நான் அல்லவா! எனக்கு இப்படிக் கொடுமை செய்கிறீர்களே? இது அடுக்குமா?" என்று தழுதழுத்துக் கூறினான்.

"மச்சக்காரா! நீ உண்மையைக் கூறினாயில்லை. கூறாதவரையில் விடப்போவதில்லை!" என்று மீண்டும் மிளாற்றை ஓங்கினான் குறளன்.

"பொறு! பொறு! பொறு! பிள்ளாய்! எல்லாவற்றையும் முன்னாலேயே கூறிவிட்டேனே! நான் எதையும் மறைக்கவில்லையே! அப்படி இருந்தும் அடிக்கிறாயே! இனியும் அடிப்பதானால் அடித்துக்கொள்! நான் உன்னை நிறுத்தப் போவதில்லை! நிறுத்தவும் முடியாது! ஆனால் உண்மையைத் தேடி அடிக்கடி போவதாகக் கூறுகிறாயே! அது தவறு! உண்மை எங்கும் நிறைந்திருக்கிறது. அது உன் கண்ணில் படாவிட்டால் உனக்குக் காமாலை. என்னை அடிப்பதால் உனக்கு உண்மை புலப்பட்டு விடாது" என்றான்.

அவனது நெஞ்சழுத்தத்தையும், நைச்சியமான பேச்சையும் கேட்ட குறளன், மேலும் ஆத்திரம் அடைந்தவனாய் ஓங்கி அவன் முதுகில் இரண்டு இழுப்பு இழுத்தான்.

"திருவரங்கா!" என்று சொல்லிப் பல்லைக் கடித்தான் மச்சக்காரன். அவனுக்கு இப்போது மூச்சு வாங்கியது. வாயிலிருந்து உமிழ்நீர் வழிந்தது.

குறளன் உடனே குலசேகரனிடம், "சுவாமி! இவன் எவ்வளவு அடித்தாலும் மசியமாட்டான். உண்மை வெளிவராது. இவனைக் கொன்றுவிடுவதுதான் ஒரே வழி! அப்போதுதான் நமக்கு நிம்மதி பிறக்கும்' என்றான்.



இதற்குள் மச்சக்காரன் ஒரு மயக்கத்தில் நீட்டி நிமிர்ந்துவிட்டான். அவன் உடல் துவண்டுவிட்டது.

குறளன் அதற்குள் ஒரு பெரிய ஓட்டாஞ்சில்லை எடுத்து வந்து கீழே மண் பறிக்கத் தொடங்கினான்.

ஒரு ஆளைக்கிடத்தும் அளவுக்குக் குழியைப் பறித்ததும் குலசேகரனிடம் வந்து, "சுவாமி! யோசிக்க வேண்டாம். இவனைப் புதைத்துவிட வேண்டியதுதான்!" என்றான்.

குலசேகரன் மெதுவாக எழுந்தான். மச்சக்காரன் அருகில் சென்று பார்த்தான். அவன் ஆழ்ந்த மயக்கத்தில் வீழ்ந்திருந்தான்.

குறளன் அப்போது மச்சக்காரனின் காலைப் பிடித்து இழுக்கவே, "பொறு, குறளா!" என்றான் குலசேகரன்.

பிறகு அந்த உடம்பை மீண்டும் மேலும் கீழும் பார்த்தான்.

"குறளா! நைந்துபோன உடம்பு இது! வாழ்க்கையில் பலதர அனுபவங்கள் ஏற்று அதன் விளைவுகளால் சீக்கிரமே முதுமையைக் காட்டும் உடம்பு!" என்று சொல்லிவிட்டுச் சில கணங்கள் யோசித்துவிட்டு, "குறளா! இவனைக் கொல்ல எனக்கு மனம் வரவில்லை" என்றான்.

"சுவாமீ! இப்போது தயை காட்டாதீர்கள்! அது நம்மையே பாதிக்கும். திருவரங்கன் கோவிலுள் எவ்வளவு பேர் மாண்டார்கள் என்பதை நினைவு கூறுங்கள்! அப்போது இவர்கள் தயை காட்டினார்களா? அப்படியிருக்கும் போது ஒரு எதிரியை நாம் கொள்வது தப்பிதமல்ல!" என்று படபடத்தான் குறளன்.

"நீ சொல்வது சரி குறளா! ஆனால் இவன் நமக்கு

ஒரு சமயம் உயிர்ப் பிச்சை கொடுத்திருக்கிறான்" என்றான் குலசேகரன்.

"அப்படி அவன் செய்ததன் காரணம் என்ன? அதன் மூலம் திருவரங்கன் ஊர்வலத்தைக் கண்டுபிடிக்கலாம் என்பதால்தான். இவன் இங்கே வந்திருப்பதைப் பார்த்தால் நம்மைப் பின் தொடர்ந்து வந்திருக்கிறான் என்பது நன்கு தெரிகிறது. இவனை விட்டுவைத்தால் நம் எல்லோரையும் சேர்த்துக் கொன்றுவிடுவான்" என்றான் குறளன்.

இதைத் தொடர்ந்து இருவருக்கும் வாக்குவாதம் நடந்தது. முடிவில் குலசேகரன், "குறளா! எப்படியும் இந்தக் கொலைக்கு என் மனம் இடம் தரவில்லை" என்று தீர்மானமாகக் கூறினான்.

அச்சமயத்தில் சிறிது சிறிதாகக் கண்களை விழித்த மச்சக்காரன் சுய நினைவு கொள்ள ஆரம்பித்தான்.

"நான் எங்கிருக்கிறேன், எங்கிருக்கிறேன்?" என்று கூறிய அவன், குலசேகரனைப் பார்த்துவிட்டு, "இன்னும் நான் இறக்கவில்லையா? என்னை நீங்கள் கொல்ல வில்லையா?" என்று கேட்டான்.

அப்போது குறளன் திடீரென்று கத்தியை உருவி, "சுவாமி! இவன் ஒரு அயோக்கியன்! மயங்கியது போல் பாசாங்கு செய்கிறான். இவனைக் கொல்வதுதான் சரி!" என்று உரக்கக் கத்திக் கொண்டு பாய்ந்து எழுந்தான்.

"குறளா!" என்று கத்தினான் குலசேகரன்.

"நீங்கள் பேசாமலிருங்கள்! இவன் ஒரு உளவாளி! இவனைக் கொன்றுவிட்டுத்தான் மறு வேலை!" என்று துள்ளி மச்சக்காரன் மீது பாய்ந்தான் அவன்.

விருட்டென்று குலசேகரன் எழுந்தான்.



"குறளா!" என்று ஆத்திரத்துடன் கூவினான். அதற்குள் குறளன் மச்சக்காரனை நெருங்கிவிடவே, குலசேகரன் சடக்கென்று துள்ளிக் குறளன் மீது வேகத்தோடு பாய்ந்தான். பாய்ந்த பாய்ச்சலில் அவனை ஒரு தள்ளு தள்ளினான்.

மண்ணில் குட்டிக்கரணமிட்டு விழுந்தான் குறளன். அவனது வாள் தரையில் நட்டுக்கொண்டு நின்றது.

தனக்கு நேர்ந்ததைச் சில கணங்கள் அசை போட்ட அவன், மெதுவாக எழுந்து மண்ணைத் தட்டிக்கொண்டு குலசேகரனை அவநம்பிக்கையோடு பார்த்தான்.

குலசேகரனும் அவனை வெறித்துப் பார்த்தான்.

இருவரும் ஒருவரை ஒருவர் அப்படியே பார்த்துக் கொண்டு நின்றார்கள்.

பிறகு குறளன் தனது வாளை எடுத்துக் கொண்டு, க்ரீச் என்ற சத்தத்துடன் உறையுள் தள்ளி விருட்டென்று திரும்பி நடக்க ஆரம்பித்தான்.

அவன் சிறிது தூரம் போகும் வரையில் பேசாமல் இருந்த குலசேகரன் உடனே, "குறளா! குறளா!" என்று இரைந்து கத்தினான்.

குறளன் திரும்பிப் பாராமலேயே விறுவிறு என்று நடந்து சென்றான்.

மனதில் புழுங்கியவாறு வேதனையுடன் திரும்பினான் குலசேகரன். அப்போது, கீழே எழுந்து அமர்ந்திருந்த மச்சக்காரன் அவனை நோக்கிக் கை கூப்பி வணங்கினான்.

"பிள்ளாய்! நீ மகத்தான பிள்ளாய்! என்னைக் காப்பாற்றுவதற்காக ஒரு நண்பனை இழக்கச் சித்தமாகி விட்டாயே!" என்று கூறினான்.

குலசேகரன் கண்ணில் ஏனோ நீர் படிந்திருந்தது.

"மச்சக்காரரே! இம்மாதிரியான தர்மசங்கடங்களில் அடிக்கடி மாட்டிக் கொள்பவன் நான். ஒரு வீரனாக வாழ நான் தகுதி படைத்தவனா, அல்லது சந்நியாசியாகத் தகுதி படைத்தவனா என்பது தெரியாமல் தவிக்கிறேன். உம்மைக் காப்பாற்றியதால் உமது மீதுள்ள சந்தேகம் எனக்குத் தீர்ந்துவிட்டதாக எண்ணிவிடாதீர்! அது இன்னும் என் மனத்தில் அப்படியே உறைந்திருக்கிறது!" என்று கூறினான்.

"பிள்ளாய்!" என்றான் மச்சக்காரன். "துக்கத்தைக் கண்டு மனம் நெகிழ்ந்து கண்ணீர்விடுபவன் உலகில் நீண்ட நாள் வாழ்வான்! அப்பா! நீ ஒரு மகத்தான மனிதனாக மாற எல்லாவித குணமும் பெற்றிருக்கிறாய்! உன்னை எந்தவிதச் சந்தேகத்திலும் ஆழ்த்த எனக்கு எண்ணம் கிடையாது. நீ எது கேட்டாலும் நான் உண்மையைக் கூறுகிறேன். ஆனால் நான் சொல்வதை நினைவில் வை! நான் இதுவரை சொன்னதும் உண்மை தான். இனிமேல் சொல்லப் போவதும் உண்மை தான்!" என்று கூறினான்.

பிறகு மெள்ள மெள்ள எழுந்திருக்கப் பார்த்து, உபாதையால் முடியாமல், தாறுமாறாக கிழிந்திருந்த தனது அங்கியின் பகுதியைக் கிழித்துத் தனது காயங்களில் விழுந்த இரத்தத்தைத் துடைத்துவிட்டான்.

பிறகு, "பிள்ளாய்! களைத்துவிட்டேன்! விழுந்த அடி செம்மையான அடி! இதிலிருந்து நான் மீளுவேனோ என்னவோ! இம்மாதிரி வேளையில் என்னைக் காப்பாற்றுபவள் என் மோகினிதான். அவளை எடு! அதோ அந்தக் குடுவையில் இருக்கிறாள்!" என்றான்.

குலசேகரன் சாக்கு மெத்தையிலிருந்து குடுவையை எடுத்துக் கொடுத்தான்.

மச்சக்காரன் ஆவலோடு அதை வாங்கி மூடியைத் திறந்து ஒரு மடக்குக் குடித்துவிட்டுச் சப்புக் கொட்டினான்.



பிறகு குலசேகரனைப் பார்த்து இராகம் போன்ற ஒரு வசன நடையில் பேச ஆரம்பித்தான்.

"கொடியாள்-கொடியவள் அல்ல - பூங்கொடியாள்! கொடியின் கனியாள்! கனியின் துளியாள்! துளியின் தேன் அன்னச் சுவையாள்! செம்பவழமே உருகிச் செங்குழம்பாய் வார்த்த உடலாள்! குங்குமக் கடலாள்! எனக்கொரு கணத்தில் கோடி இனிமையெலாம் குலவிக் கொணர்ந்து தரும் பணியாள்! குடுவையில் வாழும் சிறுகுடியாள்! அடுத்தென் நா புகுந்தால் ஆயிரங்கோடி மின்னலாய் மின்னி அண்ட சராசரம் எல்லாம் காட்டும் அற்புதப் படையாள்! இவள் என் துணையாள்! என் பணியாள்! என் மனையாள்! மனையாள்! மனையாள்!"

ஏதோ ஒரு கேளாத இராகத்தில் அவன் குரல் ஒரு நரம்பு வாத்தியம் போல் சின்ன இசையாய்க் கமழ அந்த இசையில் குலசேகரன் சிறிது நேரம் கட்டுண்டு மெய்மறந்து நின்றான். பிறகு மச்சக்காரன் குடுவையை குலசேகரனிடம் நீட்டியதும் அவன் அதை வாங்க மறுத்தான்.

உடனே மச்சக்காரன் "பிள்ளாய்! வாழ்க்கை ஒரு துயர்! அதைச் சகித்துக் கொள்ள மூன்று துணைகள் வேண்டும். அந்த மூன்றையும் பருகித் திளைக்க வேண்டும் அவை செந்துவர், செந்தழல், செந்துளி" என்று கூறிச் சிரி சிரி என்று சிரித்தான்.

குலசேகரன் அவனை ஏறிட்டுப் பார்க்க, "விளக்குகிறேன்!" என்று கூறிய மச்சக்காரன், "பிள்ளாய் செந்துவர் என்றால் செந்துவர் வாய்! செந்தழல் என்றால் செந்தழல் மது! செந்துளி என்றால் செந்துளிக்கவிதை! இதை நான் சொல்லவில்லை. வாழக்கையை உல்லாச வனப்பாய் மாற்றுவதற்குப் பாரசீகக் கவிகள் கூறி இருக்கும் அதி அற்புத உத்திகள் இவை! இப்போது எனக்குக் கிடைத்திருப்பது செந்தழல்! அதைப் பருகுகிறேன்!" என்று கூறி ஆசை தீரப் பருகினான் மச்சக்காரன்.

பிறகு குலசேகரனை நோக்கி, "இப்போது எனக்கு உயிர் வந்துவிட்டது. நீ கேட்பதைக் கேட்கலாம்!" என்றான்.

"மச்சக்காரரே! முதலில் நீங்கள் யார்? தெற்கு மொழிகளை எல்லாம் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்! டில்லிக்காரர்களின் சமயத்தையும் பின்பற்றுகிறீர்கள்! தெற்கிலிருந்து வடக்கே போனீர்கள் என்று சொன்னீர்கள். உண்மைதானா?" என்று கேட்டான் குலசேகரன்.

"ஆமாம், பிள்ளாய்! இருபத்தேழு வருடங்களுக்கு முன் நாங்கள் வடக்கே போக வேண்டிவந்தது. காரணத்தைச் சொல்லுகிறேன். நாங்கள் தேவகிரியைச் சேர்ந்த தெலுங்கர்கள். என் தந்தை ஒரு போர் வீரர். தேவகிரியை ஆண்ட இராமதேவரின் படையில் இருந்து வந்தார். இருபத்தேழு வருடங்களுக்கு முன் திடீரென்று ஒரு தினத்தில் டில்லி சுல்தானின் படைகள் "மாலிக் கர்ஷாஸ்ப்" தலைமையில் தேவகிரியை முற்றுகையிட்டன.* ஒரு வாரத்தில் அந்தக் கோட்டை விழுந்துவிட்டது. இராமதேவர் சமாதானத்தை நாட வேண்டி வந்தது. ஏராளமான குதிரைகளையும் யானை களையும் அவர் டில்லியின் மாலிக்குக்குப் பரிசிலாகக் கொடுத்தார். இவை தவிர தமது பெண்ணையும் மாலிக்குக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்படி மணம் செய்து கொண்ட மாலிக் டில்லி திரும்பும் போது தேவகிரி இளவரசிக்குத் துணையாக நாங்களும் எங்களைப் போன்ற பல குடும்பங்களும் டில்லிக்குப் போக வேண்டி வந்தது. அப்போது எனக்குப் பதினேழு வயது.

டில்லிக்குப் போன நாங்கள் விரைவில் எங்கள் சமயத்தை மாற்ற வேண்டி வந்தது. மாற்றிக்

* கி.பி. 1296-ல் நடந்த நிகழ்ச்சி இது. தளபதி கர்ஷாஸ்ப் பின்னர் அல்லாவுத்தீன் என்ற பெயரில் டில்லி சிங்காதனம் ஏறினார்.



கொண்டோம். ஆனால் எவ்வளவுதான் வேற்றுப் பண்பாடுகளை ஏற்றுக் கொண்டாலும், எங்கள் முந்தியப் பண்பாட்டின் ஆதிக்கமும் கவர்ச்சியும் எங்களை விட்டுப் போவதாக இல்லை. எங்களது பழைய தாயகமும், மொழியும், சமயமும் எங்களை எந்நேரமும் ஈர்த்துக் கொண்டே இருந்தன. இந்த ஈர்ப்பின் வசப் பட்டுத்தான் நான் டில்லி உளவாளியாக வேலை பெற்று இங்கு வந்திருக்கிறேன். நான் கூறுவது எல்லாம் முற்றிலும் உண்மை! பிள்ளாய்! இதை நம்பு! எள்ளளவும் சந்தேகப்படாதே!" என்றான் மச்சக்காரன்.

"நம்பப் பார்க்கிறேன். பெரியவரே! இப்படி உளவாளியாக வந்த நீங்கள் உங்கள் படைக்குத் துரோகம் செய்யலாமா?" என்றான் குலசேகரன்.

கடகடவென்று சிரித்தான் மச்சக்காரன்.

"பிள்ளாய்! கேட்டாய் ஒரு சரியான கேள்வி! சற்று முன்தானே நீ ஒரு இரண்டாங்கெட்டான் என்று உன்னைச் சொல்லிக் கொண்டாய்! அதைப் போலத்தான் நானும்! என் பழமையை நான் மறக்க முடியவில்லை. அது என்னை இழுத்து வசப்படுத்துகிறது. அதனால்தான் நானும் இப்படி இரு மனங்களோடு இருந்து வருகிறேன்" என்று கூறினான்.

"சரி பெரியவரே! இப்போது நீர் அரங்கனைத் தேடி வரும் அவசியம் என்ன? இந்தக் கிராமத்தின் வரை ஏன் வந்தீர்?" என்றான் குலசேகரன்.

"அப்படிக் கேள்! விஷயத்தைச் சொல்கிறேன். என் தாயார் அரங்கனைப் பற்றி எவ்வளவோ கூறியிருக்கிறாள். அதைத் தவிரவும் என் ஆசையைக் கிளப்பிவிட்டதற்குப் பெரிய சம்பவம் ஒன்று உண்டு" என்றான் மச்சக்காரன்.

"என்ன சம்பவம்?" என்றான் குலசேகரன்.

"சுரதாணியைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?"

"யார் அந்த சுரதாணி" என்றான் குலசேகரன்.

"திருவரங்கக் கோவிலில் சித்திர ரூபத்தில் எழுதி வைத்திருக்கிறீர்களே. அவள்தான்!" என்றான் மச்சக்காரன்.

"ஓ, துலுக்க நாச்சியாரா?" என்றான் குலசேகரன்.

"சரியாகச் சொன்னாய்! அவளது கதை உனக்குத் தெரியுமா?" என்று பரவசத்துடன் எழுந்தான் மச்சக்காரன். அவன் முகம் அப்போது புது வெளிச்சத்துடன் பிரகாசித்தது.

# 30

**து**லுக்க நாச்சியார் என்றவுடன் மச்சக்காரன் எழுந்து அமர்ந்தான். முகமெல்லாம் வெளிச்சமாகியது.

"ஆகா!" என்றான். கண்களை மூடி பரவசமானான். "அந்த ஒரு நிர்மலமான காதலை உலகில் காண்பேனா நான்? அத்தகைய அந்தரங்க சுத்தமான பிரேமையை உலகில் காண்பேனா, நான்? பிள்ளாய் இதோ பார்! என் உடம்பு இப்போது கூடச் சிலிர்க்கிறது. என் உள்ளம் இனிமையில் வழிகிறது" என்றான்.

பிறகு அந்தப் பரவசத்தில் சிறிது நேரம் மூழ்கி இருந்த அவன், "பிள்ளாய்! பன்னிரு வருடங்களுக்கு முன் நடந்த அந்த நிகழ்ச்சி உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

"பெரியவரே! அதைப்பற்றிச் சிறிதளவு கேள்விப் பட்டிருக்கிறேன்" என்றான் குலசேகரன்..



"ஆமாம். உனக்கு எங்கு தெரிந்திருக்கப் போகிறது? பத்து வயதுச் சிறுவனாய் இருந்திருப்பாய்! நான் சொல்கிறேன், கேள்!" என்றான் மச்சக்காரன்.

பிறகு குடுவையைத் திறந்து அவனது மோகினியைச் சிறிது சுவைத்து விட்டுப் பேச ஆரம்பித்தான்.

"பிள்ளாய்! தளபதி கர்ஷாஸ்ப்பைப் பற்றி ஏற்கனவே சொன்னேன். அவர்தான் அல்லாவுத்தீன் என்ற பெயரில் டில்லி சிங்காதனம் ஏறினார். பட்டத்திற்கு வந்ததும் அவருக்குத் தெற்கத்தி நாடுகள் மீது அடங்கா ஆசை! தமது தளபதி மாலிக்காபூரை அழைத்துத் தெற்கு நோக்கிப் படையெடுக்கச் சொன்னார்.

மாலிக்காபூர் புறப்பட்டார். கார்த்திகை மாதம் டில்லியிலிருந்து புறப்பட்ட அவர், சித்திரை மாதம் வீர தாவளப் பட்டினத்தை அடைந்தார். அங்குள்ள பாண்டிய அரசர் அவரிடம் சண்டை போடாமல் ஓடிவிட்டார். அவரைத் துரத்திக் கொண்டே செல்லும்போது வழியில் எதிர்ப்பட்ட நகரங்களை எல்லாம் காபூர் சூறையாடினார். காஞ்சீபுரம், கண்ணனூர், திருவரங்கம் போன்ற பல நகரங்கள் அவர் சூறைக்கு இலக்காகின. முடிவில் மதுரை போனபோது அங்குள்ள அரசரான விக்கிரம பாண்டியர் என்பார் அவரைத் தடுத்தி நிறுத்தி விட்டார். அதற்கு மேலும் போகாமல் உடனே காபூர் திரும்பி விட்டார். திரும்பும்போது, எவ்வளவு திரவியங்களை எடுத்துச் சென்றார் தெரியுமா?" என்று கேட்டு நிறுத்தினான் மச்சக்காரன்.

"தெரியாது!" என்றான் குலசேகரன்.

"தெரிந்துகொள் அப்பா! 612 யானைகள், 20,000 குதிரைகள், 9,000 மணங்கு பொன். இவை தவிர யானைகள், குதிரைகள் மீது ஏற்றப்பட்ட அணி மணிகள் அடங்கிய பெட்டிகள் பல்லாயிரம்!"*

* அந்த நாளைய துருக்க வரலாற்று ஆசிரியரான "பரனி" இந்த விவரங்களைத் தருகிறார்

"அவ்வளவு பொருள்களா?"

"ஆமாம் அப்பா! அவ்வளவையும் எடுத்துச் சென்று சுல்தான் அல்லாவுத்தீன் முன்பு பரத்தி வைத்தார். அல்லாவுத்தீன் தளபதி காபூருக்கு நிறைய திரவியங்களைக் கொடுத்து, அவரைக் கௌரவித்தார். பொருள்களில் ஒரு பகுதியைப் பிரித்து தமது பிரபுக்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்தார். அப்படிக் கொடுத்த பொருள்களில் தான் திருவரங்கத்திலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட உங்கள் அரங்கநாத விக்கிரகமும் ஒருவரிடம் சிக்கியது.

"யாரிடம்?" என்றான் குலசேகரன்.

"சொல்லுகிறேன். அவர் பெயர் *அப்துல்லா உசேன் கசன்பி பாதுஷா!" என்றான் மச்சக்காரன்.

பிறகு மோகினியை ஒரு மடக்குப் பருகி விட்டு "ஆங்" என்று கனைத்துக் கொண்டு ஆரம்பித்தான். "அந்த பிரபு ஒரு சிற்றரசரைப் போன்றவர்! ஒரு நிலப் பரப்புக்கே அதிபதி. குட்டி அரசராக வாழ்ந்து வந்தார்.

அவரது பெண்தான் சுரதாணி! அழகும், அறிவும், நிரம்பிய பதினெட்டு பிராயமுள்ள பெண்கொடி அவள்.

தந்தைக்குக் கிடைத்த பரிசில்களை எல்லாம் அந்தப் பெண்கொடி பார்வையிட்டாள். அப்படிப் பார்க்கும்போது ஒரு ஓரத்தில் நின்ற அரங்கன் விக்கிரகத்தின் மீது பளீர் என்று அவள் பார்வை விழுந்தது. ஒரே ஒரு பார்வைதான்! ஆகா! அந்தப் பார்வையில் தான் எவ்வளவு பெரிய விளைவுகள்! பிள்ளாய்! வாழ்க்கையில் எத்தனையோ திடுக்கிடும் திருப்பங்கள் ஒரு பார்வையால், ஒரு வார்த்தையால், ஒரு காட்சியால், ஒரு அதிர்ச்சியால் நடந்து விடுவதுண்டு. அத்தகைய ஒரே பார்வையில்தான் சுரதாணியின் வாழ்க்கையே மாறிவிட்டது!" என்றான் மச்சக்காரன்.

* கிழக்கிந்தியக் கம்பெனி காலத்தில் செஞ்சியைச் சேர்ந்த நாராயணன் என்பார் எழுதிய 'கர்நாடக ராஜாக்களின் சவிஸ்தார சரித்திரம்' என்ற நூலில் இந்தப் பெயர் காணக் கிடைக்கிறது.



"பெரியவரே!" என்று ஆரம்பித்தான் குலசேகரன். "இப்போது உமக்குத் தெரியாத விஷயங்களை நான் கூறுகிறேன். மாலிக்காபூர் படையெடுத்து வந்து எங்கள் அரங்கநாதன் விக்கிரகத்தை எடுத்துச் சென்ற பிறகு திருவரங்கத்தில் என்ன நடந்தது என்பதைக் கூறுகிறேன். அப்போது திருக்கரம்பனூரில் ஒரு எம்பெருமானடியாள் இருந்தாள். திருவரங்கனைப் பார்க்காமல் தினமும் உணவு அருந்துவதில்லை என்ற விரதம் பூண்டிருந்தாள். ஆனால், மாலிக்காபூர் அந்த விக்கிரகத்தை எடுத்துப் போய்விடவே அவள் அவரது படைகளைப் பின் தொடர்ந்து செல்லலானாள். பல மாதங்களாகப் பயணம் செய்யவேண்டி வந்ததை அவள் பொருட்படுத்தவே இல்லை. அவளது ஒரே லட்சியம் திருவரங்கனைப் பார்க்க வேண்டும் என்பதுதான்!

படைகளுக்குப் பின்னால் போகும் தானிய வியாபாரிகளுடன் அவள் ஒரு வேலைக்காரி போல் சென்றதால், யாரும் அவள் வருவதைப் பற்றிப் பொருட்படுத்தவும் இல்லை.

படைகள் டில்லிபோய்ச் சேரும்வரை அவள் கூடவே போனாள். டில்லியில் திரவியங்கள் யாவும் பங்கிடப்படும் போது திருவரங்கனின் விக்கிரகம் யாரிடம் போய்ச் சேர்ந்திருக்கிறது என்பதை விசாரித்து அறிந்து கொண்டாள்.

பிறகு உடனே அந்நகரைவிட்டுப் புறப்பட்டு யாத்திரிகர்கள் கும்பலில் சேர்ந்து கொண்டு தென்னாடு நோக்கிப் பிரயாணம் செய்தாள்.

திருவரங்கத்தை அடைந்தவுடன் கோவிலாரைக் கூட்டி விக்கிரகம் இருக்கும் இடத்தை அவர்களிடம்

கூறினாள். அவர்களும் ஆலோசித்து ஆடல் பாடல் களில் தேர்ந்த ஆண் பெண்களில் அறுபது பேர்களைச் சேர்த்து கும்பலாக்கி டில்லி நோக்கி அனுப்பினார்கள். அந்தக் கூட்டத்தினர் உசேன் கசன்பி பாதுஷாவின் மாளிகைக்குச் சென்று அவர் முன்னால் ஜக்கிந்தி நாட்டியம் ஆடினார்கள். மிக அற்புதமாக இருந்த அந்த நடனத்தை ரசித்த பாதுஷா மகிழ்ச்சி அடைந்து, அவர்களுக்கு நிறைய பொருள்களை வெகுமதியாக கொடுத்தார். ஆனால் நாட்டியக்காரிகள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. 'எங்களுக்கு வேண்டுவது எங்கள் திருவரங்கன் சிலைதான்!' என்று கூறினார்கள். 'இப்படி ஒரு சொற்பமான பொருளைக் கேட்கிறீர்களே!' என்று சொல்லி, அதை அந்தப்புரத்தில் இருந்து எடுத்துக் கொள்ளச் சொன்னார் பாதுஷா. நாட்டியக்காரிகள் அந்தப்புரம் சென்று பார்த்தபோது, திருவரங்கனது விக்கிரகம் அங்கு எல்லா விமரிசைகளோடு இருப்பதையும், அதன் முன்பாக பாதுஷாவின் மகள் சுரதாணி தன்னை மறந்த நிலையில் ஒரு தெய்வீக பிரேமையில் ஆழ்ந்திருப்பதையும் கண்டார்கள். "ஆகா! பெருமாளே! இங்கேயும் உமது கைவரிசைகளைக் காட்டிவிட்டீரா?" என்று எண்ணமிட்டார்கள். சுரதாணி அந்த விக்கிரகத்தை கொடுக்க மாட்டாள் என்று உணர்ந்து, அவளிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து, அவளுக்கு பிரசாதம் கொடுப்பது போல் மயக்க மருந்தை ஊட்டிவிட்டார்கள்.

சுரதாணி மய்க்கம் அடைந்தாள். நாட்டியக்காரிகள் அரங்கன் விக்கிரகத்தை அப்படியே தூக்கிக் கொண்டு புறப்பட்டார்கள். ஓட்டமும் வேகமுமாக தெற்கு நோக்கிப் பிரயாணம் செய்தார்கள்." என்றான் குலசேகரன்.

"ஹாஹாஹா!" என்று சிரித்தான் மச்சக்காரன். "பிள்ளாய்! நன்றாகச் சொன்னாய்! அதற்கு மேலே நடந்தது எனக்குத் தெரியும், நான் கூறுகிறேன்," என்று சொல்லி ஆரம்பித்தான்.



"மயக்கம் தெளிந்த சுரதாணி எழுந்திருந்தாள். அரங்கனைக் காணாமல் பரிதவித்தாள். அல்லாடினாள், அலமந்தாள், அரற்றினாள், விழுந்து புரண்டாள். 'இனி தரியேன், தரியேன்' என்று புலம்பினாள்.

விஷயம் பாதுஷாவிற்கு எட்டியது. வெறும் ஒரு சிலைக்காக தன் மகள் ஏங்குவதை நினைத்து ஆச்சரியப் பட்டார். எனினும் அவளது தாபத்தின் ஆழத்தைக் கண்டு உடனே சின்னப்படை ஒன்றைத் திரட்டி அந்த நாட்டியக்காரிகளைப் பிடித்து வர ஏவிவிட்டார். அரங்கனைச் சீக்கிரம் காணவேண்டும் என்ற ஆவலில் சுரதாணியும் அந்தப் படையோடு சேர்ந்து கொண்டாள்" என்று நிறுத்தினான் மச்சக்காரன்.

"டில்லிப்படை பின்தொடர்ந்து வருவது அறிந்து, அந்த நாட்டியக் கூட்டம் விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு நேராகத் திருவரங்கத்திற்குப் போகாமல் வேறு திசை நோக்கிப் போய்விட்டது. விக்கிரகத்தைத் தேடி திருவரங்கம் வந்த உங்கள் சுரதாணி அதைக் காணாமல் சோகம் மிகக் கொண்டு அந்தக் கணத்திலேயே உயிர் விட்டாள்!" என்றான் குலசேகரன்.

"இவ்வளவுதானே தெரியும்? ஆனால், சுரதாணியின் காதல் பின்னால் மற்றொரு காதல் ஒளிந்து கொண்டு இருந்தது உனக்குத் தெரியுமா?" என்றான் மச்சக்காரன்.

"அது என்ன மற்றொரு காதல்?" என்றான் குலசேகரன்.

"கேளாய், பிள்ளாய்! சுரதாணி அழகு மிகுந்தவள். அவள்மீது அந்தரங்கமாகவே ஒரு இரகசியக் காதலை வளர்த்துவந்தான் ஒரு இளைஞன்."

"யார் அந்த இளைஞன்?"

“சொல்கிறேன். பாதுஷாவிடம் மந்திரி ஒருவர் வேலை பார்த்து வந்தார். அவருக்கு ஒரு மகன் உண்டு. அவன்தான் அந்த இளைஞன். உப்பரிகையிலும், உய்யான வனத்திலும் சுரதாணியைக் கண்டு, அவள் மீது ஒரே மையலாகிவிட்டான்.

'சுரதாணி, சுரதாணி' என்று மானசீகமாக உச்சரித்து அவள் உருவத்தைத் தியானித்து வழிபட்டு, தாலாட்டி, சீராட்டி, மானசீகமாக அவளுடன் ஒரு காதல் வாழ்க்கையே வாழ்ந்துவந்தான்.

அவனது காதலியான சுரதாணி படைகளோடு தெற்கு நோக்கிப் புறப்பட்டாள் என்பதை அறிந்து, அந்த காதலன் உடனே தானும் புறப்பட்டு அவள் அறியாமலே அவளைப் பின்தொடர்ந்து சென்றான்.

திருவரங்கத்தை அடைந்த சுரதாணி கோவிலுள் அரங்கனது விக்கிரகத்தைக் காணாமல் திடுக்கிட்டு, மனம் உடைந்து அந்தக் கணமே உயிரை மாய்த்து விட்டாள்.

அந்த அற்புதக் காட்சியை நேரில் கண்ட அந்தக் காதலன் மிகுந்தத் துயரில் மூழ்கினான். கண்ணீரை அருவியாய்ச் சரித்துக் கொட்டினான்.

பிறகு தெளிந்தபோது அவன் மனத்தில் ஒரு புதிய ஆகாயம் உதயமாகி இருந்தது!”

இப்படிச் சொல்லி நிறுத்திய மச்சக்காரன் கண்களில் நீர் வார்த்துவிட்டது.

“ஆகா! பிள்ளாய்! பிரேமையின் சக்திகளுக்கு உலகில் ஈடு உண்டோ? பிள்ளாய்! காதலில் எத்தனையோ வித ரகங்களில் ஒரு குறிப்பிட்ட ரகத்தை அறிவாயோ, பிள்ளாய்! அதைச் சொல்கிறேன்! காதலில் ஒருவர் மூழ்கினால் கேவலம் காதலியை மட்டும் அவர் காதலிப்பதில்லை. காதலி தொட்ட பொருளையும் காதலிப்பார், காதலி முகர்ந்த பொருளையும் காதலிப்பார், காதலி உகந்த பொருளையும் காதலிப்பார். சொல்லப் போனால் அவர் தமது சொந்த ஆசைகளை அறவே இழந்து, காதலியின் விருப்பங்களையும் ஆசைகளையுமே தமது விருப்பங்களாகவும் ஆசைகளாகவும் மாற்றிக் கொண்டுவிடுவார். காதலில் விளையும் அற்புத அனுபவம் இது!

இந்த அனுபவத்தில் அந்தக் காதலனும் மூழ்கி விட்டான். சுரதாணி காதலித்த அந்த அரங்க உருவமே அவனது காதலுக்கும் இலக்காகிவிட்டது.

சொல்லப் போனால் சுரதாணியாகவே அவன் மாறி அரங்கனைக் காதலிக்கத் தொடங்கினான்.

அரங்கனையே நினைத்து மற்ற யாவையும் அவன் மறந்தான். உற்றார் உறவினரைத் துறந்தான். உன்மத்தமாய் ஊரும் காடுகளும் அலைந்தான்.

கடைசியில் அந்தப் புனிதக் காதலன் பூரி க்ஷேத்திரத்தை அடைந்தான்.

அங்கு அரங்கனை நினைத்து வாழ்க்கையை நடத்துங்கால், ஒரு நாள் காலையில் சிறு நெருப்பு மூட்டி தன் கைகளால் ரொட்டி சுட்டுக் கொண்டிருந்தான்.

அப்போது அந்தப் பக்கத்தில் வந்த கோழி ஒன்று அவன் சுட்டு வைத்திருந்து ரொட்டி ஒன்றைக் கவ்விக் கொண்டு ஓடியது.

அதைப் பார்த்த அவன் உடனே எழுந்து, கோழியின் பிறகே ஓடி, “அரங்கா! வெறும் ரொட்டியை எடுத்து ஓடுகிறாயே! இந்தா! நெய் தடவிய ரொட்டி இதோ இருக்கிறது! இந்தா! அரங்கா!” என்று கூவி கையில் ஒரு ரொட்டியை எடுத்துக் கொண்டு ஓடினான்.

கேவலம் கோழி போன்ற ஒரு கடைநிலை ஜீவராசி கூட அவனுக்கு அரங்கனாகத் தோன்றிவிட்டதால்,

அந்தக் கணத்திலேயே அவனுக்கு ஒரு உயர்ந்த தெய்வ அனுபவம் கை கூடியது. அதன் பயனால் அவனது உயிர் அந்தக் கணமே உடலைவிட்டுப் பிரிந்து சென்றது. அவன் முக்தனானான். அரங்கன் கழல்களை அடைந்தான்!"

இதைச் சொல்லி முடிக்குங்கால் மச்சக்காரனின் குரல் தழுதழுத்துக் கண்களில் நீர் அரும்பியது.

# 31

ஆண்டாளது பிரேமைக் கதையை அடுத்து திருவரங்கத்தில் நடந்த அற்புதமான பிரேமைக் கதை சுரதாணியின் கதைதான்!*

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் (கி.பி. 1311) நடந்த அந்தக் கதையை எண்ணி எண்ணி குலசேகரனும் மச்சக்காரனும் வியப்பில் ஆழ்ந்திருந்தார்கள்.

அதையே பற்றி நீண்ட நேரம் வரை பேசினார்கள்.

மாலையில் வெய்யில் இறங்கும்போது ஒரு குதிரையும் இரு யாத்திரிகர்களும் காட்டு வழியே போய்க் கொண்டிருந்தார்கள்.

குதிரை மீது இருந்த யாத்திரிகன் அதன் மீது குப்புறக் கவிழ்ந்து படுத்துக் கொண்டிருந்தான். அவனது கண்கள் ஒரு துணியால் கட்டப்பட்டிருந்தன.

* பின்னர் கோவிலார் இரண்டாவது பிராகாரத்தில் வடகீழ் மூலையில் சுரதாணி உருவத்தைச் சித்திரமாக எழுதி வைத்தார்கள். தினமும் காலையில் கோதுமை ரொட்டி, மதுரப் பருப்பு கிச்சடியான பொங்கல் முதலியவைகளை அவளுக்குப் படையலாகப் படைத்து வந்தார்கள். இந்தப் பழக்கம் இப்போதும் நீடித்து வருகிறது.



குதிரையை நடத்திக் கொண்டு இரண்டாவது யாத்திரிகன் அதன் முன்னால் நடந்து போய்க் கொண்டிருந்தான்.

சிறிது தூரம் சென்ற பிறகு, குதிரை மீது படுத்திருந்த யாத்திரிகன், "பிள்ளாய், பிள்ளாய்!" என்று மற்றவனை அழைத்தான். மற்றவன் ஓடிவந்தான்.

"பிள்ளாய்! என்னைச் சரியாகப் படுக்க வை! என் உடம்பு நழுவுகிறது!" என்று கூறினான் குதிரை மேலிருந்தவன்.

"பெரியவரே! இவ்வளவு கஷ்டங்களைப் பட்டுக் கொண்டும் அரங்கனைத் தரிசிக்க வேண்டுமா?" என்று கூறினான் யாத்திரிகன்.

"ஆசையிராதா பிள்ளாய்? சுரதாணியின் கதையை அறிந்ததில் இருந்து எனக்கு அந்த அரங்கன் விக்கிரகத்தைத் தரிசிக்க வேண்டும் என்று அடங்கா ஆவலப்பா! அதற்காக இந்த இன்னலையும் அனுபவிப்பேன்; இதற்கு மேலும் அனுபவிப்பேன்!" என்றான் யாத்திரிகன்.

"சரி! உமது ஆவலை அறிகிறேன். ஆனால் மற்ற டில்லிப் படையினர் ஏன் இந்த விக்கிரகத்தைத் தேடி அலைகிறார்கள்?" என்றான் குலசேகரன்.

"சொன்னால் சிரிப்பாய்! சொல்லட்டுமா?"

"சொல்லுங்கள்!"

"உங்கள் அரங்கன் விக்கிரகத்தை மாற்றில்லாத பசும் பொன்னால் செய்திருக்கிறீர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள்!"

"அப்படியா?"

"ஆமாம்! அது தவிர விக்கிரகத்துள் வைர வைடூரியங்களையும் ரத்னங்களையும் பொதித்து வைத்திருக்கிறீர்கள் என்று நினைக்கிறீர்கள். இதனால் தான் சென்ற முறை மாலிக்காபூர் வந்த போது, தென்னாட்டிலிருந்து நிறைய விக்கிரகங்களை அள்ளி எடுத்துச் சென்றார். அவர் நினைத்தபடியே அவருக்கு ஏராளமான தங்கமும் நவரத்தினங்களும் கிட்டின."

"தங்கத்திற்கும் ரத்னங்களுக்கும் உங்களுக்கு அவ்வளவு ஆசையா?"

"உங்களுக்கு ஆசை இருப்பது போல் அவர் களுக்குப் பன்மடங்கு உண்டு. ஒரு சூறையால் அவர்களுக்கு ஒன்பதாயிரம் மணங்கு பொன் கிடைக்கிறது என்றால் ஏன் அதை மீண்டும் மீண்டும் நடத்த மாட்டார்கள்? இப்போது டில்லிப் படைகள் உங்கள் அரங்கனைத் தேடி வருவதற்குக் காரணம் அதுதான்! கோவிலிருந்து நீங்கள் எல்லா சொத்துக்களையும் எடுத்து ஓடிவிட்டீர்கள் என்பது அவர்களுக்குத் தெரியும்!"

"ஆகா! இந்தச் சொத்துக்களுக்காகவா இந்த வேட்டை ஆடுகிறார்கள்?"

"அது ஒரு முக்கியக் காரணம். அதைத் தவிர, மற்றொரு காரணமுண்டு. சுரதாணியின் மரணத்திற்குப் பிறகு அவள் தந்தை மனம் ஒடிந்து பாரசீகம் போய்விட்டார். அவளது உறவினர் மூவர் டில்லிப் படையில் சின்னத் தளபதிகளாக அங்கம் வகிக்கி றார்கள். அவர்கள் உங்கள் அரங்கன் விக்கிரகத்தை மாயச் சிலையாக நினைக்கிறார்கள்; அதில் ஏதோ வசிய சக்தியை நீங்கள் கலந்து வைத்திருப்பதாக நினைக்கிறார்கள். ஆகவே அதைத் தேடி அடைந்து அதை உருக்கி உலோகமாக்குவது என்று திட்டமிட்டு வந்துள்ளார்கள். அவர்கள் விருப்பப்படிதான் இப்போது மதுரை புதுக்கோட்டைச் சீமைகளிலெல்லாம் டில்லி



வீரர்களும், உளவாளிகளும் அதைத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள்."

குலசேகரன் மௌனமானான்.



ஒரு இளங்காலை நேரத்தில், திருக்கோட்டியூர் என்னும் புனிதத் தலத்தின் வீதியில், ஒரு பெண்ணும் மூன்று ஆடவர்களும் திருமொழியைப் பாடிக்கொண்டு மெள்ள நகர்ந்துவந்து கொண்டிருந்தார்கள்.

காஷாயம் போட்டுத் தங்களை மறைத்து இருந்த அவர்கள் அடிக்கடி, "ஸ்ரீமதே ராமானுஜாய நமஹ!" என்று கூறி கொண்டிருந்தார்கள்.

ஒரு ஆச்சர்யம்! வீதியில் ஈ காக்கை கூடத் தென்படவில்லை. மருந்துக்கு ஒரு மனிதரைக் கூடக் காணோம்.

அதைப் பொருட்படுத்தாமல் அந்த வீதிகளில் அவர்கள் பாடிக்கொண்டே நடந்தார்கள்.

பல வீதிகளைச் சுற்றிய பின் களைப்புறும் வேளையில், கும்பலில் ஒருவர், "அதோ!" என்று கூறினார்.

அவர் காட்டிய திசையில் ஒருவன் தூரத்தில் குதிரை மீது வந்து கொண்டிருந்தான்.

"யார் இவன்? எதிரி உளவாளியாக இருப்பானோ?" என்று ஐயுற்ற நால்வரும் அப்படியே நின்று விட்டார்கள்.

குதிரை நெருங்கி வர வர அது குலசேகரன் என்று தெரிந்தது.

அவன் வருவதைக் கண்டு அவர்கள் நால்வரும் தயங்கி நின்று ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

குலசேகரன் நேராக அவர்களிடம் போய், "இதென்ன நகரமா? அல்லது வேதாள உலகமா? யாரையும் இங்கே காணோமே! எங்கே போனார்கள்?" என்று கேட்டான்.

அவர்கள் உடன் மறுமொழி கூறவில்லை.

"இதென்ன, இவர்கள் கூடப் பேசப் பயப்படு கிறார்கள்?" என்று நினைத்து அவர்களை உற்றுப் பார்க்கும் போது, பழகியவைபோல் இரு விழிகள் அவனுக்குத் தென்பட்டன.

அது யாருடைய விழிகள் என்று யோசிக்கும் வேளையில் நால்வரும் ஒருவரை ஒருவர் இழுத்துக் கொண்டு ஓடப் பார்க்கவே, "வாசந்திகா!" என்று அழுத்தமாகக் கூவினான் குலசேகரன்.

"சுவாமி!" என்று மறுமொழி கூறிக்கொண்டு, மற்றவர்கள் தடுப்பதையும் பொருட்படுத்தாமல் கையை உதறிவிட்டு அவனை நோக்கி ஓடி வந்தாள் வாசந்திகா.

"வாசந்திகா! இது என்ன? அவர்கள் யார்? நீங்கள் எல்லோரும் இங்கே ஏன் வந்தீர்கள்? அவர்கள் ஏன் இப்போது ஓடுகிறார்கள்?" என்று சரமாரியாகக் கேட்டான் குலசேகரன்.

"சுவாமி! அடியாளைப் பொறுத்தருளுங்கள்! அவர்கள் யாவரும் அரங்கன் ஊர்வலத்தார்தான்! ஊர்வலம் இந்த ஊர்ச் சோலைகளின் மறைவில் இருக்கிறது. இப்போது நாங்கள் போகும் ஊர்கள் எல்லாம் சூன்யமாகவே இருக்கின்றன. டில்லிப் படைகளின் சூறைக்குப் பயந்து எல்லோரும் தங்கள் வீடுகளைத் துறந்துவிட்டு ஓடி விட்டிருக்கிறார்கள்.! இந்தத் திருக்கோட்டியூர் நகரமே சூன்யமாக இருக்கிறது. இந்த அதிசயத்தை எப்போதாவது பார்த்தது உண்டா?"



"ஊர்களும் நகரங்களும் வெறுமையாக இருப்பதால் கையில் பணம் இருந்தும், உணவுப் பொருள்கள் எதுவும் கிடைக்கமாட்டேன் என்கிறது. இதனால் கூட்டத்தில் பலரும் நலிந்துவிட்டார்கள்."

"உலகாசிரியரின் திருமேனி கூட இப்போது பாங்காக இல்லை. அவருக்கு நோய் அதிகரித்துள்ளது. திருவுடல் மிக்க மெலிவு கண்டிருக்கிறது. அவருக்குக் கஞ்சியாவது தரவேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இந்த நகருக்குள் நாங்கள் பிரவேசித்துள்ளோம்."

"இங்குள்ள வீடுகளில் யாராவது இரகசியமாக வாழலாம், அவர்களைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பிரபந்தத்தை உரக்கப் பாடிக்கொண்டு வீதிகளில் நடந்துவருகிறோம். பெண் குரல் கேட்டால் தான் யாராவது தைரியமாகக் கதவைத் திறப்பார்கள் என்று நினைத்து என்னையும் ஊர்வலத்தார் இந்தக் கும்பலுடன் அனுப்பினார்கள்" என்று நிறுத்தினாள் வாசந்திகா.

"இங்கே வந்தது சரி! ஆனால் என்னைக் கண்டதும் எல்லோரும் ஏன் ஓட்டம் பிடிக்கிறார்கள்?" என்றான் குலசேகரன்.

"அதுவா சுவாமி!" என்று தயங்கினாள் வாசந்திகா. "சுவாமி! குறளன் தங்களிடம் சண்டை போட்டுவந்து இங்கே ஊர்வலத்தார் மத்தியில் எல்லாம் தங்களைப் பற்றிய ஒரு தவறான அபிப்பிராயத்தைப் பரப்பி விட்டார். டில்லி ஒற்றனுக்கு நீங்கள் ஆதரவு தந்து விட்டீர்கள் என்றும், அதனால் ஊர்வலத்துக்கே பெரும் ஆபத்து விளையவிருக்கிறது என்றும் கூறிவிட்டார். அவர் சொன்னதை எல்லோரும் நம்புகிறார்கள். இதன் காரணமாக, தங்கள் கண்களில் கூடப்படாமல், அரங்கன் ஊர்வலத்தை அழைத்துச் செல்ல வேண்டும் என்று எல்லோரும் திட்டமிட்டு இருக்கிறார்கள். அதனால்தான் அவர்கள் மூவரும் தங்களைக் கண்டதும் ஓடுகிறார்கள்!

சுவாமி! சுவாமி! என்னைப் பொறுக்க வேண்டும். அவர்கள் தீர்மானத்திற்கு உடன்பட்டவளல்ல. நிச்சயம் உடன்பட்டவளல்ல!" என்று தழுதழுப்புடன் கூறி விசும்பினாள் வாசந்திகா!

குலசேகரன் அப்படியே ஸ்தம்பித்து நின்றான். கண்களில் புலபுல என்று நீர் வந்தது! நிற்க முடியாமல் கீழே ஒரு வீட்டுப் படி மீது மெள்ள அமர்ந்தான்.

"சுவாமி! சுவாமி!" என்று தழைந்து கெஞ்சிய வாசந்திகா அவன் முன்னால் மண்டியிட்டு அமர்ந்தாள்.

குலசேகரன் பேசவில்லை. அவன் மனம் கல்லாகக் கனத்தது. அவன் பார்வை வெறுமையாக மாறியது.

"வாசந்திகா!" என்றான் அவன்.

"சுவாமி!"

"இந்த முடிவைச் செய்தவர்கள் யார்?"

"பரிவார ஜனங்கள்தான் சுவாமி!?"

"உலகாசிரியர் சுவாமி இதை ஒப்புக் கொண்டாரா?"

"அவருக்கு எதுவுமே தெரியாது! அவர்தான் நோய் வாய்ப்பட்டுப் படுத்திருக்கிறாரே!"

குலசேகரன் மௌனமானான்.

அவன் கையிலிருந்து உலகமே நழுவுவது போல் இருந்தது. எல்லாம் திடீரென சூன்யமாகியது. காஞ்சியில் இருந்து புறப்பட்டதிலிருந்து தனக்கு நேர்ந்தவைகளை எல்லாம் எண்ணிப் பார்த்தான். திருவரங்கத்தின் வீதியில் யாளி முகப்புப் படிக்கட்டின் மீதேறி, "அம்மா!" என்று அழைத்துத் தாயாரின் முன்னால் நின்றதை நினைத்துப் பார்த்தான்.



அந்தக் கட்டத்திலிருந்து அவன் வாழ்க்கை தாயாருடனேயே திரும்பி இருக்கக் கூடாதா? "நகரம், கோவில் என்று ஏதேதோ நினைத்து அவற்றைக் காப்பதற்காக ஏன் ஓடினேன்? தாயை இழந்ததுதானே மிச்சம்! என் அம்மா! அருமை அம்மா! உன்னிடம் ஒரு வார்த்தை அதிகமாகப் பேசாமல் போனேனே! இந்த ஆற்றாமையை நான் எங்கு சொல்லி அழுவேன்? நீ இருந்தாலாவது இம்மாதிரி வேளையில் எனக்கு இதம் தருவாயே! நான் உன்னை விட்டுவிட்டு இப்படி ஓடி ஆடி பாடுபட்டதற்கெல்லாம் பலன் இப்போது கண்டு விட்டேனே! அம்மா! நான் புறக்கணிக்கப்படுகிறேன். உதறித் தள்ளப்படுகிறேன். ஊருக்கு உழைத்த பலன் இதுதான்! இதுதான்!"

நொந்த அவன் நெஞ்சத்தின் விசும்பல் கண்ணீராக வெளிவந்தது. எதிரே வாசந்திகா ஈரம் நிறைந்த கண்களுடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் உன்மத்தமாகவே அமர்ந்திருந்தான்.

வெகு நேரம் அப்படியே இருந்த பிறகு, வாசந்திகாவின் குரல் அவனுக்குப் புது ஒலிபோல் கேட்டது. "சுவாமி! வாருங்கள்!" என்று கூறிக் கொண்டிருந்தாள் அவள்.

"எங்கே?" என்றான் அவன்.

"அரங்கன் ஊர்வலத்திற்கு!"

"இல்லை, நான் அங்கே வருவதற்கில்லை. நீ போகலாம்!" என்றான் அவன்.

"சுவாமி!" என்றாள் அவள்.

"இல்லை வாசந்திகா! நான் அங்கே வருவதற்கு இல்லை, வரவும் மாட்டேன். அவர்கள் விரும்பாத ஒரு

காரியத்தைச் செய்ய மாட்டேன். நீ போகலாம். இது என் உறுதியான தீர்மானம்! என் மனத்திற்கு அமைதி கொடுக்க விரும்பினால் நீ அவசியம் போகவேண்டும்!" என்றான் அவன்.

பிறகு அவள் எழுந்திராததைப் பார்த்து, "ம்" என்று அழுத்தமாகக் குரல் கொடுத்தான்.

அவள் எழுந்தாள். கண்ணீர் சோரும் விழிகளுடன், "வருகிறேன் சுவாமி!" என்றாள். பிறகு திரும்பிப் பார்த்தவாறு மெள்ள நடக்க ஆரம்பித்தாள்.

குலசேகரன் மனத்தில் ஒரு கனமான பாரம் சூழ்ந்தது. தலையை இறுகப் பற்றிக் கொண்டு கண்களை மூடினான்.

அவன் மனம் இருட்டுள் அமைதியைத் தேடி எங்கெல்லாமோ துழாவி ஓடியது.

முன்பு இதுபோன்ற ஒரு துக்கமான நிலையில் இருக்கும்போது, யாருடைய வார்த்தைகளோ இதமாக அவன் மனதில் பாய்ந்து, அவனுக்கு ஒரு அமைதி அளித்ததை நினைத்துப் பார்த்தான்.

யாருடைய வார்த்தைகள் அவை?

ஆமாம், தாயாரின் ஈமக் கடன்களை நிறைவேற்றி வைக்கக் காவேரிக் கரைக்கு சென்றிருந்தபோது கேட்ட வார்த்தைகள் அவை!

"ஆர்ய! அனேனைவ மார்கேன ஸ்ரீரங்கேசஸ்ய பவனி அகச்சத்?"

(ஐயா! இந்த மார்க்கம் வழியாகத்தானே ரங்கநாதரின் பவனி சென்றது?)

தூரத்துக் காவேரிக் கரையிலிருந்து, அதன் தளிரான அலைகளைத் தொட்டுத் தவழ்ந்து வரும் தென்றல் போலும் அந்த இதமான வார்த்தைகள் எங்கேயோ ஒரு புதைந்த காலத்திலிருந்து மெள்ள நலுங்கி வந்து அவனது சோர்ந்த மனத்தில் அமுதமாகப் பாய்ந்தன. —



செந்துவர், செந்தழல், செந்துளி! யாவும் அவள்தான்!

குலசேகரன் மனத்தில் ஒரு அமைதியும் ஒரு தாபமும் ஒருங்கு ஏற்பட்டன.

அவனை அறியாமல் அவன் மனம் முணு முணுத்தது.

'ஹேமலேகா!'

# 32

திருக்கோட்டியூரில் குலசேகரனிடம் இருந்து தப்பித்து ஓடிய மூன்று பரிசனங்களும் நகரத்தின் புறத்தே விரைந்து, சோலைகளில் புகுந்து, இண்டு இடுக்குகளில் நுழைந்து, அரங்கன் தங்கியிருக்கும் இடத்தை அடைந்தார்கள்.

அங்கே நின்றிருந்த குறளனையும் இதரரையும் நோக்கி நடந்ததை எல்லாம் விவரித்தார்கள்.

அவர்களும், உடன் மற்றவர்களைக் கலந்து ஆலோசித்து குலசேகரனுக்கு இப்படிப் புத்தி விபரீதம் ஆகியதே என்று நொந்து கொண்டு, எப்படியும் அரங்கன் இருக்கும் இடத்தை மச்சக்காரனுக்குக் காட்டிக் கொடுக்கக் கூடாது என்று தீர்மானித்து, ஊர்வலத்தை அடுத்த கணமே கிளப்பி மேலே கொண்டு போக உத்தரவிட்டார்கள்.

அப்போது பரிவாரங்களில் ஒருவர் வெய்யில் முன்னால் நின்று, தம் நிழலை அளந்து காலத்தைக் கணக்கிட்டு, "ஐயா, இப்போது பழுத்த இராகுகாலம்

ஆயிற்றே!" என்று கூற, "ஆபத்துக்கு இராகுகாலம் ஏது?" என்று கூறி குறளன் எல்லோரையும் அவசரப்படுத்தி விட்டான்.

'எச்சரிக்கை' என்று கூவி, ஸ்ரீபாதந்தாங்கிகள் அரங்கனது பல்லக்கைத் தோளில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டார்கள்.

புறப்பட்ட சில கணங்களில் விடுவிடென்று ஓட ஆரம்பித்தார்கள். பல்லக்கின் பின்னே பரிவார ஜனங்கள் யாவரும் பறந்தோடிச் சென்றார்கள்.

பிள்ளை உலகாசிரியர் நோய் வாய்ப்பட்டிருந்ததால் அவரைத் தூளி போன்ற டோலாவில் அமரச் செய்து இருவர் சுமந்து கொண்டு போனார்கள். டோலாவைச் சுற்றி உலகாசிரியரின் சீடர்கள் விரைவாகப் பறந்து சென்றார்கள்.

போகப் போக, "சீக்கிரம், சீக்கிரம்" என்று முடுக்கிக் கொண்டே இருந்தான் குறளன்.

ஊர்வலத்தில் விறுவிறுப்பு ஏற, ஏற கருவேல மரங்கள், எல்லாம் கடுகிப் பின்நோக்கி ஓடிக் கொண்டிருந்தன.

வியர்வை பிழிந்து வழிய, தங்கள் பசி, தாகம், களைப்பு எதையும் பொருட்படுத்தாமல் ஸ்ரீபாதந் தாங்கிகள் ஓடிக் கொண்டே இருந்தார்கள்.

போகப் போக அவர்கள் செல்லும் பாதையின் அகலம் சுருங்கிக் கொண்டே வந்தது.

முள் மரங்கள் நெருங்கி நின்றதால், அவற்றின் கிளைகள் ஊர்வலத்தார் மீது அடிக்கடி உராய்ந்து கொண்டே இருந்தன.

அநேகர் உடல்களில் கீறல்கள் விழுந்து இரத்தமும் கசியலாயிற்று. அவற்றைப் பொருட்படுத்தாமல் அவர்கள் ஓடியவாறு இருந்தார்கள்.



முப்பது பேர் கொண்ட அந்த ஊர்வலம், இவ்விதமாக அரை நாழிகை நேரம் பிரயாணம் செய்தது.

திடீரென்று அப்போது, "ஆ" என்ற ஒரு அலறலும், அதைத் தொடர்ந்து "நிறுத்துங்கள், நிறுத்துங்கள்" என்ற குரல்களும் எழுந்தன.

ஸ்ரீபாதந்தாங்கிகளில் ஒருவர் சுருண்டு கீழே விழ, மற்ற மூவரும் அவரை மிதித்து ஏற, அரங்கனது பல்லக்கு அபாயகரமாய் ஆடிவிட்டு, நுனி இழையில் கவிழாமல் தப்பியது!

அந்த காட்சியைக் கண்டு எல்லோரும் கதிகலங்கி நின்றார்கள். சிலர் ஓடிப் போய், கீழே கிடந்த ஸ்ரீபாதந் தாங்கியைத் தூக்கிச் சற்று அப்பால் நிழலில் கிடத்தி னார்கள். அவரது முகத்தில் நீரைத் தெளித்தார்கள்.

பல நாட்கள் சரியாக உண்ணாததால் ஏற்பட்ட பசி மயக்கந்தான் அது என்பதை எல்லோரும் உணர்ந்து கொண்டார்கள்.

அதை நினைத்தபோது எல்லோருமே திக்பிரமித்து அப்படி அப்படியே நின்றுவிட்டார்கள்.

அந்தக் கருவேலங்காட்டில், குட்டையும் கறுப்பு மான மரங்கள் நடுவில், கோடையின் கானல் தீ வரி வரியாக மேலே எழ, அந்தச் சூழ்நிலையில் பரிவாரங்கள் சோர்ந்து நிற்கும் காட்சியே ஒரு சோகக் காட்சியாக இருந்தது.

உலகாசிரியரையும், குறளனையும் பலரும் சூழ்ந்து கொண்டு, "சுவாமி! பரிவாரங்களில் எல்லோரும் உணவருந்தி பல நாட்கள் ஆகிவிட்டனவே. இந்தக் கோடையில் இனி மேலும் அவர்களை நடக்க வைத்தால் நிச்சயம் இறந்து போவார்கள். ஆகவே இதற்கு ஏதாவது பரிகாரம் காண வேண்டுமே?" என்று முறையிட்டார்கள்.

சோகத்தில் ஆழ்ந்திருந்த உலகாசிரியரும் திருக்கண்களில் முத்துக்கள் சொரிந்துவிழ, குறளனை நோக்கி, "குறளா! ஏதாவது செய்வாயாக! தண்டு இறங்கி, உணவு ஏதாவது கிடைக்கிறதா என்று பார்ப்பாயாக!" என்று கூறினார்.

குறளன் உடனே ஆட்களை நாலாபக்கங்களிலும் அனுப்பிவைக்க, தென் திசை போய் வந்தவன், அருகில் ஒரு கிராமம் தென்படுகிறது என்று அறிவித்தான்.

பின்னர் ஊர்வலத்தை அழைத்துக் கொண்டு, ஸ்ரீபாதந்தாங்கியையும் சுமந்து கொண்டு, குறளன் மெள்ள மெள்ள அந்தக் கிராமத்திற்குப் போய்ச் சேர்ந்தான்.

ஊரின் அருகிலுள்ள பூவரசுத் தோப்பில் தண்டு இறங்கி, அந்தக் குளிர் நிழலில், "அப்பாடா!" என்று அமருங்காலையில், ஊரின் சுற்றுப்புறத்தைக் கண்ணுற்ற பலரும், "ஐயோ இதென்ன?" என்று கூவினார்கள்.

ஊரில் உள்ள புழக்கடையில் கட்டியிருந்த கொடிகளில் பல மிருகங்களின் பச்சைத் தோல்கள் தொங்குவதைக் கண்டு, "ஐயோ! இது ஒரு வேடவர் கிராமம் ஆயிற்றே!" என்றார்கள் பலர்.

"இங்கேயா வந்து சேர்ந்தோம்? உடனே புறப்படுவோம்!" என்றான் குறளன்.

அவன் உத்தரவுப்படி சிலர் எழுந்திருக்க மற்றவர்கள், சக்தியில்லாது கீழேயே அமர்ந்து இருந்தார்கள்.

அவர்களில் பலரும், "ஐயா, எங்கள் உயிர் போகிறதே! உணவு இல்லாது நாங்கள் நகர வழியில்லை! பசி குடலை எரிக்கிறதே! இனி நகர்ந்தால் செத்து விடுவோம்!" என்று கூறினார்கள்.



ஒரு குரலைத் தொடர்ந்து, பல குரல்களும் எழும்பவே, எழுந்திருந்த சிலர்கூட, கீழே அமர்ந்து விட்டார்கள்! கூட்டத்தினரிடமிருந்து இப்படியொரு எதிர்பாராத எதிர்ப்பைக் கண்ட குறளன் திகைத்து நின்றுவிட்டான்.

அவன் கலங்கி நின்றபோது, அவனை நோக்கிப் பலர், "ஐயா! நா வறள்கிறது! தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்யுங்களேன்!" என்று கத்தினார்கள்.

அதைத் தொடர்ந்து எங்கும், "தண்ணீர், தண்ணீர்" என்று கூக்குரல் கிளம்பியது.

இனி வரம்பு மீறிவிட்டது என்று உணர்ந்த குறளன் தன்னுடன் சிலரை அழைத்துக் கொண்டு வேடுவர் குடியிருப்பை நோக்கி நடந்து சென்றான்.

அவ்வளவில், உலகாசிரியரின் சீடர்கள் எல்லோரும் அவரைச் சூழ்ந்து கொள்ள, அவர்களுள் ஒருவரான கூர குலோத்தமதாச நாயனார் என்பார், "சுவாமி! இதென்ன சோதனை? அரங்கருக்கும் கூட இப்படி அமுது கிடைக்காத நிலை ஏற்படுமோ?" என்று அங்கலாய்த்தார்.

பூவரச நிழலில் உத்தரியம் விரித்து அதில் திருமேனியைச் சாய்த்திருந்த உலகாசிரியர் மெள்ளச் சிரித்து, "அப்பா! அரங்கருக்கு அமுது வேண்டும் என்றால் அதற்குப் பஞ்சம் உண்டோ? பசி, களைப்புப் போன்ற உடல் உபாதைகளுக்கு அப்பாற்பட்டவர் அன்றோ அவர்! ஆகவே, இது அவருக்கு வந்திருக்கும் சோதனை அல்ல! அவர்மீது பக்தி பூண்டிருக்கும் நமக்கு ஏற்பட்டிருக்கும் சோதனை இது! நம் பக்திக்கே ஏற்பட்டிருக்கும் சோதனை இது! அரங்கனாருக்கு அமுது படைத்த பிறகே உண்ண வேண்டும் என்று விரதம் கொணடிருக்கிறோமே, அந்த விரதத்திற்கே ஏற்பட்டிருக்கும் சோதனை இது" என்று கூறினார்.

"சுவாமி!" என்றார் நாயனார். "அரங்கன்தான் நமக்கு இப்படிச் சோதனைகளைத் தரலாமோ?" என்று கேட்டார்.

"சோதனைகள்தான் பக்தியைப் புடமிடுகின்றன. பகவான் மீது பிரேமையுள்ளவனுக்குச் சோதனைகள் யாவும் மகிழ்ச்சி தரும் நினைவுத் தூண்டல்கள்! பக்தனது பிரேமையை சுடர்க்க வைக்கும் நினைவுத் தூண்டல்கள் அவை!" என்று கூறினார் ஆசிரியர்.

வேடவர் குடியைச் சேர்ந்த குறளன் அங்கு உள்ளோரிடம் தண்ணீரும், தானியங்களும் வேண்டு கையில், குடியிருப்பின் தலைவன் அவனை யார் இன்னார் என்று விசாரித்தான்.

தலைவனிடம் உண்மையை மறைக்காமல் சொல்ல வேண்டிய நிலைவரவே, குறளன் யாவற்றையும் கூறிவிட வேடர் தலைவனும் ஆச்சரியத்துடன் எழுந்து குடியிருப்பு ஜனங்களை எல்லாம் அழைத்தான்.

யாவரையும் திரட்டி குடியிருப்பில் உள்ள புல்லரிசி, தினை, பனங்கிழங்கு வகைகளை எல்லாம் சேகரித்துக் கொண்டு, அரங்கன் தங்கியிருக்கும் பூவரசுத் தோப்புக்குள் பரிவாரங்களுடன் நுழைந்தான்.

அரங்கன் பல்லக்கு முன்னால் தனது சேகரிப்பு களைக் காணிக்கைகளாக வைத்து, அவனும் மற்ற எல்லாருமாகச் சேர்ந்து வணங்கி எழுந்தார்கள்.

பிறகு பல்லக்கு முன்னால் ஆண்களும் பெண்களு மாகக் கலந்து நின்று, கைகளைத் தட்டிக் கொண்டு வேட்டுவ நடனம் ஒன்றை ஆடினார்கள்.

அது முடிந்ததும் உலகாசிரியர் முன் சென்று கதலி, மா வகைகளைக் காணிக்கைகளாக வைத்து வணங்கி எழுந்து, விடைபெற்றுத் தங்கள் குடியிருப்புக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.



இதற்குள் குறளன், குடியிருப்பின் ஊறணியில் இருந்து தண்ணீரும், வேடவர் குடியிலிருந்து காய்ச்சிய பாலையும் எடுத்து வந்தான். மயக்கத்தில் விழுந்திருந்த ஸ்ரீபாதந்தாங்கிக்குப் பாலைக் கொடுத்து அதை அருந்தச் செய்தான்.

அதை அருந்திய அந்தப் பல்லக்குச் சுமப்பவர், கால் நாழிகை மயங்கிய நிலையில் இருந்தார்.

பிறகு, கடக் என்று பாலை எல்லாம் வாந்தி எடுத்தார். அதற்குள் அவரது மூச்சு குறுக ஆரம்பித்தது.

அவரது புலம்பலைக் கேட்ட ஊர்வலத்தார் மனத்தில் ஒரு கலக்கம் விழுந்துவிட்டது.

எல்லோரும் மௌனமானார்கள்.

இனி என்ன நடக்குமோ என்ற கவலையில் ஆழ்ந்துவிட்டார்கள்.

அப்போது ஒரு விசும்பல் சத்தம் பலமாகக் கேட்கவே, எல்லோரது பார்வையும், அது வந்த பக்கம் திரும்பியது.

அங்கு ஒரு பூவரச மரத்தின் ஓரமாக, வாசந்திகா சோகத்துடன் நின்று கொண்டிருந்தாள்.

வேலங்காட்டின் பகுதியில் ஊர்வலத்தார் சென்ற கால், தடங்களைப் பார்த்தவாறு வந்து அந்தப் பூவரசுத் தோட்டத்தை அடைந்திருந்தாள்.

வேட்டுவ நடனம் நடக்கும்போது வந்து சேர்ந்த அவள் அங்கு நடக்கும் யாவற்றையும் மௌனமாகக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

விசும்பல் பொறாமல் எழுந்த அவள், "பெரியவர்களே!" என்று அழைத்துக் கொண்டு குறளன் முன்னால் போய் நின்றாள்.

அவள் குரல் தேம்பியது.



"பெரியவர்களே! நான் வந்து சேருவதற்கு முன் ஊர்வலத்தைக் கிளப்பிவிட்டீர்கள்! சரி! அது ஒரு பொருட்டில்லை. ஒரு அபலையின் பொருட்டு அரங்கன் நிற்க வேண்டியதில்லை. ஆனால் பெரிய சோதனைகள் இப்போது இந்த ஊர்வலத்தை, பின்தொடர்ந்து கொண்டிருக்கின்றன. இந்த நிலையில் அரங்கனைக் காப்பாற்றுவதற்கு எல்லோருடைய உதவியும் ஒத்தாசைகளும் தேவையாகின்றன. இந்நிலையில் குலசேகரன் போன்றவரை நீங்கள் புறக்கணித்தது பெரும் தப்பிதம்!" என்று கூறினாள்.

"வாசந்திகா!" என்றான் குறளன். "நீயும் குலசேகரனுடன் தங்கிவிட்டாய் என்று சொல்லக் கேட்டுத்தான் ஊர்வலத்தைக் கிளப்பினோம். இல்லாவிட்டால் இருந்திருப்போம். தவிர உனக்கே தெரியும்! வேற்று சமயத்தவரை அழைத்து வந்து அரங்கனைக் காட்டுவதற்குக் குலசேகரன் தீர்மானித்து இருந்தார். அதை ஊர்வலத்தார் ஒத்துக் கொள்ள வில்லை" என்று கூறினான்.

"ஒத்துக் கொள்ளாத ஊர்வலத்தார் யார்? ஏன் அவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை? வேற்று சமயத்தைச் சேர்ந்தவர் ஒருவர் அரங்கனைப் பார்க்கக் கூடாதா? அதில் என்ன தப்பு கண்டார்கள்? இப்போது வேடவக் குடிகள் வந்து பார்த்தார்களே! அவர்கள் வைணவர்கள் அல்லவே! காட்டுத் தெய்வங்களைக் கும்பிடுகிறவர்கள் ஆயிற்றே. அவர்கள் தரிசிக்கும்போது மற்ற சமயிகள் ஏன் தரிசிக்கக் கூடாது? அதுவும் அவர்களிடம் அதற்கான ஒரு பெரிய ஆசை இருக்கும்போது?"

"பெரியோர்காள்! அடியாள் சொல்வதைப் பொறுக்க வேண்டும். ஆபத்துக்கு நாம் எதையும் செய்கிறோம். பரிசுத்தமான காவிரி நீர் அன்றி வேறு எதுவும் குடியாதவர் நாம்! இன்று அதே பரிவராங்கள் வேட்டுவக் குடியின் ஊறணி நீரைக் குடித்தார்கள். அவர்கள் தந்த தானியங்களை இதோ இன்னும் சிறிது நேரத்தில் வேக

வைத்து உண்ணப் போகிறீர்கள்! தேவை வரும்போது காவிரி நீரை நீங்கள் தேடிப் போகவில்லை. உணவுகளை யார் கொடுத்தார்கள் என்றும் கவலைப்படவில்லை."

"அப்படியிருக்கும்போது ஒரு புற சமயி அரங்கனை ஒரு ஆர்வத்தில் வந்து பார்க்க நினைத்தால் அது தவறல்ல" என்று கூறினாள்.

உடன் குறளன், "அம்மா! பொறுக்க வேண்டும்! அந்த மச்சக்காரன் புற சமயி மட்டுமல்ல, எதிரியின் உளவாளியும் கூட!" என்றான்.

"அந்த விஷயம் குலசேகரனுக்கும் தெரிந்து இருக்குமே! எனக்குந்தான் தெரியும்! ஆனால் ஒரு விஷயத்தை மறக்காதீர்! நம் மூவரையும் அவர் ஒரு முறை காப்பாற்றினார். அது என்ன காரணத்திற்காக இருந்தாலும் அது ஒரு உதவிதான்! பேருதவி அது! அப்படிப்பட்டவரது ஒரு ஆசையை நிறைவேற்றுவது. அது என்ன பாதகத்தை விளைவித்தாலும் தவறே அல்ல! பாதகமும் நிச்சயம் விளையாது!"

"இப்போது ஊர்வலத்திற்குச் சோதனை மேல் சோதனை வந்து கொண்டிருக்கிறது. இந்த நிலையில் நமக்கு எல்லோருடைய உதவிகளும் தேவை. முக்கியமாக குலசேகரனது உதவி அவசியம் தேவை. பஞ்சுகொண்டானே அவரது திறமையைக் கண்டு அவரைத் தேர்ந்தெடுத்து இருக்கிறார். அவரை வேண்டாதவர் போல் ஒதுக்குவது தவறு!" என்று கூறினாள்.

அதைத் தொடர்ந்து ஊர்வலத்தார்களிடையே ஒரு வாக்குவாதம் எழுந்தது.

வாசந்திகாவின் பக்கம் பலரும் பேசினார்கள். "அவசியம் குலசேகரனை அழைக்க வேண்டும்!" என்று கூறினார்கள்.



ஒரு நிலையில் எல்லோரும் சேர்ந்து "குலசேகரனைக் கொண்டு வாருங்கள்" என்று முறையிடவே குறளன் சடக்கென்று எழுந்து, "பெரியோர்களே! குலசேகரனைக் கொண்டு வருவதை பற்றி எனக்கு ஆட்சேபணை கிடையாது. ஆனால் மச்சக்காரன் நாம் இருக்கும் இடத்தைத் தெரிந்து கொள்வதால் பெரிய ஆபத்து விளையும் என்றுதான் நான் கூறினேன். இப்போதும் அதைத்தான் சொல்கிறேன். அவர்கள் இருவரையும் அழைத்து வந்தால் வாருங்கள்! ஆனால் அப்படிச் செய்வதால் நான் இந்தக் கூட்டத்தை விட்டுப் போய் விடுவேன்." என்றான்.

அப்போது தடதடவென்று பேரோசை சுற்றிவரக் கேட்க ஆரம்பித்தது.

# 33

பேரோசை தடதட என்று எழுந்ததும் எல்லோரும் வடதிசை மேட்டின் மீது ஏறி நோக்கினார்கள்.

தூசுப் படலத்தைக் கனக்க எழுப்பிக் கொண்டு நூறு குதிரை வீரர்கள் வேகமாக வந்து கொண்டு இருந்தார்கள்.

"ஐயோ. டில்லி வீரர்கள்!" என்று கத்தினார்கள் பரிவாரங்கள்.

உடனே ஒரு பீதி அங்கே திடீரென்று சூழ்ந்தது.

என்ன செய்வதென்று அறியாது பலர் அங்கும் இங்கும் ஓடினார்கள்.

அதை எல்லாம் பார்த்து, "அஹோ!" என்று கத்தினான் குறளன்.

எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள்.

"பல்லக்குடன் வேடவர் குடிக்கு ஓடுங்கள்! சீக்கிரம்!" என்று கத்தினான் அவன்.

அடுத்த கணத்தில் ஸ்ரீபாதந்தாங்கிகள் விருட்டென்று பாய்ந்து, அரங்கனது பல்லக்கை ஒரே மூச்சில் அள்ளிக் கொண்டு ஓட ஆரம்பித்தார்கள்.

அவர்களைத் தொடர்ந்து பரிவாரங்களும் ஓடினார்கள். திருமேனி மீது நோவு சாத்திக் கொண்டிருந்த பிள்ளை உலகாசிரியர் பூவரசு நிழலிலேயே தங்கிவிட அவரைத் தொடர்ந்து அவரது சீடர்களும்,. சில பெரியவர்களும் தங்கிவிட்டார்கள்.

நோய்வாய்பட்டு இருந்த ஸ்ரீபாதந்தாங்கியும் அங்கேயே தங்க வேண்டி வந்தது. இத்தனை பேர்களுக்கும் அரவணைப்பாக குறளனும் அங்கே தங்கிவிட்டான்.

குதிரைக் குளம்புகளின் பேரோசை மிகுந்து கொண்டே வந்தது. அடுத்த சில கணங்களில் டில்லி வீரர்கள் யாவரும் அந்தப் பூவரசத் தோப்பில் புகுந்து, பரிவாரங்களை அட்டகாசமாய் வளைத்து நின்றார்கள்.

குதிரைப் படையின் தலைவனானவன், "யார் நீங்கள்?" என்று கடுமையாகக் கேட்க, "யாத்திரிகர்கள்!" என்று மறுமொழி கூறினான் குறளன்.

"எங்கே போகிறீர்கள்?"

"இராமேசுவரம் போய்க் கொண்டிருக்கிறோம்"

"ஹஹ்ஹா" என்று சிரித்தான் தலைவன். "நீங்கள் சொல்வது பொய். எனக்கு அது தெரியும்" என்று கூறினான்.



"ஐயா, நான் சொல்வதை நம்புங்கள். நாங்கள் இராமேசுவரந்தான் போய்க் கொண்டிருக்கிறோம்" என்றான் குறளன்.

"சட்! பேசாதே! இராமேசுவரம் போகும் வழி அங்கே தள்ளி இருக்கிறது. எனக்குத் தெரியாதா? இங்கே ஏன் வந்தீர்கள்? நீங்கள் யாவரும் திருவரங்கத்திலிருந்து வரும் ஊர்வலத்தார்தானே?" என்றான் தலைவன்.

அந்தக் கேள்வியில் ஒரு கணம் கலங்கி நின்ற குறளன் சமாளித்து, "ஐயா! எங்களில் இருவர் நோய் வாய்ப்பட்டார்கள். பலர் தண்ணீருக்காக அல்லல் இட்டார்கள். அதனால்தான் நிழலும் நீரும் உள்ள இடம் தேடி இங்கு வந்தோம்" என்று கூறினான்.

அதை நம்பாத தலைவன் குறளனை வேண்டும் என்றே தவிர்த்து, மற்றவர் ஒவ்வொருவரையுமாக விசாரித்து வந்து, கடைசியில் உலகாசிரியர் படுத்து இருக்கும் பக்கம் வந்து, "ஹேய் எழுந்திரு!" என்றான்.

"உன்னைப் போன்ற நாமம் தரித்தவர்கள் பொய் சொல்லமாட்டார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். சொல்லு! நீங்கள் எல்லோரும் யார்? எங்கே புறப்பட்டீர்கள்?" என்று கேட்டான் அவன்.

உலகாசிரியரும் மெள்ள எழுந்து, "நாங்கள் வைணவர்கள் அப்பா! அதற்கு மேல் எதுவும் சொல்லுவதற்கில்லையப்பா!" என்று கூறினார்.

"சொல்ல மாட்டாயா? அவ்வளவு தைரியமா?" என்று கையிலுள்ள சாட்டையை ஓங்க, உடன் "ஐயோ!" என்று கூவிக் கொண்டு, சீடர்கள் பதைபதைத்து உலகாசிரியரின் திருமேனியைச் சூழ்ந்து கொள்ள, குறளன் ஆவேசம் வந்தவன் போல் ஆசிரியரின் முன்னால் ஓடி நின்று, "தலைவா! அடிப்பதானால் என்னை அடி! அவரை அடிக்காதே!" என்று கூவினான்.

தலைவனுக்குக் கோபம் அதிகமாகியது. சாட்டையை வேகமாக ஓங்கி குறளனது முதுகில் சுரீர் என்று இழுத்தான்.

பிறகு குதிரையை முன்னும் பின்னும் ஓட்டி குறளனது முதுகில் வீச் வீச் என்று மேலும் அடிகளை உதிர்த்தான்.

அந்தக் காட்சியைப் பார்த்த உலகாசிரியர் மயங்கிக் கீழே விழுந்தார்.

அதைக் கண்டு பரிவாரங்கள் கொந்தளிக்கும் வேளையில் "ஐயா! பிரபு, நிறுத்துங்கள். நிறுத்துங்கள்!" என்று குரல் கேட்டது.

எல்லோரும் திரும்பியபோது வேடவர்குடிக்கு ஓடிய பரிவாரங்களில் ஒருவர், வேறு வழியாகத் திரும்பி வந்து அந்தத் தலைவன் முன் நின்றான்.

"என்ன விஷயம்?" என்று அலட்சியமாகத் திரும்பினான் தலைவன்.

"ஐயா! நாங்கள் வெறும் யாத்திரிகர்கள்தான். அரங்கன் ஊர்வலத்திற்கும் எங்களுக்கும் எவ்விதத் தொடர்பும் கிடையாது. இதை ஏற்கெனவே உங்கள் ஒற்றர் குழுத் தலைவனுக்கு நிரூபித்து விட்டோம்!" என்று கூறினான்.

"ஒற்றர் குழுத் தலைவனா? அது யார்?"

"அவர் பெயர் எமக்குத் தெரியாது. அடையாளம் தான் தெரியும்."

"என்ன அடையாளம்?"

"அவரது கன்னத்தில் பெரிய மச்சம் இருக்கும்." தலைவன் சற்றுத் திகைத்து நின்றான்.



பிறகு "அவரா?" என்று கூறிவிட்டு, "அவரிடம் நிரூபித்தீர்கள் என்பதற்கு என்ன அத்தாட்சி?"

"அவரேதான் அத்தாட்சி?"

"அவர் இங்கே இருக்கிறாரா?"

"பக்கத்தில் திருக்கோட்டியூரில் இருக்கிறார் இங்கே இருந்து அரை நாழிகைப் பயணந்தான்!"

தலைவன் யோசித்தான்.

"அவ்வரை நீ எனக்குக் காட்டுவாயா?"

"காட்டுகிறேன் வாருங்கள்!" என்றான் ஊழியன்.

பாதி வீரர்களை நிறுத்தி வைத்துவிட்டுத் தலைவன் புறப்பட்டான்.

எல்லோரும் கால் நாழிகையிலேயே திருக் கோட்டியூரை அடைந்தார்கள்.

வீதிகள் பலவற்றைச் சுற்றிப் பார்த்த பிறகு கடைசியில் ஒரு வீட்டுத் திண்ணை மேல் மச்சக்காரன் கிடப்பதையும், அவன் அருகில் குலசேகரன் நின்று பணிவிடை செய்து கொண்டிருப்பதையும் பார்த்தார்கள்.

அவர்கள் வந்து நிற்பதை பார்த்ததும் குலசேகரன் திடுக்கிட்டுத் திரும்பினான். வீரர்கள் நிற்பதையும் அவர்களிடையே அரங்கன் ஊர்வலத்தைச் சேர்ந்த ஒருவர் நிற்பதையும் பார்த்ததும் அவனுக்கு ஆச்சரியம் அதிகமாகியது.

அப்போது அந்த ஊர்வலக்காரர் குலசேகரனைப் பார்த்து, "ஐயா, இந்த டில்லிப் படைத்தலைவர் நாங்கள் யாவரும் அரங்கன் ஊர்வலத்தார் என்று நினைத்துச்

சந்தேகப்படுகிறார். நாங்கள் அவர்கள் அல்ல; வெறும் யாத்திரிகர்கள். இதை உங்கள் ஒற்றர் அதிபதியே நிரூபணம் செய்துவிட்டார் என்று கூறினோம். இதை உறுதிப்படுத்திக் கொள்ளவே இவர்கள் இங்கே வந்துள்ளார்கள்" என்று கூறினார்.

அவர் சொல்வதை எல்லாம் கூர்ந்து கேட்டுக் கொண்டிருந்த மச்சக்காரன் மெள்ள முணகியவாறு குலசேகரனை அழைத்தான். குலசேகரனும் அவன் அருகில் சென்று கவிழ்ந்து கிடந்த அவனை மெள்ள எடுத்து, சாய்ந்து அமர வைத்துப் பிடித்துக் கொண்டான்.

மச்சக்காரனின் முகத்தைப் பார்த்ததும், குதிரைமீது இருந்த டில்லித் தலைவன் கீழே குதித்து, "பிரபு!" என்று சொல்லித் தாழக் குனிந்து வணங்கினான்.

கண்களை பலமுறை கொட்டி அவனைப் பார்த்த மச்சக்காரன், அவர்களது பாஷையில் "ஏன் அப்பா! ஊர்வலத்தைப் போய் பிடி என்றால் வெறும் அன்னக் காவடிகளைப் பிடித்து வருகிறாயே! நான் ஏற்கனவே இவர்களைப் பின்தொடர்ந்து கண்காணித்தவன்தான். இவர்களுக்கும் ஊர்வலத்திற்கும் எந்த சம்பந்தமும் இல்லை. போகலாம்." என்று கண்டிப்போடு கூறினான்.

"போகிறேன் பிரபு! ஆனால் ஒரு விஷயம்! உங்கள் உடம்பெல்லாம் ஒரே இரணமாக இருக்கிறதே! யார் உங்களை அடித்தார்கள்? நீங்கள் இப்போது சுதந்திர மாகத்தானே இருக்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"நான் சுதந்திரமாகத்தானே இருக்கிறேன். இவர்கள் அனைவருமே எனக்கு உதவி புரிகிறார்கள். காட்டு வழியில் தனியாக வந்ததால் ஏற்பட்ட விளைவுகள் தாம் இந்த அடிகள்! கேவலம் ஒரு குடுவை மதுவுக்காகத் திருடர்கள் என்னை இத்தனை கோபமாக அடித்து விட்டார்கள். அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். போகலாம்!" என்றான்.



குதிரைத் தலைவன் நகரும்போது, "ஜாக்கிரதை! யாரையாவது சிறைபிடிக்கப் போகிறாய்! எல்லோரையும் விட்டுவிடு" என்று கூறினான் மச்சக்காரன்.

வீரர்கள் போனதுதான் தாமதம், குலசேகரன் மச்சக்காரனின் கைகளைப் பற்றிக் கொண்டு, "பெரியவரே! ஒரு நொடியில் விஷயத்தைப் புரிந்து கொண்டு, அதற்குத் தகுந்தாற்போல் நடித்து விட்டீரே! எனக்குக் கூட பல கணங்கள்வரை என்ன செய்வது என்றே தெரியவில்லையே! நீர் பெரிய அறிவாளிதான்; அந்த ஊழியர் அரங்கனது ஊர்வலத்தார் என்று எவ்விதம் கண்டு கொண்டீர்கள்? நீங்கள் அவரைப் பார்த்ததில்லையே!" என்று கேட்டான்.

"பிள்ளாய்! உன்னை அவன் அழைத்தவுடனே ஊர்வலத்தைச் சேர்ந்தவன் என்று புரிந்து கொண்டேன். நான் புரிந்து கொள்ளும் விதமாகவும் அவன் பேசினான். அவனிடம் இப்படிப் பேசும்படி யாரோ சொல்லி அனுப்பித்திருக்கிறார்கள். அவன் சொல்வதிலிருந்து அரங்கன் எங்கேயோ ஆபத்தில் சிக்கி மறைந்து இருக்கிறார் என்றும், பரிவாரங்கள் அவரைக் காப்பாற்ற ஒரு நாடகம் ஆடுகிறார்கள் என்றும் நான் புரிந்து கொண்டேன்."

"இதில் என் அறிவைவிட உங்கள் பரிவாரங்களின் புத்திசாலித்தனம் தான் அதிகம். ஒரு விஷயத்தில் எனக்குப் பெரிய மகிழ்ச்சி. அரங்கனைத் தப்புவிப்பதற்கு இந்த அற்பன் ஒரு சிறு காரணமாக விளங்கினேனே! அதுதான் என் மகிழ்ச்சி!" என்று கூறினான்.

உச்சிப்பொழுது தாண்டிய பிறகு, அரங்கனது ஊர்வலத்தார் பலர் குலசேகரன் இருக்கும் இடம் தேடி வந்தார்கள்.



அவனைக் கண்டு, "சுவாமி! தாங்கள் பழையபடி ஊர்வலத்தில் கலந்து கொள்ள வேண்டும்!" என்று கூறி வணங்கினார்கள்.

"நானா? நான் கலந்து கொள்வதற்கில்லை. என்னை அழைக்காதீர்கள்!" என்று கூறினான் குலசேகரன்.

"அப்படிச் சொல்லாதீர்கள், சுவாமி! நடந்ததை மறந்துவிடுங்கள்! தவறு செய்துவிட்டோம். இப்போது திருந்திவிட்டோம்" என்றார்கள் அவர்கள்.

அப்போது மச்சக்காரன், "பிள்ளாய்! அவர்கள் தவறு செய்தோம். திருந்திவிட்டோம் என்கிறார்கள். நீ உடனே போவதுதான் நல்லது!" என்று கூறினான்.

உடன் குலசேகரன், "பெரியவரே, என்னைப் பொறுத்தருள வேண்டும். தாங்கள் இல்லாமல் நான் அந்த ஊர்வலத்தை நெருங்கமாட்டேன் இது உறுதி" என்று கூறினான்.

"அவர் வரட்டும் சுவாமி! அவரையும் அழைத்துப் போகத்தான் வந்திருக்கிறோம்" என்றார் ஊர்வலத்தார்.

அதைத் தொடர்ந்து அவனுக்கும் அவர்களுக்கும் ஒரு வாக்குவாதம் நடந்தது.

முடிவில் ஊர்வலத்தார், "நீங்கள் இல்லாமல் இனி நகரமாட்டோம்" என்று கூற, உறுதியுடன் குலசேகரனும் மனம் கனிந்து ஊர்வலத்துடன் சேருவதற்கு ஒத்துக் கொண்டான்.

குதிரையை அவிழ்த்து அதன் மீது மச்சக்காரனைக் கவிழ்க்கப் படுக்க வைத்து, அதை மெதுவாக நடத்திச் சென்றான் குலசேகரன்.

மனத்தில் இனிமையும் அமைதியும் நிரம்பி வழிய, மச்சக்காரன், "பிள்ளாய்! என் மனம் நிறைந்திருக்கிறது. அரங்கனைக் காணப் போகிறேன்! நினைவில் அத்தனை இன்பம்!" என்று மகிழ்ச்சியோடு கூறினான்.

வேடவர் குடியை மெதுவாக அடைய இரண்டு நாழிகைகள் ஆகிவிட்டன. பாதிதூரம் வரை, "அரங்கன் ஊர்வலத்தை நெருங்கிவிட்டோமா?" என்று மீண்டும் மீண்டும் நச்சரித்துக் கேட்டுக் கொண்டிருந்தான் மச்சக்காரன்.

பூவரசுத் தோப்பில் மீண்டும் பரிவாரங்கள் கூடி இருந்தார்கள்.

குலசேகரன் வருவதைப் பார்த்ததும் பலர் ஓடிவந்து அவனைத் தழுவினார்கள்.

கூட்டத்தில் நுழைந்த குலசேகரன் நேராக அவன் குதிரையை அரங்கனது பல்லக்கு இருக்கும் இடம் நோக்கி இழுத்துப் போனான்.

அந்தி வழிபாட்டிற்காகப் பல்லக்கின் திரை திறந்திருந்தது. அரங்கன் மோகனமான ஒளியுடன் காட்சிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

அந்தக் காட்சியில் புளகித்த குலசேகரன், குதிரையை நிறுத்தி, "பெரியவரே! பெரியவரே! நீர் தேடிவந்த அரங்கரைப் பாரும்! சுரதாணியை ஆட்கொண்ட அழகிய மணவாளரைப் பாரும்!" என்று கூவினான்.

மச்சக்காரன் எழுந்திராது தூங்குவதைப் பார்த்து, "பெரியவரே! பெரியவரே!" என்று அருகில் வந்து கூவினான்.

அதற்கும் அவன் எழுந்திராதபோது, அவனது உடலைத் தொட்டு உசுப்பும் வேளையில், உடல் மறுபுறமாகச் சாய்ந்து கீழே விழுந்தது.



குலசேகரன் அதைத் தாங்கி எழுந்து கீழே பரப்பினான்.

மச்சக்காரன் புன்னகை புரிந்து கொண்டிருந்தான். அந்தப் புன்னகை மாறவே இல்லை. அரங்கனைப் பார்க்கப் போகிறோம் என்ற நினைவில் எழுந்த புன்னகை அது!

"பெரியவரே! பெரியவரே"

திடுக்கிட்டு கலக்கத்துடன் அவன் அருகே மண்டி இட்டு அமர்ந்தான் குலசேகரன்.

மச்சக்காரனின் கண் திறக்கவில்லை.

ஆனால் அவன் முகத்தில் தோன்றி இருந்த புன்னகை மட்டும் அப்படியே ஒரு குந்துமணி கூட மாறாமல் உறைந்துகிடந்தது.

அரங்கனைக் காண அமரர் உலகுக்கே சென்று இருந்தான் மச்சக்காரன்.

"பெரியவரே!" என்று அலறினான் குலசேகரன். அழுகை புடைத்துக் கொண்டு வந்தது.

அந்த அலறலில், அந்தக் குதிரை சிலிர்த்தது. அதன் உடலில் மச்சக்காரன் வாயிலிருந்து ஒழுகிய இரத்தம் ஒரு பெரிய கறையாக மெழுகியிருந்தது.

# 34

குலசேகரன் கண்களிலிருந்து குடம் குடமாய் நீர் வார்ந்தது. குழந்தைபோல் தேம்பி அழுதான். மச்சக்காரன் முகத்தைக் காணக்காண அவனது உள்ளம் குமுறி வந்தது.

"பெரியீர்காள்!" என்று எழுந்தான் அவன். "ஒரு நல்ல உயிரை அநியாயமாக இழந்தோமே! அரங்கன் மீது கரைகாணா விசுவாசம் கொண்டிருந்த ஒரு உத்தமரை மிக அநியாயமாக இழந்தோமே! பெரியீர்காள்! புறத்தைக் கண்டு நீங்கள் பலரும் இவரை வெறுத்தீர்கள்! இவரது அகத்தைக் கண்டு நான் மிகவும் நேசித்தேன். இவரது அகம், அரங்கன்மீது அடங்காக் காதலைக் கொண்டிருந்ததால் அல்லவோ, இங்கே நீங்களும் உங்கள் அரங்கனும், காக்கப்பட்டு இருக்கிறீர்கள்! அந்த நன்றிக் கடனைக் காலங்கடந்து அல்லவா நீங்கள் உணர்ந்திருக்கிறீர்கள்! உண்மையில் இவர்தான் அரங்க பக்தரா? அல்லது நாமெல்லாரும் பக்தர்களா? கூறுங்கள்!" என்றான்.

எல்லாரும் வாயடைத்து மௌனம் சாதித்தார்கள்.

அப்போது கூட்டத்தின் இரு வரிசைக்கும் நடுவே குறளன் மெள்ள நடந்து வந்தான்.

நேராக குலசேகரன் அருகில் சென்று, "சுவாமி! என்னைப் பொறுத்தருள வேண்டும்" என்று தழுதழுப்புடன் கூறினான்.

திரும்பிப் பார்த்த குலசேகரன் ஆத்திரம் அடைந்து, "குறளா! பொறுக்கவா சொல்கிறாய்?!.... பொறுக்கக் கூடிய காரியத்தையா செய்திருக்கிறாய்? அந்த உத்தமரை அடித்துக் கொன்றுவிட்டாய்? அவரது முதுகைப் பாளம்பாளமாகப் பிளந்துவிட்டாய். மூன்று தினங்களாக அவர் துடித்த துடிப்பை நானல்லவா அறிவேன்! அவ்வளவையும் சகித்துக் கொண்டு நம்மைக் காட்டிக் கொடுக்காமல் இருந்த அவர் ஒரு மகான்! ஒப்பில்லா அரங்க பக்தர்!" என்று கூறினான்.

குறளன் கண்களில் நீர் வழிந்தது.

"சுவாமி! அடியேன் நாயினும் மிகக் கடையேன். பெரிய அபசாரமான காரியத்தைச் செய்தேன். ஆழ்ந்து



யோசனை இல்லாமல் செய்துவிட்டேன். பொறுக்க வேண்டும்!" என்று கூறினான்.

"இப்போது சொல்லி என்ன பயன் குறளா? ஒரு வேளை அவருக்கு அரங்க தரிசனம் முன்னமேயே கிடைத்திருந்தால் பிழைத்திருப்பாரோ என்னவோ? அந்தப் பாக்கியம் கூட நிறைவேறாது போய்விட்டாரே! அவரை அநியாயமாகச் சாகடித்து விட்டாயே?" என்று புலம்பினான் குலசேகரன்.

குறளன் மெதுவாகப் பேசினான்.

"சுவாமி! நான் செய்தது தவறு. அதற்கு முழுமை யான பலனும் நான் அனுபவித்துவிட்டேன். சுவாமி!"

"என்ன அனுபவித்தாய்?"

குறளன் சட்டென்று முதுகைத் திருப்பினான். அதில் மொய்த்திருந்த ஈக்கள் விருட்டென்று பறக்க, முதுகின் மேற்பரப்பெல்லாம் இரணகளமாகத் தெரிந்தது.

குலசேகரன் திடுக்கிட்டான்.

"குறளா, ஏது இவை?"

"டில்லி வீரர்கள் கொடுத்த பரிசில் இவை. இந்த ஒவ்வொரு அடி விழும்போதும், மச்சக்காரருக்கு நான் கொடுத்த அடிகள் எனக்கு திருப்பி விழுகிறது என்று நினைத்தேன். நான் கொடுத்தது எனக்கே கிடைத்தும் விட்டது சுவாமி! தாங்கள் கூறியதைபோல் அவர் பெரிய மகான்தான்! இல்லாவிடில் இவ்வளவு சீக்கிரத்தில் எனக்கு இந்த மறு மரியாதைகள் கிடைத்திருக்காது" என்று கூறினான்.

அப்போது பரிசனத்தில் ஒருவர் வந்து, "ஐயா! தங்கள் இருவரையும் உலகாசிரியர் சுவாமி அழைக்கிறார்" என்று கூற இருவரும் புறப்பட்டார்கள்.

தோப்பின் ஒரு ஓரத்தில், துணியைத் திரையாகக் கட்டி மேலே ஒரு விதானம் அமைத்து, நடுவில் விரித்திருந்த கனமான பரிவட்டத்தின் மீது தள்ளாமையுடன் உலகாசிரியர் படுத்திருந்தார்.

அவரது திருமேனி மிக மெலிந்துபோயிருப்பதைக் கண்டு குலசேகரன் திடுக்கிட்டு நின்றான்.

அவர் அருகில் சென்று, தாழ வணங்கி, "சுவாமி! தங்கள் திருமேனி துரும்பாக இளைத்துவிட்டதே!" என்று கூறினான்.

சீடர்களின் கைகளைப் பிடித்து மெள்ள எழுந்த உலகாசிரியர் இருவரையும் குளிர நோக்கி, "பிள்ளைகாள்!" என்று மெள்ள விளித்தார்.

"நடந்ததை எல்லாம் கேள்விப்பட்டேன். எல்லாமே நம் நன்மைக்குத்தான் நடந்தது என்று தேறிக்கொள்ள வேண்டும்! இப்போது நமக்குச் சூழ்ந்துள்ள ஆபத்து வேளையில், நீங்கள் இருவரும் பூசல் செய்து கொள்ளக் கூடாது. ஒன்றாக இணைந்து காரியத்தில் இறங்க வேண்டும். அவ்விதம் உறுதி எடுத்துக் கொள்ளுங்கள்!" என்று கூறினார்.

குறளனும் குலசேகரனும் ஒருவரை ஒருவர் தயக்கத்துடன பார்த்தார்கள். இருவர் பார்வைகளும் சிறிது நேரம் ஒன்று சேர்ந்தன. உடனே தங்கள் பிணக்கை மறந்து இருவரும் கைகளைச் சேர்த்துக் கொண்டார்கள்.

சிறிது நேரத்தில் ஊர்வலத்தார் எல்லாரும் ஒன்று கூடி முடிவு எடுத்தார்கள். அதன்படி மச்சக்காரனுக்கு மிக மரியாதைகள் எல்லாம் கொடுத்து அவனது உடலை அதி சம்பிரமங்களுடன் ஒரு சுத்தமான இடத்தில் புதைத்தார்கள்.



நோய்வாய்ப்பட்டு இருந்த ஸ்ரீபாதந்தாங்கியை, அங்கே வேடவர் இருக்கையில் நோய் தீரும்வரை தங்குவதற்காக ஏற்பாடுகள் செய்தார்கள்.

பிறகு சுத்தி செய்வதற்கான சடங்குகளை எல்லாம் செய்தபிறகு, இரு நாழிகைக்கு அப்பால் பால் நிலவில் அரங்கனது ஊர்வலத்தை கிளப்பினார்கள்.

மிருதுவான காற்று வீச, வெள்ளியாய் விழுந்த நிலவொளி இடையே மெள்ள நடந்து சென்றார்கள் பரிவாரங்கள்.

துக்கம் நிரம்பியவனாய் இடையில் தேம்பியவாறு சென்றான் குலசேகரன். பல நாழிகை நடந்து, பாதி இரவு வந்ததும் ஒரு காட்டாற்றின் கரையில் அவர்கள் தண்டு இறங்கினார்கள்.

வேடுவர் தந்த புஞ்சை வர்க்கத் தானியங்களைக் கூழாக்கி அரங்கனுக்கு நிவேதனம் செய்து, பகிர்ந்து உண்ட பிறகு, அவரவர்கள் நிம்மதியாய்ப் படுக்கத் தொடங்கினார்கள்.

குலசேகரன் எதையும் உட்கொள்ளவில்லை. மனத்தில் பெரியதாக வியாகூலம் எழுந்ததால், காட்டாற்றுக் கரையின் கீழிறங்கி மணல்வெளியில் சென்று படுத்துக்கொண்டான்.

அவன் மனத்தில் ஒரு விரக்தி ஏற்பட்டிருந்தது.

ஏற்கெனவே தாயின் பிரிவால் அவ்வப்போது மனம் புழுங்குபவன் அவன். இப்போது அந்தத் துயரத்திற்கு அடுத்தபடியாக மச்சக்காரனின் மரணமும் வந்து சேர்ந்திருந்தது.

குறைந்த காலத்திற்குள் அவனிடம் மனம்விட்டுப் பழகியிருந்தான் குலசேகரன்.

மச்சக்காரனின் தூயதான வெள்ளை மனம் அவனைப் பெரிதும் ஈர்த்திருந்தது.

தோற்றத்தில் சாதாரண ஆள்போல் காட்டிக் கொண்டு, உள்ளத்தில் ஒரு யோகியாகவே வாழ்ந்து இருக்கிறான் மச்சக்காரன்.

மனத்தில் பகவானது பிரேமையை அளவிறந்ததாய் வளர்த்திருக்கிறான்.

அந்தப் பிரேமை சக்தி மட்டும் அவனை ஆட்கொண்டிராவிட்டால், அவன் மீது விழுந்த அடிகளை அவனால் அவ்வளவு உதாசீனத்துடன் தாங்கியிருக்க முடியாது.

அப்படிப்பட்ட பரமபக்த சிகாமணியாய் விளங்கிய மச்சக்காரன் திடீரென்று மறைந்து போனது, அவனது மனத்தில் பெரும் சூன்யத்தை விதைத்துவிட்டிருந்தது.

ஆற்று மணலில் புரண்டு நெடுநேரம் கண்ணீர் விட்ட குலசேகரன், மெள்ளத் தன்னை அறியாது தூங்கிவிட்டான்.

**தூ**க்கத்தில் பல கனவுகள் கொந்தளித்து வந்தன. அவற்றில் ஒன்று அவனைத் தீவிரமாகப் பற்றிக் கொண்டது.

ஒரு பெரிய கூடையைத் தலையில் தூக்கிக் கொண்டு அவன் நடந்து கொண்டிருக்கிறான்.

கூடைக்குள் மச்சக்காரனின் உடல் துவண்டு கிடக்கிறது.

அவன் அந்தப் பாரத்தைத் தூக்கிக்கொண்டு காட்டாற்றின் கரைக்கு வந்திருக்கிறான்.

கீழே கூடையை இறக்கி, உடலைத் தகனம் செய்ய வேண்டும் என்று நினைத்து உதவிக்காக ஆளைத் தேடுகிறான். அந்நிலையில், "ஆர்ய" என்ற மதுரமான ஒரு குரல் அவனை அழைக்கிறது.



புன்னகை வீச, கண்களிலிருந்து குளிர் பார்வை வீழ அவன் முன்னால் மிக அடக்கமாக ஹேமலேகா நின்று கொண்டிருக்கிறாள்.

"ஹேமலேகா!" என்று அவன் மெல்ல அழைக்க, "சுவாமி!" என்று குரல் கொடுக்கிறாள் அவள்.

"சுவாமி" என்ற அந்தக் குரல் வரவர வெகு சுத்தமாகவே கேட்க, கண்ணைத் திறந்து பார்த்தக்கால், எதிரே ஹேமலேகாவே அமர்ந்திருப்பது கண்டு திடுக்கிட்டான்.

கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்தபோது, அது ஹேமலேகா அல்ல, வாசந்திகா என்று தெரியவந்தது.

"சுவாமி! உணவு ஏதும் அருந்தாமல் வந்து விட்டீர்களே! அது எனக்குப் பொறுக்கவில்லை. ஆகவேதான் வந்திருக்கிறேன்" என்று கூறி ஒரு பனை ஓலைத் தொன்னையில் கொண்டு வந்திருந்த கூழை அவனிடம் நீட்டினாள் வாசந்திகா.

கனவில் கடைசிச் சிதறல்கள் அவன் மீது படிந்திருந்த அவ்வேளையில் ஒவ்வோர் கணங்களில் வாசந்திகாவே அவனுக்கு ஹேமலேகாவாகத் தோன்றலானாள்.

ஹேமலேகாவே கூழைக் கொடுப்பதாகப் பாவித்து அதை ருசித்துப் பருகிவிட்டு, "மிக்க நன்றி" என்று கூறிவிட்டு வாசந்திகாவைப் பல கணங்கள் அவன் பார்த்திருக்கலானான்.

அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. என்றைக்கோ எப்போதோ சந்தித்த ஒரு பெண்ணின் நினைவு இப்படித் தனிமையாய் இருக்கும் வேளையிலெல்லாம் வந்து சேருகிறதே என்று நினைத்தான்.

'ஹேமலேகா; அவள் எப்படி இருப்பாள்? அவள் உருவம் கூட அவ்வளவு நினைவில் இல்லையே!

இவளைப் (வாசந்திகா) போல இருப்பாளா? இவளது விழிகளைப் போல் அவள் விழி இருக்குமா? இவளது வதனம் போல் அவளது வதனம் இருக்குமா?'

இந்த உவமைகளை நினைத்து வாசந்திகாவை அடிக்கடி அவன் பார்த்துக் கொண்டே இருக்க, வாசந்திகாவும் அவன் செய்கைகளைக் கண்டு, 'என் மீது இவர் மையல் கொண்டிருக்கிறார்' என்று எண்ணி மனத்தில் மிகவும் அகமகிழ்ந்திருக்கலானாள்.

அந்த நிலை சிறிது நேரமே நீடித்திருக்க, குலசேகரனின் நினைவு மெள்ள மெள்ள அவனை நிஜ உலகத்திற்கு இழுத்து வந்தது. அவன் தன் பார்வையை உடனே வாசந்திகாவிலிருந்தும் திருப்பி வேறு திசையில் செலுத்தலானான்.

அச்சமயத்தில் மனத்தில் பூரணமாக நிரம்பி இருந்த வாசந்திகா, பெருமூச்சுவிட்டு, குலசேகரன் பார்த்த திசையைத் தானும் பார்த்து, "இந்த நிலவொளியில் அந்தத் தோப்பின் இலைகள் கூட மினுமினுக்கவில்லையா?" என்று கேட்டாள்.

"ம்" என்றான் குலசேகரன்.

"அதோ, அந்தப் பாறை கூட மினுமினுக்கிறதே, பாருங்கள்!"

"ம்"

"எனக்கு இது புது ஆனந்தமாக இருக்கிறது. நகரத்தின் சூழ்புறத்திலேயே எப்போதும் நிலவைப் பார்த்திருக்கிற நான், ஒரு பரந்த வெளியில், சுத்தமான காற்றிடையே, அமைதியின் மடியிலே நிலவு பாலாக வழிந்தோடுவதைப் பார்க்கிறேன்."

"ம்"



"இந்தப் பெரும் மணற்பரப்பில் இந்த நிலா வழிவதைப் பார்த்தால், பால் ஆழியே வந்து இங்கே கிடப்பது போல் இருக்கிறது."

"ம்."

"இந்தப் பாலாழியின் மத்தியில், அதோ அந்தப் பாறையைப் பார்த்தால், நம் பரமன் இங்கே அரவின் மீது பையத் துயின்று கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது."

இதுவரை சுவை இல்லாமல் 'உம்' கொட்டிக் கொண்டிருந்த குலசேகரன், சிறிது ஆச்சரியப்பட்டு, வாசந்திகா கூறுவதில் பொருள் இருப்பதை உணர்ந்து அர்த்தத்தோடு 'உம்' கொட்டினான்.

"இந்தக் காட்சியைக் கண்டால் நம்மாழ்வார் பாசுரம் தான் என் மனத்தில் மிதந்து வருகிறது. அதற்கு நான் எத்தனையோ முறை அபிநயம் பிடித்தும் சலியாது இருந்திருக்கிறேன்" என்றாள்.

"எந்த பாசுரம் அது?"

"பால் ஆழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்
கால்ஆழும் 'நெஞ்சழியும்' கண்சுழலும்-நீல் ஆழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினை எம்பால் கடியும்
நீதியாய்! நின் சார்ந்து நின்று."

நிலவின் ஒரே ஒரு ரேகை மட்டும் காற்றில் ஆடுவது போன்று அவளது மெல்லிய குரல் நூல் இழையாகப் பாடிப்பறந்துவர அதற்கு ஏற்ப அபிநயம் பிடித்தாள் அவள்.

பாசுரத்தின் அற்புதமான சொல்லழகுகள், அவளது மன நிலைக்கு ஏற்பனவாய் அமைந்ததால், அவள்



அற்புதமாய் அபிநயம் பிடித்து, அந்த ஆற்றின் கரையில் மிக மனோகரமான காட்சி ஒன்றை ஏற்படுத்திக் கொண்டிருந்தாள்.

குலசேகரனது துயருற்ற மனத்திற்கு அந்தப் பாசுரமும் அபிநயங்களும் இதம் தரும் பெருமருந்தாய் அன்று வாய்த்தன.

அபிநயம் முடிந்து விடைபெற்ற அவள் புறப்பட்டு ஊர்வலப் பகுதியை அடைந்த போது வாசந்திகாவின் இதயம் பூரணமாக நிரம்பி இருந்தது.

மறுநாள் காலையில், பிள்ளை உலகாசிரியரின் நோய் அதிகமாயிருந்தது. அதைக் கேள்விப்பட்ட பரிவாரங்கள் எல்லாரும் அவரது துணிக் கூடாரத்தைக் கவலையோடு சூழ்ந்து கொண்டார்கள். பலர் அவரைப் பார்த்ததும் கண்ணீர் விடலானார்கள்.

# 35

**வை**ணவ ஆசிரியர் வரிசையில் வந்தவர்களில் 'நம்பிள்ளை' என்பார் ஒருவர். அவருக்கு 'வடக்குத் திருவீதிப் பிள்ளை' என்று ஒரு சீடர் இருந்தார்.

அந்தச் சீடருக்கு இல்லறத்தில் பற்றில்லாமல் இருந்தது. அதைப்பார்த்த அவரது தாயாரான அம்மி அம்மாள் ஒரு நாள் ஆசிரியர் நம்பிள்ளையை அணுகினாள்.

"சுவாமி! தங்கள் சீடனான என் குமாரனுக்குத் தாங்கள்தானே திருமணம் நடத்தி வைத்தீர்கள். அப்படியிருக்க மனைவியோடு அவன் இல்வாழ்க்கை நடத்த மறுத்து வருகிறானே. அதனால் எம் வம்சத்திற்குக் குழந்தை இல்லாமல் போய்விடுமே!" என்று கூறி வருந்தினாள்.

நம்பிள்ளையும் உடனே அந்த அம்மாளைத் தேற்றி அவரது மணாட்டுப் பெண்ணை*(திருவீதிப் பிள்ளையின் மனைவி) அழைத்து வரச் சொல்லி அந்தப் பெண் வந்ததும் அவளை ஆசீர்வதித்து அனுப்பிவிட்டார்.

பின்னர் அவர் திருவீதிப் பிள்ளையை அழைத்து, "பிள்ளாய்! உமது வைராக்கியத்தை நாம் உணர்ந்தோம். எனினும் உலக வழக்குக்காக இன்று இரவிலாவது உமது மனைவியுடன் கூடி இருந்துவிட்டு வாரும்" என்று கூறி அனுப்பினார்.

குருவின் ஆணைப்படி திருவீதிப் பிள்ளையும் தன் மனைவியாருடன் இரவு கூடியிருக்க, அதன் விளைவாகப் பிறந்த திருக்குமாரர்தான் பிள்ளை உலகாசிரியர் என்பார்.

நம் கதை நிகழும் காலத்தில் பிள்ளை உலகாசிரியர் தமது அறுபதாவது பிராயத்தை நெருங்கிக் கொண்டு இருந்தார்.

வைணவம் தழைக்க அருந்தொண்டுகள் புரிந்த அவர் அந்தச் சமயத்தை நிலை நிறுத்துவதற்காகப் 'பதினெட்டு ரகசியங்கள்' எனும் நூலை வடித்துள்ளார்.

அவற்றுள் சூத்திரங்களாக உள்ள 'ஸ்ரீ வசன பூஷணம்' என்னும் நூல் மிகவும் பிரசித்தி பெற்றது. இந்நூலுக்கு பலரும் வியாக்கியானங்கள் எழுதி உள்ளார்கள். இந்நாளிலும் எழுதி வருகிறார்கள்.*

இத்தகைய புகழ் பெற்ற உலகாசிரியர் இல்லறம் ஏற்றுக் கொள்ளாது கடைசிவரை பிரம்மச்சாரியாகவே

* மணாட்டுப் பெண் - இந்த வார்த்தையின் மறுவல் தான் நாட்டுப் பெண், மாட்டுப் பெண் என்பவை என்று கூறுவார்கள்.

* இந்நூல் ஒரு அமெரிக்கரால் ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.



வாழ்ந்து வந்தார். வாழ்க்கையில் பலவித மேடு பள்ளங்களைக் கண்ட அவர், தம் முதிய பருவத்தில் நாட்டில் ஏற்பட்டிருந்த பல குழப்பங்களையும் தாங்க வேண்டிவந்தது.

கதை நிகழும் வேளையில் பலவீனத்தாலும் தளர்ச்சியாலும் உடல் நலம் குன்றியிருந்த அவர், அன்றைய நாள் காலையில் மயக்கம் அடைந்திருந்தார்.

அவரது சீடர்களும், இதர பரிவாரங்களும் அவரைக் கவலையோடு சூழ்ந்து கொண்டு மௌனமாகக் கண்ணீர் வடித்து நின்றார்கள்.

பின்னர் அவர்களில் பலர் வெளியே வந்து ஆலோசனை நடத்தினார்கள். ஆற்றின் கரையோரத்தில் இருப்பதாலும், பல வழிகள் கூடும் இடத்தில் இருப்பதாலும் அந்தப் பிரதேசத்தில் இனித் தங்கி இருப்பது சரியல்ல என்று தீர்மானித்தார்கள்.

ஆகவே உலகாசிரியரை டோலாவில் படுக்க வைத்து மிக மெதுவாக அதை எழுந்தருளிக் கொண்டு போக வேண்டும் என்று முடிவு செய்தார்கள். அதன்படி வெகு சீக்கிரமே ஊர்வலத்தைக் கிளப்பினார்கள்.

மறுநாள் காலையில் ஒரு சோலையில் தண்டு இறங்கி இருந்தபோது ஆசிரியருக்கு நினைவு வந்தது. ஒரு நாழிகையில் மெதுவாகப் பேச ஆரம்பித்தார். அப்போது மிகவும் பிடித்தமான சீடர் 'விளாஞ்சோலைப் பிள்ளை'* என்பார் ஆசிரியர் முன்னால் நின்று சிறிது நேரம் கண்ணீர் உகுத்துக் குலுங்கி அழுதார்.

அவரைக் குளிர நோக்கிய பிள்ளை உலகாசிரியர், "பிள்ளாய், அழுகிறபடி என்?" என்று கேட்டார்.

* பிள்ளை உலகாசிரியர் ஒரு அந்தணர். அவருக்கு மிகப் பிரியமான சீடரான விளாஞ்சோலைப் பிள்ளை என்பார் ஒரு அரிசனர்.

"சுவாமி! சுவர்க்க பூமி போன்ற திருவரங்கம் பாழ்பட்டுக்கிடக்க, தாங்கள் இப்படி ஒரு காட்டில்வந்து நோவு சாத்திக் கொண்டீர்களே! இதெல்லாம் லீலையா, அல்லது விதியா, அடியோங்கள் அறிந்தோமில்லையே!" என்று கூறினார்.



உடனே உலகாசிரியரும், "பிள்ளாய்! பக்தனாக இருந்தால் யாவற்றையும் லீலையாகக் கொள்வதன்றோ உத்தமமானது? அப்படி நோக்கினால்தானே நமது துயரங்களோ, துக்கங்களோ இலகுவாகக் காற்றில் பறந்து போகின்றன? நம் பெருமாள் திருவரங்கர் இத்தனை நாளும் அரங்கத்திலேயே இருந்து வந்தார். இன்று நாட்டைச் சுற்றிப் பார்க்க உலா போகிறார். இது 'திருவரங்கன் உலா!'. இந்த அற்புதமான உலாவில் நாமெல்லாரும் பங்கெடுத்திருக்கிறோம். இது நமது பாக்கியம். இதை பகவானது லீலையாகக் கொள்ள வேண்டுமேயன்றி வேறு ஏதாகவும் கொள்ளக்கூடாது" என்று கூறினார்.



அவர் திருவாய் மலர்ந்து கூறியதை எல்லாம் சீடர்கள் மனத்தில் ஆழமாகத் தேக்கிக் கொள்ள, நாலூர்ப் பிள்ளை என்பார் உடனே, "சுவாமி! இப்படிச் சோதனை ஏற்பட்டுக் காடுகளில் உலாவும் வேளையில் பகவான் மீதுள்ள வாஞ்சை எம் போன்றோருக்குக் குறைய வழி இல்லையோ!" என்று கேட்டார்.

உடனே ஆசிரியரும், "பிள்ளாய்! கேவல நாஸ்திகனைத் திருத்தலாம். ஆஸ்திக நாஸ்திகனை ஒரு நாளும் திருத்த ஒண்ணாது.* பகவான் மீது பாரத்தை போட்டுச் சரணாகதி அடைந்தவர்களுக்கு, எந்தத் துயரமும் ஒரு பொருட்டாக இருக்கக் கூடாது. அப்படி இருந்தால் அவர்கள்தான் ஆஸ்திக நாஸ்திகர் ஆவார்! அப்படி இருப்பதை விட அவர்கள் நாஸ்திகராக இருப்பதே மேல்!" என்று கூறினார்.

* உலகாசிரியரே ஸ்ரீவசன பூஷணத்தில் அருளியுள்ள இரு வாக்கியங்கள் இவை.







மறுநாள் காலையில் ஊர்வலம் காட்டுக்குள் புகுந்து மெதுவாகச் செல்லும் வேளையில் முப்பது நாற்பது கள்வர்கள் கும்பலாக வந்து ஊர்வலத்தைச் சூழ்ந்து கொண்டார்கள்.

பரிவாரங்களின் மூட்டை முடிச்சுகளில் வெறும் புஞ்சைத் தானியங்களே இருப்பதையும், பல்லக்கில் திருவரங்கன் இருப்பதையும் கண்டு திடுக்கிட்டு கள்வர் தலைவன் ஊர்வலத்தாரிடம் விசாரணை நடத்த, சீக்கிரமே அவனுக்கு எல்லா விருத்தாந்தங்களும் தெரியவந்தன.

திருவரங்கப் பெருமாளுக்கு இப்படி ஒரு கதி நேர்ந்ததே என்று எண்ணி வருந்திய அவன், தன் சகாக்கள் கொண்டு வந்துள்ள பொதிகளைத் திறந்து, நிறையக் காசுகளையும் நகைகளையும் வாரியெடுத்து ஒரு பெரிய தட்டத்தில் இட்டு அவற்றை உலகாசிரியர் முன் காணிக்கையாக நீட்டினான். உலகாசிரியர் அதை வாங்கமறுத்தார்.

கள்வர் தலைவன் பலமுறை கெஞ்சிப் பார்த்தும் உலகாசிரியர் அவற்றை ஏற்றுக் கொள்ளச் சம்மதிக்க வில்லை.

அப்போது கள்வர் தலைவர், "சுவாமி! பரிவாரங்களின் வழிநடைச் செலவுக்குக் கூடத் தங்களிடம் ஏதும் இல்லையே! ஆகவே இவற்றை ஏற்கலாகாதோ?" என்று மீண்டும் தழைத்து கூற, உலகாசிரியர், "அப்பா! பட்டினி கிடந்து இறந்தாலும் இறப்போமே அன்றி இந்தச் சொத்துக்களைத் தொடமாட்டோம்" என்று கூறினார்.

கள்வர் தலைவன் வாழ்க்கையில் பட்ட முதல் அடி அது.

"அப்பா உன் சொத்துக்களை சேர்! அப்போது வாங்கிக் கொள்கிறோம்!" என்று கூறிவிட்டு ஊர்வலத் தாரை நகரும்படிக் கட்டளையிட்டார் உலகாசிரியர்.

ஆசிரியரின் டோலா மேலே எழுந்தபோது, கள்வர் தலைவன் ஓடிவந்து, "சுவாமி! இவை என் சொத்துக்கள் இல்லாவிட்டால் வேறு எங்கே தான் இருக்கின்றன?" என்று கேட்க, "உன் நாவில் இருக்கிறதப்பா அது! ரங்க ரங்கா என்று சொல்லிக் கொண்டே இரு! சொத்துக்கள் சேர்ந்து கொண்டே வரும்!" என்று மறுமொழி கூறிய உலகாசிரியர் அவனுக்கு இரு துளவங்களைக் கொடுத்து விட்டு ஊர்வலத்தை மேலே போகச் சொன்னார்.

**ஊ**ர்வலம் மேலே செல்லும்போது குலசேகரன் ஊர்வலத்தார் ஒவ்வொருவரையும் பார்த்துக் கொண்டு நடந்து, தனக்குள்ளேயே அதிசயம் அடைந்து கொண்டிருந்தான்.

ஏனெனில் கள்வர் கூட்டம் வந்தபோது வாசந்திகா என்ன ஆனாள் என்ற பெரிய ஆர்வம் அவன் மனத்தில் எழுந்திருந்தது?

அவளை இப்போது கூட்டத்தில் தேடியும் காணவில்லை. எங்கே போயிருப்பாள் என்று அவன் நினைக்கும் வேளையில், "சுவாமி!" என்று ஒரு குரல் கேட்டது.

பாகை தரித்து, உத்தரியம் போர்த்திய ஊர்வலத்தார் ஒருவர் அவன் முன் வந்து நின்றார்.

குலசேகரன் அவரை உற்றுப் பார்க்கவே அவர் கலகலவென்று சிரித்து வாசந்திகா ஆனாள்.

"பிரமாதம் வாசந்திகா! இந்த வேடத்திலேயா இருக்கிறாய்?" என்றான் குலசேகரன்.

"ஆமாம் சுவாமி! காட்டில் எப்போது நுழைந்து விட்டோமோ அப்போதே நான் வேடம் மாற்றி விட்டேன். இல்லாவிடில் எத்தனையோவித ஆபத்துக் களைச் சமாளிக்க முடியுமா?" என்று கேட்டாள் அவள்.



உடனே குலசேகரன், "வாசந்திகா! உன்னிடம் ஒன்று கேட்க வேண்டும்! என்னையும் மச்சக்காரனையும் பார்த்துவரச் சொல்லித் திருக்கோட்டியூருக்கு ஒரு ஊர்வலக்காரரை அனுப்பி வைத்தது யார்? நீதானே!" என்று கேட்டான்.

"ஆமாம்! நான்தான் சுவாமி! உலகாசிரியரும் மற்ற பெரியவர்களும் டில்லி வீரர்களிடம் அகப்பட்டு விட்டார்கள் என்று தெரிந்த போது எனக்குத் தோன்றிய ஒரே தந்திரம் அது ஒன்றுதான்!" என்று கூறினாள்.

"அது சரி! மச்சக்காரர் நம்மைக் காப்பாற்றுவார் என்பதை நீ எப்படி எதிர்பார்க்கலாம்?" என்று கேட்டான் குலசேகரன்.

"சுவாமி!" என்றாள் வாசந்திகா, "அத்தகைய நல்லவர் அவர் இல்லை என்றால் தாங்கள் அவர் மீது அவ்வளவு அக்கறை கொண்டிருக்க மாட்டீர்கள். ஒரு நட்புக்காக அரங்கன் ஊர்வலத்தையே துறக்க நினைத்தீர்கள். அதிலிருந்து புரிந்து கொண்டேன் அந்த நண்பரின் பெருமையை!" என்று கூறிவிட்டுப் பிறகு, தன் மைவிழிகளை அகல விரித்து, "நான் குறளன் அல்ல சுவாமி!" என்றாள்.

அந்தக் கடைசி வார்த்தைகளின் அழுத்தத்தைக் கண்ட குலசேகரன் வியப்புற்று அவளைப் பார்த்தான்.

அவளது கண்களுக்குள்ளே வெகு தூரத்தில் தெரிந்த மாய ஒளி ஒன்று அவனுக்கு வெகு வசீகரமாய்த் தோன்றியது.

சில கணங்கள் அவன் யோசிக்கும் போது வாசந்திகா, "சுவாமி! தங்களால் என்னை விரட்டத்தான் முடிந்தது. ஆனால் என்னால் தங்களை அழைக்க முடிந்தது. அது என் மனப் பக்குவம்" என்றாள்.

அவள் அவ்வளவு திறமையுடன் பேச முடியும் என்பதை அறிந்திராத குலசேகரன் அதிசயித்து, "அப்படி என்னை அழைத்துவர விரும்பிய காரணம் என்னவோ?" என்று கேட்டான்.

உடனே நெட்டுயிர்ப்பாக ஒரு மூச்சுவிட்ட வாசந்திகா, அவனை வெட்டும் விழிகளால் ஒரு முறை பார்த்துவிட்டு, "சுவாமி, திருவரங்கருக்கு நாம் ஏன் அமுது படைக்கிறோம்?" என்று கேட்டாள்.

குலசேகரன் யோசித்தான். "தெரியாது வாசந்திகா!" என்றான்.

"நாம் கடவுளுக்குப் படைத்தாலும் அதை எல்லாருக்கும் கொடுப்பது அவர்கள் உண்பித்து மகிழ்வதற்காகத்தான்!"

"உம்!"

"அதுபோல் கடவுளுக்கு நான் சேவை செய்து உகப்பிப்பதெல்லாம் அது மற்றவர்களுக்காகத்தான்!"

"அப்படியா?"

"ஆமாம்! நான் நாட்டியம் ஆடி அரங்கரை உகப்பிக்கும்போது முக்கியமாக மற்றவர்களையே உகப்பிக்கிறேன்!"

"உம்!"

"மற்றவர்கள் என்றால் எல்லோரும் என்று பொருள் இருந்தாலும் சிலர் உகந்தால்தான் நான் அதில் திருப்தி அடைகிறேன். அந்தச் சிலரிலும் ஒருவர் உகந்தால் நான் உணர்ச்சிக் கடலில் ஆழ்கிறேன்!" என்று கூறி அவனை ஆழ்ந்து பார்த்தாள் வாசந்திகா.



# 36

"ஒருவர் உகந்தால் உணர்ச்சிக் கடலில் ஆழ்கிறேன்" என்று வாசந்திகா கூறியவுடன் அவள் உள்மனம் அவனைக் கூவி அழைத்தது.

'வாசந்திகா! இப்படித் திறந்து பேசுகிறாயே! இப்படிப் பேசினால் நீ ஒரு எம்பெருமானடியாள் அதனால்தான் வெட்கமில்லாமல் பேசுகிறாய் என்று நினைக்கமாட்டார்களா? ஆண்கள் தங்கள் மனதைக் காட்டாதவரையில் பேசாதே!' என்றது.

வாசந்திகாவின் உணர்ச்சிகள் படிப்படியாக இறங்கின.

குலசேகரன் ஏதாவது சொல்வானா என்று அவள் எதிர்பார்த்தாள்.

அவனும் அவளைத் திரும்பிப் பார்த்து, "சிலர் என்பது யார்? ஒருவர் என்பது யார், வாசந்திகா?" என்று கேட்டான்.

"எனக்குச் சொல்லத் தெரியவில்லை" என்றாள் அவள்.

குலசேகரனுக்குப் புன்னகைத் தோன்றியது. அவளது பேச்சில் ஒரு குழந்தைத்தனத்தைக் கண்டு அதை அவன் ஹாஸ்யமாக எடுத்துக் கொள்வது போலிருந்தது. வாசந்திகா அதற்குமேல் பேசவில்லை. மௌனமாகவே நடந்து சென்றாள். அவள் கண்களில் மட்டும் ஈரம் கசிந்தது.

அன்றும், அதற்கு மறுநாளும் ஊர்வலத்தார் இடையறாது பிரயாணம் செய்தார்கள். மூன்றாம் நாளில்

பிள்ளை உலகாசிரியரின் உடல்நிலை மோசமாகியது. இனியும் காட்டு மார்க்கத்தில் போவது சரியல்ல என்று உணர்ந்த ஊர்வலத்தார் அருகில் தென்பட்ட ஜோதிஷ்குடி* என்ற ஊரைத் தேர்ந்தெடுத்து அதன் சோலைக்குள் தங்கினார்கள்.

உலகாசிரியருக்கு நினைவு அடிக்கடி மயங்கியது. அவர்களது சீடர்களான விளாஞ்சோலைப் பிள்ளை, கூர குலோத்தமதாச நாயனார், திருக்கண்ணங்குடிப் பிள்ளை, திருப்புட்குழி ஜீயர், நாலூர்ப்பிள்ளை ஆகியோர் கவலையுடன் அவர் பக்கலிலேயே இருந்தார்கள்.

அன்று மாலையில் ஆசிரியர் தம் கண்களை மெள்ளத் திறந்தார்.

தமது சீடர்களைக் குளிர நோக்கி, "நீங்கள் ஏன் வருந்துகிறீர்கள்? 'ஓயும் மூப்பும் பிறப்பு இறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திருவேங்கடத்து ஆயன்!' என்று திருவாய் மொழியில் கண்டிருக்கவில்லையோ! 'திருவேங்கடத்தானே! புகல் ஒன்றில்லா அடியேன்.' 'இக்கறை ஏறி இளைத்திருந்தேன்.' 'இனி நான் போக வொட்டேன்!' என்று பகவானைத் தடுத்தும் வளைத்தும் நிறுத்தியல்லவா நம் ஆழ்வார்கள் பாடியுள்ளார்கள்? அவ்விதம் பகவானை அணைத்து நிறுத்தி அவனையே சரணடைந்த பிறகு நமக்கு கவலை இருக்கலாமோ?" என்று கேட்டார்.

பின்னர் அவர்களுக்குப் பலவித உபதேசங்களை அருளி, அவரவர் வாழ வேண்டிய நெறிமுறைகளையும் கூறினார். ஒரு நாழிகைக்குப் பிறகு அவர் மௌன மானார். பார்வை மூடிக் கொண்டே வந்தது. அவரது திருநாவு புரண்டு துவய மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே வர, பிறகு அரை நாழிகையில் பிள்ளை உலகாசிரியர் திருநாட்டுக்கு* எழுந்தருளினார்.

* ஜோதிஷ்குடி – தற்காலத்து காளையார் கோவில்.

* திருநாட்டுக்கு – மரணம் எய்தினர் .



அன்றைய தினம் ஆனி மாதம் வளர்பிறையில் பன்னிரண்டாம் நாள் ஆகும். அவர் மறைவைக் கண்டு சீடர்களும் பெரியவர்களும் வேரற்ற மரம் போல் சாய்ந்து, பேச்சு மூச்சற்று வெகுநேரம் கிடந்தார்கள்.

பிறகு, எல்லோரும் தேறி எழுந்து, உலகாசிரியரின் திருமேனிக்கு அரங்கனின் திருமாலை, திருப்பரிவட்டங் களை எல்லாம் சாத்தி, விதிமுறைகள் பிறழாமல் கிரியைகளை எல்லாம் செய்து முடித்தார்கள்.

இவ்விதம் ஊர்வலத்தில் நடுச்சோதியாகத் திகழ்ந்த பேரொளி அணைந்து போயிற்று.

பிறகு ஊர்வலத்தார் ஜோதிஷ்குடியில் ஒரு மாதம் தங்கி உலகாசிரியருக்கான மற்றையக் கிரியைகளை எல்லாம் குறைவற நடத்தினார்கள்.

பிறகு, அவ்வூரைவிட்டுப் புறப்படும் வேளையில் குறளன், குலசேகரனிடம் வந்து, "சுவாமி! இனி எங்கே போவோம்? எங்கே தங்குவோம்? எதுவும் புரியவில்லையே!" என்றான்.

உடனே மற்றொரு பெரியவர், "சுவாமி! அரிசி கிடைப்பது கஷ்டமாகி விட்டதே! இனி என் செய்வோம்?" என்று கூறினார்.

மற்றொருவர், "பெரியவர்களே! திருவரங்கத்தை விட்டுப் புறப்பட்டபோது, சீக்கிரமே திரும்பி வருவோம் என்று எண்ணினோம். ஆனால் முடியவில்லை. டில்லி வீரர்கள் எல்லா நகரங்களையும் கிராமங்களையும் சூறையாடுகிறார்கள். இந்நிலையில் நாம் இப்படி ஊர்வலமாகப் போவதைவிட, பாதுகாப்பான ஒரு இடத்தில் தங்குவது மேல்!" என்றார்.

"தெற்கே மதுரைக்குப் போகலாமே?" என்றார். ஒருவர்.



"நாம் ஏன் நெல்லைச் சீமைக்குப் போகக் கூடாது?" என்று கேட்டார் ஒருவர்.

இவ்விதம் பலரும் பலவிதமாகப் பேசிப் பேசிக் கடைசியில் இராமேசுவரத்திற்கும் மதுரைச் சீமைக்கும் இடைவழியாகத் தெற்கே நோக்கிப் போவது என்று முடிவு செய்தார்கள்.

இரு நாட்கள் பயணம் செய்து மூன்றாம் நாள் போகும் போது, அவர்கள் எதிரே ஒரு சிவிகையும் அதைச் சுற்றிப் பெண் பரிவாரங்களும் வந்துகொண்டு இருப்பதைக் கண்டனர்.

அந்தப் பெண் பரிவாரத்தார் அரங்கன் ஊர்வலத் தாரை இன்னார் என்று விசாரித்து அறிந்த பிறகு சிவிகையிலிருந்து நடுத்தர வயதுள்ள ஒரு பெண்மணி கீழே இறங்கினாள்.

ஊர்வலத்தார் முன் நின்ற அவள், "பெரியவர்களே! என் பெயர் உலக முழுதுடையாள்! மதுரை அரசர் பராக்கிரம பாண்டியரின் பட்டத்து ராணி! புயல்போல் டில்லியிலிருந்து வந்த வீரர்கள் எங்கள் மதுரை நகரை முற்றுகையிட்டார்கள். என் கணவர் தலைநகருக்குள் நின்று தைரியமாகச் சண்டையிட்டார். கடைசியில் அவருக்கும் துர்க்கதிதான் நேர்ந்தது" என்று கூறினாள்.

"என்ன நேர்ந்தது?" என்று ஊர்வலத்தார் பதட்டத் துடன் கேட்டார்கள்.

"டில்லிக்காரர்கள் எங்கள் கோட்டையைத் தகர்த்து, உள்ளே புகுந்து என் கணவரைச் சிறை செய்து டில்லிக்கு இழுத்துப் போய்விட்டார்கள்!" என்று கண்ணீர்ப் பெருக்குடன் கூறினாள் உலக முழுதுடையாள்.

பிறகு அவள், "பெரியவர்களே! நகரத்து ஜனங்கள் பெரும்பான்மையோர் ஓடிவிட்டார்கள். நாங்களும்

கஷ்டப்பட்டுத் தப்பித்து வந்து விட்டோம் வாணாதிராயன் சீமை நோக்கி நாங்கள் போய்க் கொண்டிருக்கிறோம். அதுதான் எங்களது புகலிடம்" என்றாள்.

பிறகு உலக முழுதுடையாள், அரங்க ஊர்வலத்தைப் பற்றி விசாரித்து விவரங்களைத் தெரிந்து கொண்டாள்.

உடனே கண்ணீர் வடித்த ராணியர், "பெரியவர்களே! நாட்டுக்கு இப்படி ஒரு கேடுகாலம் வரும் என்று எதிர்ப்பார்க்கவே இல்லை. கையில் இருந்த பொருள் களை எல்லாம் இழந்துவிட்டீர்கள். கேட்க வேதனையாக இருக்கிறது. இந்தாருங்கள்! இந்த அணிமணி ஆபரணங் களை எல்லாம் தருகிறேன். இவைகளை வைத்து வழிநடைச் செலவுகளை நடத்திக் கொள்ளுங்கள்!" என்று தன் உடம்பிலுள்ள நகைகளை எல்லாம் கழற்றி பின்னும் தன் பெட்டகத்திலிருந்தும் பலவற்றையும் எடுத்துப் பெரிய தாம்பாளம் ஒன்றில் வைத்து நீட்டினாள்.

அப்போது ஒரு பெரியவர், "மகாராணி! நாங்கள் அரச குலத்தோர் கொடுப்பதை உடன் ஏற்றுக் கொள்வது இல்லையே!" என்று கூறினார். உடன் அந்த அரசியார் அவரை நோக்கித் திரும்பி, "சுவாமி! இது கொள்ளை அடித்த பொருள் அல்ல! பரம்பரையாக வந்த எம் வம்சத்தவர் சொத்து! ஆகவே தாங்கள் தைரியமாக இதை ஏற்றுக் கொள்ளலாம்" என்றாள்.

ஊர்வலத்தாரும் மனமுவந்து அந்தக் காணிக்கை களை ஏற்றுக் கொள்ள, மகாராணி தன் பரிவாரங்களுடன் விடைபெற்று மேலே நகர்ந்து சென்றாள். மதியத்திற்கு மேல் அரங்கனின் ஊர்வலம் மீண்டும் புறப்பட்டது.

**நா**ன்காம் நாள் காலையில் ஊர்வலம் ஒரு சிற்றாற்றுப் படுகையின் வழியாகச் சென்று கொண்டு இருந்தது. அப்போது தூரத்தில் சலசலப்பு ஏற்படுவதைப்





பார்த்து எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள். ஆற்றின் உயரமான விளிம்பின் மேல் டில்லிக் குதிரை வீரர்கள் வந்து நிற்பதை பார்த்துத் திடுக்கிட்டார்கள்.

"ஓடுங்கள்! ஓடுங்கள்!" என்று பலரும் குரல் கொடுக்க பரிவாரங்கள் ஓட ஆரம்பித்தார்கள்.

அவர்கள் ஓடுவதைக் கண்டு கொண்ட டில்லிக் காரர்கள் ஆற்றுக்குள் இறங்க ஆரம்பித்தார்கள். எல்லாருக்கும் பீதி ஏற்பட்டுத் தலைதெறிக்க ஓடினார்கள். ஆனால் அரங்கனின் பல்லக்கு மட்டும் பின்தங்கிக் கொண்டிருந்தது.

கற்கள்மீதும் பாறைகள் மீதும் ஏறி இறங்க வேண்டி வந்ததால், பல்லக்கு விரைவாகச் செல்ல முடியவில்லை.

டில்லி வீரர்கள் இதற்குள் ஆற்றுக்குள் இறங்கி விட்டார்கள்.

அவர்கள் அரங்கன் பல்லக்கைப் பிடித்து விடுவார்கள் என்று உணர்ந்த குலசேகரன் அடுத்த கணம் உருவிய வாளோடு பல்லக்கை நோக்கிப் பாய்ந்தான்.

பல்லக்கை நிறுத்தச் சொல்லி, திருவரங்கனது விக்கிரகத்தைப் பீடத்தோடு இணைத்திருக்கும் ஏகாந்தக் கயிற்றை விருட் விருட்டென்று வாளால் அறுத்தான்.

அதேபோல் நாச்சியார்களின் பிணைப்புகளையும் துண்டாக்கி விட்டான்.

"பல்லக்கை விட்டுவிடுங்கள்!" என்று கூறி, ஸ்ரீபாதந் தாங்கிகள் இருவரிடம் ஆளுக்கு ஒரு நாச்சியாரைக் கொடுத்துவிட்டு, அரங்கன் விக்கிரகத்தை மட்டும் அவனே எடுத்துக் கொண்டு குதிரைமீது (மச்சக்காரனின் குதிரை) தாவி ஏறினான். அடுத்த கணம், மார்பில் அணைத்த அரங்க விக்கிரகத்துடன் அவன் பறக்க ஆரம்பித்தான்.

## முதல் பாகம் முற்றிற்று





# ஸ்ரீ வேணுகோபாலன்

மனதை உருக்கும் விதத்தில் ஏராளமான சிறுகதைகளும், நாவல்களும், வரலாற்றுப் புதினங்களும் எழுதி வரும் ஸ்ரீவேணுகோபாலன் (புஷ்பா தங்கதுரை) நெல்லை மாவட்டத்தைச் சேர்ந்தவர். ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் தொடர்ந்து எழுதி வருகிறார்.

இவருடைய பல கதைகள் இந்திய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இவரது நாடகமான "அமைச்சர் மதுரகவி"யைப் புகழ் பெற்ற டி.கே.எஸ். சகோதரர்கள் நடித்திருக்கிறார்கள்.

இவரது "ஊதாப்பூ கண் சிமிட்டுகிறது", "நந்தா என் நிலா", "லீனா மீனா ரீனா" (அந்த ஜூன் 18) ஆகிய நாவல்கள் திரைப்படங்களாக வந்துள்ளன. இவரது பல தொடர்கள் டி.வி. தடங்களில் வந்துள்ளன.

லக்ஷ்மிஸ்ரீ பதிப்பகம்
848, 91-வது தெரு,
13-வது செக்டார்,
கே.கே.நகர்,
சென்னை - 600 078.
Phone : 2372 3456 Cell: 3102 0345
E-mail: spushpa@vsnl.com